சௌமிய, ஆவணி 8 - 1969 ஆகஸ்டு. 24






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே





முன்னொரு காலத்தில்....
தியாகத் தீயில் குதிக்கத் தயார்!





இன்று...
சுய நலத்துக்காகத் தேசத்தைப் பாழடிக்கத் தயார்!



செல்வந்தர்களின் பணம்
ஏழைகளின் வோட்டு
PK
எக்காலத்திலும் ஏமாற்றிக் கொண்டே இருக்க முடியாது!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

மலர் 29 ✻ இதழ் 4



# இந்தியா — பாகிஸ்தான் தகராறு

சீனாவின் சக்தி வளர்ந்து வருகிறது. ஆசியாவிலிருந்து தன் படைகளை வாபஸ் பெறுவதென்றும் எதிர் காலத்தில் ராணுவ வகையில் அங்கு ஈடுபாடு கொள்வதில்லை என்றும் அமெரிக்கா முடிவு செய்துள்ளது. இந்த இரண்டின் காரணமாக வல்லரசுகளுக்கு இடையே கெடுபிடிப் போர் புது வகையில் உருவாகி யிருக்கிறது. இந்தியா — பாகிஸ்தான் தகராறுக்குத் தீர்வு காண்பது இதன் விளைவாக அவசியமாகிவிட்டது: அதற்கு இன்றைய சூழ்நிலை ஒரு வாய்ப்பு என்றும் கருதலாம். நமது வேற்றுமைகளைத் தீர்த்துக்கொள்வதற்கு இரு தேசங்களும் துணை புரியுமாறு நிக்ஸனையும் கோஸிகினையும் வேண்டிக் கொள்வது நல்லது. ஆனால் அது பழைய வழி. பிறரது உதவியைக் கேட்கையில் நாமாகவே என்ன முடியுமோ, அதைச் செய்தாக வேண்டும். அழிவு நிலை நெருங்கும் வரையில் பேசிக் கொண்டும் சர்ச்சை செய்து கொண்டும் இருக்கலாம்; அது பயன்படாது. இந்தியாவும் பாகிஸ்தானும் விவாதிக்க வேண்டிய விஷயங்களிலிருந்து காஷ்மீர் விஷயத்தைப் பாகிஸ்தான் விலக்கிவிடப் போவதில்லை. எனவே, காஷ்மீர்ப் பிரச்னைக்கு நாம் ஒரு தீர்வை உருவாக்க வேண்டும். அது இல்லாமல் அதிகாரிகளோ மந்திரிகளோ எவ்வளவுதான் கூடிப் பேசினாலும் பயனில்லை. பெருந் தீங்கை விளைவிக்கிற ஆயுதப் போட்டியினின்றும் திவாலாகிவிடும் நிலைமையை நோக்கி விரைவதினின்றும் விமோசனம் கிட்டாது. கடன்கள் வளர்ந்து கொண்டே போகும். வரிப்பளு அதிகரித்துக் கொண்டே செல்லும். இரண்டுமாகச் சேர்ந்து நம்மிரு நாடுகளையும் படுகுழியில் தள்ளிவிடும்.

பாகிஸ்தான் இந்தியாவை விடச் சிறிய தேசம். எனவே சர்வதேச உதவியானது எப்பொழுதுமே பாகிஸ்தானுக்குத்தான் அதிக சாதகமாக இருக்கும். ஆனால் இது என்னுடைய வாதத்துக்கு முக்கியமானதல்ல. எவ்வளவு சிந்தித்துப் பார்த்தாலும், ஏற்கனவே சர்க்காருக்கும் மக்களுக்கும் நான் கூறியுள்ள ஒரே யோசனைதான், தீர்வு காண்பதற்கு உகந்தது. (தாற்காலிகமாகக் காச்மீரத்தை ருஷ்ய-அமெரிக்கத் தர்மகர்த்தா மேற்பார்வையில் வைத்துக் காச்மீரத்தில் அமைதிநிலை ஏற்பட்டபின் உரிய சமயத்தில் மக்கள் கருத்தை அறிந்து, அதன்படி எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டும் என்பதே இந்த யோசனை) அதுவே பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் பத்திரமானது. என் யோசனை நல்லதல்ல என்று சர்க்காரும் மக்களும் நினைக்கின்றனர். ஆனால் அதைத் தவிர வேறு நம்பகமான வழியில்லை. என் பிரேரணையை ஏற்க இயலாது போனால் கெட்ட எண்ணம், தகராறு, வசதிகளை வீணடிப்பது, நாசமளிக்கக் கூடிய வரிப்பளு ஆகியவை தான் ஏற்படும். என் கருத்தை ஏற்றுக் கொண்டால் நல்லெண்ணம் பெருகும். வசதிகளை வீணாக்காதபடி காக்கலாம். இந்தியா ஒப்புக் கொண்டால் பாகிஸ்தானும் ஒப்புக் கொள்ளும். இதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை.

சீனா — ரஷ்யா — அமெரிக்கா கெடுபிடிப் போர்ச் சூழ்நிலையில் என் பிரேரணை முன்னை விட அதிகப் பொருத்தமுள்ளதாகி விட்டது. வெற்றி வாய்ப்பும் அதற்கு அதிகம் உண்டு. விவகாரங்கள் தம் போக்கில் செல்லட்டும் என்று நாம் வாளாவிருக்க முடியாது. அப்படி இருந்தால் சீனாவுடன் பாகிஸ்தானின் நெருக்கம் வரவர அதிகமாக வளர்ந்து விடும். அந்தப் போக்கை மாற்ற முடியாத நிலைமையும் வந்துவிடக்கூடும். என் பிரேரணை விசித்திரமானது என்று சொல்லி, அதை நிராகரிப்பது சுலபம். 1947ல் காஷ்மீரை இந்தியாவுடன் மகாராஜா இணைத்தார். அப்படிக் கிடைத்த அந்தப் பகுதியை இரண்டு பெரிய வல்லரசுகளிடம் தர்மகர்த்தாப் பொறுப்பாக ஒப்படைப்பதில்

அபாயங்கள் நிறைய உண்டு என்று பேசுவது சுலபம். அந்த வல்லரசுகள் காஷ்மீரைத் தமதாகவே ஆக்கிக் கொண்டு விடும் என்று பயப்படுவது வெறும் அபத்தம்.

சீனா சக்திவாய்ந்த வல்லரசு. பேராசை பிடித்தது. சர்வதேச விவகாரங்களின் புதிய போக்குக் காரணமாக என் பிரேரணை எவ்வளவு அவசியமானது என்பதை விளக்கத் தேவையில்லை. அவசியமற்ற பயங்களை மனத்திலிருந்து அகற்றிப் பேராபத்திலின்று நம் இரு தேசங்களையும் காப்பாற்றக் கூடிய உருப்படியான ஒரே வழியை மேற்கொள்வது முக்கியம்.

மக்களும் சர்க்காரும் அடியோடு இசைவு கூறாத நிலையில் என் யோசனையை வற்புறுத்துவதற்கு விசேஷ தைரியமும் துணிவும் தேவை. என் யோசனை மனப்பூர்வமான நம்பிக்கையிலின்று பிறந்தது. ஆகையால்தான் தேசப்பற்று தருகின்ற மன வலிமையுடன் என் யோசனையை வற்புறுத்துகிறேன்.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியதன் தமிழாக்கம்)

# ராஜாஜியின் கருத்துக்கள்

சர்க்கார்த் துறைத் தொழில்களின் நிர்வாகம் மிகவும் மோசமாக இருக்கிறது. இதனால் தொடர்ந்து பெரு நஷ்டம் ஏற்பட்டு வருகிறது. இந்தக் கேவலமான சூழ்நிலையில்தான் பாங்குகளை ஸ்ரீமதி இந்திரா காந்தி அரசுடைமை ஆக்கியிருக்கிறார். பிரான்ஸில் பாங்குகளை அரசுடைமையாக்கியது, நம் நிலைமைக்குப் பொருத்தமான உதாரணமல்ல. இந்தியாவில் செய்ய உத்தேசிப்பதை நியாயம் என்று காட்ட அதை உதாரணம் சொல்ல முடியாது. வளையல் செய்வதற்காகப் பொற் கொல்லரிடம் தங்கம் கொடுக்கிறோம். பொற்கொல்லர் வளையல் செய்து தராமல், தாம் கருணை மிகுந்தவர் என்றும், அதனால் அந்தத் தங்கத்தை விற்றுக் கஷ்டப்படும் ஏழைகளுக்குக் கடன் கொடுத்திருப்பதாகவும் சொன்னால் அதைச் சரி என்று அனுமதிப்போமா? அவர் செய்தது நம்பிக்கை மோசம். ஏழைகளிடம் அவருக்குக் கருணை இருந்தாலும் அவர் செய்தது குற்றம்.

பாங்குகளை அரசுடைமையாக்கிய திட்டத்தை 'ஸ்ரீமதி இந்திரா காந்தியின் கண் மூடிப் பாய்ச்சல்' என்று வருணித்து ஸ்ரீ அசோக் மேத்தா கண்டித்திருக்கிறார். இவ்விஷயத்தில் தீர்ப்புக் கூற அவருக்கு எல்லாத் தகுதிகளும் உண்டு.

பிறப்பு, கல்வி, வளர்ப்பு காரணமாகத் தாம் எப்பொழுதுமே ஏழைகளின் பக்கம்தான் என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி கூறுகிறார். இது கொஞ்சம் ஜம்பமான பேச்சு. செல்வந்தர்களிடையேயும் ஏழைகளை மட்டமாகப் பாராமல் எவ்வளவோ பேர் ஏழைப் பங்காளர்களாக இருக்கிறார்கள். இதை அவர் மறக்கலாகாது. இதில் கவனிக்க வேண்டிய அம்சம் — ஸ்ரீமதி இந்திரா காந்தியின் பரம்பரைக் குணமல்ல. பாங்குகளை அரசுடைமையாக்கியது ஏழைகளுக்கு உதவியாக இருக்குமா என்பதுதான் கேள்வி.

பிறருடைய பணத்தை நல்ல தர்மகர்த்தாக்களாகக் கவனித்துக் கொள்வதுதான் பாங்குகளின் முதற் கடமை. பெறுமானமும் தகுதியும் உள்ளவர்களுக்குக் கடன் கொடுப்பது நல்லது. ஆனால் ராஜீயத் தன்மையுள்ள நிர்வாக ஏற்பாடானது பெறுமானமில்லாதவர்களுக்குக் கடன் கொடுப்பதில்தான் கொண்டு போய் விடும். இதனால் ஏற்படும் நஷ்டங்களை வரி கொடுப்போர் சுமக்க வேண்டியதுதான். மற்ற சர்க்கார்த் துறை நிறுவனங்களில் இருந்து வரும் பெயர் பெற்ற நிர்வாக மோச நிலை மேலும் வளர்ந்துவிடும். பிறருடைய பணத்தை விவகாரம் செய்து கொண்டு, ''நான் முற்றிலும் ஏழைகளுக்காகவே இருக்கிறேன்'' என்று கோஷிப்பது பொருத்தமற்ற பேச்சு. புது ஏற்பாட்டின் கீழ் தர்மகர்த்தாப் பொறுப்பு ஈடேறுவது சிரமம்.

★;

அரசுடைமையான பாங்குகள் மீது செலுத்தும் ஆதிக்கத்தில் தங்களுக்கும் பங்கு வேண்டும் என்று தமிழ் நாடு சர்க்கார் உரிமை கேட்கிறார்கள். இது பொருள் படைத்தது. இதை ஒரு கெட்ட நிமித்தமாகக் கூடக் கருதலாம். தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட நிதிகளை பாங்குகள் மோசமாக நிர்வகிக்கின்ற நடைமுறை விரைவு காணும் என்பதற்கு இது ஓர் அறிகுறி. தமிழ் நாட்டின் உதாரணத்தைப் பின்பற்றி மற்ற ராஜ்யங்களும் இதே கோரிக்கையை வற்புறுத்தக் கூடும்.

மோசமான ஒரு சர்க்காரின் கீழ் காலந்தள்ள வேண்டிய ஒரு நிர்ப்பந்த நிலைமை இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதே மாதிரி பணம் போட்டவர்கள், மோசமான நிர்வாகமும் வீணடிக்கும் தன்மையும் உள்ள பாங்குகளுடன் காலம்தள்ள வேண்டிநேரிடும்.

## கற்பக விருட்ச வாகனம்

மகாகவி பாரதியாரால் போற்றப்பட்டுப் பாமாலை பெற்றவர் புதுச்சேரியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மணக்குள விநாயகர். 1966-ல் ஸ்ரீ காமகோடி ஆசாரியர்கள் அனுக்கிரஹத்துடன் இப்பெருமானுக்குக் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. வேண்டியன அருளும் கற்பக விருட்சமாக விளங்கும் விநாயகருக்குக் ''கற்பக விருட்ச வாகனம்'' செய்து விநாயக சதுர்த்தி உற்சவத்திலேயே அதில் வீதி உலா நடத்த முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: திரு பு. வி. முத்துசாமி, 52, சீனிவாசா காலனி, சூரமங்கலம், சேலம்-5.

# பெரு நஷ்டம்

முன்னாள் நீதிபதி என். சோமசுந்தரம் அவர்கள் திடீரென்று மாரடைப்பு நோயால் காலமானார் என்ற செய்தி கேட்டு அவரை அறிந்த பல்லாயிரக் கணக்கான பேர்கள் துயருற்றிருப்பார்கள். சுதந்திரக் கட்சியின் ஆதரவில் சென்ற ஒன்பதாம் தேதி, பாங்கு களைச் சர்க்கார் உடைமையாக்கியதைக் கண்டனம் செய்ய மயிலாப்பூரில் நடைபெற்ற கூட்டத்துக்கு வந்திருந்தார். அவரைச் சற்றும் எதிர்பார்க்காதபோது, ராஜாஜி அவரைக் கண்டதில் பெரு மகிழ்ச்சியுற்றார். அவர் சுதந்திரக் கட்சியில் வேலை செய்ய எவ்வளவு ஆர்வமாக இருக்கிறார் என்று அந்த ஒரு செய்கை நிரூபித்துவிட்டது.

சிதம்பரத்துக்கு அருகே பிறந்த திரு சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் வக்கீல் தொழிலுக்குப் படித்துப் பிரபல கிரிமினல் லாயர் என்று பெயர் எடுத்திருந்த வி. எல். எதிராஜ் அவர்கள் அலுவலகத்தில் தொழில் தொடங்கினார். பின்னர் மற்றொரு கிரிமினல் லாயரான நியூஜின்ட் கிராண்ட் அவர்களிடம் பணிபுரிந்தார். பிறகு தாமே தொழில் புரிந்து பெயரும் புகழ் ஈட்டி நீதிபதியும் ஆனார். அவர் எவ்வளவு பெயரும் புகழும் பணமும் பெற்றாலும் இறைவனை மறந்த தில்லை. நம் பெரியோர்கள் வகுத்த சமய நெறிக் கோட்பாட்டை வழுவாமல் கடைப் பிடித்து வந்தார். திருநீறு அணிந்த நெற்றி யுடன் எப்பொழுதுமே காணப்படுவார்.



அவர் மறைவு வக்கீல் தொழில் துறைக்கு, ஆஸ்திக உலகத்துக்கு, சுதந்திரக் கட்சி அன்பர்களுக்கு, அவரது குடும்பத்தாருக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும். அவரது குடும்பத்தாருக்கு நமது அநுதாபங்கள்.

# 'கதிர்' காலமானார்

"எதையும் ஹாஸ்யக் கண்ணோட்டத்தோடு பார்த்து அதை ஹாஸ்யமாகவே எழுத்திலும் கொண்டு வருவதென்பது மிகவும் சிரமமானது. உனக்கு அது நன்றாய் வருகிறது. உனக்குப் பத்திரிகையில் சேர்ந்து பணியாற்ற விருப்பம் இருந்தால் என்னை வந்து பார்!" என்று 'கல்கி' அவர்கள் எழுதிய கடிதத்தைக் கண்டதும், மறு கணமே புதுக்கோட்டையிலிருந்து சென்னைக்கு விரைந்தார் அந்தப் புது எழுத்தாளர்.

சென்னைக்கு ஓடோடியும் வந்த அந்தப் புது எழுத்தாளர் யார்? "கதிர்" என்ற புனை பெயரில் பிற்காலத்தில் பிரசித்தியடைந்த திரு வி. வெங்கட்ராமன்தான்.

அப்பொழுது கல்கி அவர்கள் "ஆனந்த விகட"னில் ஆசிரியராக இருந்தார். பேராசிரியரால் ஊக்கம் அளிக்கப்பட்ட எழுத்தாளர் "கதிர்", "ஆனந்த விகட"னில் 1937ம் ஆண்டு உதவி ஆசிரியராகச் சேர்ந்தார். நகைச்சுவைக் கட்டுரைகள், கதைகள், துணுக்குகள், புத்தக விமரிசனங்கள், அரசியல் திருபார் சரடுகள் ஆகியவை "கதிர்"வெங்கட்ராமனால் எழுதப்பட்டவை ஏராளம்! அவருக்கு அரசியல் விஷயங்களில் தனி ஈடுபாடு உண்டு. நுண்ணிய விளக்கங்களோடு பல கட்டுரைகள் எழுதி யிருக்கிறார். நமுட்டுச் சிரிப்பும், குறும்புத்தனமும் கலந்த நகைச் சுவை நடை அவருக்குக் கைவந்த கலை.

"கல்கி" பத்திரிகையிலும் உதவி ஆசிரியராகப் பணியாற்றிச் சுறுசுறுப்பாக விறுவிறுப்புடன், எழுத்துலகில் முன்னேறிய "கதிர்" வெங்கட்ராமன் அவர்கள் தம் தேக ஆரோக்கியத்தில் சிறிதும் கவனம் செலுத்தவில்லை. நோயினால் நீண்ட நாள் அவதிப்பட்டார். வரவர நோய் விபரீதமாக வளர்ந்து இறுதியில் அவர் உயிருக்கே உலை வைத்து விட்டது. 12–8–69 அன்று கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரியில்



அவர் உயிர் பிரிந்தது. அவருக்கு வயது 59. அவருக்கு மனைவியும், அவர் நினைவாக இரண்டு வயதில் ஒரு பெண் குழந்தையும், மூன்று சகோதரர்களும் இருக்கிறார்கள். அவர்களுக் கெல்லாம் "கல்கி" பத்திரிகையின் சார்பில் ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள் வதோடு காலஞ்சென்ற "கதிர்" வெங்கட்ராமனின் ஆத்மா சாந்தியடையக் கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.





## செய்திப் படங்கள்

சமீபத்தில் வைத்தீஸ்வரன் கோயில் கும்பாபிஷேகம் அதி விமரிசையாக நடைபெற்றது.

(1) கும்பாபிஷேக வைபவத்தில் தருமபுர ஆதீனகர்த்தர், திருவாவடுதுறை ஆதீனகர்த்தர், குன்றக்குடி அடிகளார் முதலியவர்களைக் காணலாம்.

(2) கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்ட பல்லாயிரக் கணக்கான பக்தர்கள்.



(3) ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அருளாணைக்கிணங்க, தஞ்சை வடக்கு ராஜ வீதியில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி பால பவனத்தைச் சென்னை உயர் நீதி மன்ற நீதிபதி கனம் ஸ்ரீ கே. எஸ். வேங்கட்ராமன் ஐ. ஸி. எஸ். அவர்கள் திறந்து வைத்தார்.



(4) கல்கத்தா தமிழ் மன்றம் தயாரித்துள்ள மலரினை ஜெனரல் கரியப்பா அவர்கள் வெளியிட்டார். வள்ளுவர், காந்திஜி, மறைந்த ஜாகிர் ஹுசேன், அண்ணா ஆகியோரைப் பற்றிய கட்டுரைகளடங்கிய மலரினைத் திரு வி. எஸ். நாயர் பெற்றுக் கொண்டார்.



(5) பஞ்சாப் நேஷனல் பாங்கி தியாகராயநகர் கிளையைச் சேர்ந்த திரு கே. ஆர். வேங்கடராமனின் புதல்வி பேபி லலிதா சுந்தரியின் குச்சிப்புடி பரத நாட்டிய அரங்கேற்றம் அண்மையில் நடந்தது.

# நாடகமே உள்ளம்!

"பாச்சண்ணு! இந்த டயலாக் சரியாக வருதான்னு ஒரு தடவை பார்த்துடுங்களேன்!"

"பாச்சண்ணு! அந்த செட்டுக்கு ஊஞ்சல்தான் இயல்பாக இருக்கும்."

"பாச்சண்ணு! உங்களை போனில் யாரோ கூப்பிடுகிறார்கள்."

"பாச்சண்ணு! டிபன் சாப்பிட்டுக் கொண்டே பேச்சை நடத்தலாமே!"

பாச்சண்ணு! பாச்சண்ணு! யார் இந்தப் பாச்சண்ணு?

அவர் மத்திய சர்க்கார் ஏற்றுமதி இறக்குமதி வணிகத் துறையில் முதல்வகுப்பு சீனியர் அதிகாரியாகப் பணியாற்றும் ஒய். ஜி. பார்த்தசாரதிதான்! நண்பர் கூடத்துக்கு நடுவில் ஜூனியர் இளைஞராகப் பழகுபவரும் அவர்தான். காரியாலயத்தை விட்டு வெளியே வந்தால் அவர் நினைவெல்லாம் பயில் முறை நாடகத் துறையில்தான் லயிக்கிறது. அவர் வீட்டு ஹாலோ, நாடகப் பயிற்சி மண்டபமாகிறது. அறிமுகமான அன்பர்களுக்கெல்லாம் அவர் பாச்சண்ணுதான்!

திரு ஒய். ஜி. பி.யின் நாடகத் துறை ஆர்வத்துக்கு வித்திட்டது அந்த நாளைய கருணை விலாச நாடக சபை.

கருணை விலாச நாடக சபையில் அப்போது சில கட்டுப்பாடுகள் இருந்தன. அங்கத்தினர்கள் நடிக்கும் நாடகங்களை மற்ற அங்கத்தினர்களும்,



'பெண் படுத்தும் பாடு' நாடகக் காட்சி

அவர்களின் குடும்பத்தினரும்தான் பார்க்க முடியும். ரசிகப் பெருமக்களுக்கு அந்த வாய்ப்புக் கிடைக்காது. நாடகம் நடக்கும் போதுகூடச் சில அங்கத்தினர்கள் சீட்டாட்டத்திலும், அரட்டைக் கச்சேரியிலும் அதிக ஆர்வம் காட்டிக் கொண்டிருப்பார்கள். சிரமப்பட்டு நாடகத்தைத் தயாரித்து நடத்தும் ஒய். ஜி. பி.க்கு இந்த நிலை சற்று வருத்தத்தை அளித்தது. ஒவ்வொரு நாடகமும் முடிந்த பின்னர் இரவில் கருணை விலாச சபையில் ருசிமிக்க விருந்து உண்டு; ஆனால் அதற்குமுன் நாடக ருசியை அனுபவிக்க அதிகமாக ரசிகர்கள் இல்லையே என்ற ஏக்கம் அவரைப் பிடித்தது. இதே எண்ணத்தைப் பகிர்ந்து கொண்ட ஐந்தாறு நண்பர்களுடன் ஒய்.ஜி.பி. கருணை விலாச சபையி விருந்து நழுவி வெளியே வந்தார். இதன் விளைவாகத்தான் பதினேழு ஆண்டுகளுக்குமுன் 'யுனைடெட் அமெச்சூர் ஆர்ட்டிஸ்ட்ஸ்' நிறுவனம் தோன்றியது. எனினும், தம்மை நாடகத் துறையில் ஈடுபாடு கொள்ளச் செய்த, கருணைவிலாச சபையை ஒய்.ஜி.பி. மறந்து விடவில்லை. கருணை விலாச நாடக சபையில் பாடி வந்த அதே 'சர்வசித்தி விநாயகனே' என்ற இறை வணக்கப் பாடலைத்தான் இன்றும் 'யுனைடெட் அமெச்சூர் ஆர்ட்டிஸ்ட்ஸ்' நிறுவனம் ஒலித்து வருகிறது.

ஆனால் அன்று முதலே நாடக உத்திகளில் பல புதுமைகளைக் கையாண்டு முன்னேற்றம் காணத் துடித்தது இக்குழு. முக்கியமாக, செயற்கையாக ஒலித்து வந்த மேடை வசனத்தைச் சரளமான இயற்கையாகப் பேசும் வசனமாக மாற்றிக் கையாண்டனர். ரசிகர்களுக்கு இந்த மாறுதல் பிடித்திருந்தது. அப்போது இவர் குழுவில் சேர்ந்து நடித்து வந்த சுந்தர், சாரி, பட்டு போன்ற இளைஞர்கள் நாடக வசனங்களைப் பேச்சு நடைக்கு ஒப்ப எழுதி நகைச்சுவையை நிறையப் புகுத்தி வந்ததால், யுனைடெட் அமெச்சூர் ஆர்ட்டிஸ்ட்ஸ் நாடகங்கள் ஜனரஞ்சகமாயின. 'கண்ணன் வந்தான்' நாடகம் சமீபத்தில் ஐம்பத்தி எட்டாவது தடவையாக மேடையேறியது.

தாங்கள் தயாரிக்கும் நாடகங்களை வலுக் கட்டாயமாகத் தொடர்ந்து நடத்தி விழாக் கொண்டாட வேண்டும் என்ற கொள்கை ஒய். ஜி. பி.யிடம் இல்லை. பொதுமக்களின் தீர்ப்பைப் பரந்த மனத்துடன் ஒய். ஜி. பி. ஏற்றுக் கொள்கிறார். பல ஆண்டுகளுக்குமுன் 'அமெச்சூர் தியேட்டர் பெடரேஷன்' சார்பில் பல பயில் முறைக் குழுக்கள் நாடக விழாவில்



யுனைடெட் அமெச்சூர் ஆர்ட்டிஸ்ட் குழுவினர் அரங்க நிர்மாணம் பற்றி ஆலோசிக்கின்றனர்.



இன்று திரை உலகில் புகழ் பெற்று விளங்கும் இரண்டு நடிகைகளைத் தம் நாடகங்கள் மூலம் ஒய். ஜி. பி. அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள், குமாரி ஜெயலலிதாவும் 'ஜீவனாம்சம்' புகழ் லட்சுமியும்தான்.

குழந்தை சுபாவத்துடன் எல்லாருடனும் பழகும் ஒய். ஜி. பி.க்கு ஒரு காலத்தில் 'மெட்ராஸ் ரௌடி' என்ற பட்டமும் கிடைத்தது. அந்தப் பட்டத்தை அளித்தவர் சாதாரண ஆசாமியில்லை! பேராசிரியர் 'கல்கி' யேதான். 'மனோரதம்' என்ற நாடகத்தில் வில்லன் 'நாகராஜனு'க்த் தோன்றி இவர் செய்த அட்டகாசத்தின் விளைவுதான் அந்தப் பட்டம். இவ





மேலே: நாடகக் குழுவினருக்கும் பாச்சன்னாவின் அனுபவ யோசனைகள்.
கீழே: ஸ்ரீமதி 'ராஷ்மி'யும் விவாதங்களில் கலந்து கொள்கிறார்.

கண்ணன் வந்தான் நாடகக் காட்சி.

பங்கெடுத்துக் கொண்டபோது முதல் முறையாக ஒய். ஜி. பி. குழுவினர் 'ஹாட் கப் சிப்' என்ற நகைச்சுவை நாடகத்தை நடித்தனர். அந்த நாடகம் கடைசித் தடவை அரங்கேறியதும் அன்றேதான்!

இந்த நாடகத்தைவிடச் சற்று அதிகம் அதிருஷ்டம் செய்த நாடகம் 'ஃபேபுலஸ் ஃபூல்ஸ்' (Fabulous Fools) என்பது. அதை நான்கைந்து தடவை மேடையேற்றினார். ஒரு நாள் ரசிக ரஞ்சனி சபை அரங்கில் இந்த நாடகம் நடந்து முடிந்ததும் நன்கு அறிமுகமான ரசிகர் ஒருவர், ஒய். ஜி. பி.யிடம் வந்து, ''ஒய். ஜி. பி.! யூ ஆர் நாட் ஏ ஃபூல்! வி ஆர் தி ஃபூல்ஸ்'' என்றாராம். உடனே ஒய். ஜி. பி. அந்த நாடகத்தைத் தங்கள் பட்டியலிலிருந்து 'கட்டய'ராக்கி விட்டார்.

'ஓ. வாட் ஏ கேர்ல்!' 'மனோரதம்', 'பெற்றால்தான் பிள்ளையா?', 'இம்பொர்பெக் மர்டர்', 'அண்டர் செக்ரட்டரி' முதலிய நாடகங்களைத் தொடர்ந்து பல தடவைகள் சமீப காலம் வரை மேடை ஏற்றிய இவர், இப்போது பிரபலப்படுத்திக் கொண்டிருப்பது 'கண்ணன் வந்தான்' 'நலம்தானா?' என்னும் இரு சமூக நாடகங்களை. சிவாஜி கணேசன் நாடக மன்றத்துக்கு 'வியட்நாம் வீடு' எழுதிக் கொடுத்துப் பிரபலமடைந்த இளைஞர் சுந்தரத்தின் கற்பனைதான் இந்த இரண்டு நாடகங்களும். இந்த நாடகங்கள் மூலம் பிரகாசிக்க, தம் குழுவிலுள்ள இளைஞர்களுக்கு ஒய். ஜி. பி. நல்ல வாய்ப்பு அளித்திருக்கிறார்.

ருக்கு எதிராக இந்த நாடகத்தில் அப்பாவிப் பாத்திரமாக நடித்த நிஜ அப்பாவியான என். வி. சீனு, ஒரு நாள் நிஜமாகவே பயந்து மயக்கமடைந்ததால் அரங்கத்தில் அமர்ந்திருக்கும் டாக்டர் ஒருவரின் உதவியை நாட வேண்டி வந்தது!

சென்ற ஆண்டில் சென்னை ராஜ்ய சங்கீத நாடக அகாடமி சிறந்த பயில்முறை நடிகருக்கான விருதை இவருக்கு வழங்கியது. பலவித கலைத் துறைகளிலிருந்து ஒரு வழியாக ஓய்வுபெற்றவர்களுக்கோ, ஒதுங்கி விட்டவர்களுக்கோதான் அந்த விருது கிடைக்கும் என்ற பேச்சு அடிபடுவது உண்டு. ஆனால் ஒய். ஜி. பி. விஷயத்தில் அந்தப் பேச்சு பொய்யாகி விட்டது. விருது பெற்ற பிறகுதான் அவருடைய தீவிரம் அதிகமாயிற்று!

'' எந்தப் பெருமையையும், புகழையும் தனிப்பட்ட முறையில் என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. 'யுனைடெட் அமெச்சூர்

ஆர்ட்டிஸ்ட்ஸ்' நிறுவனம் தோன்றின நாள் முதல் எனக்கு உறுதுணையாக நின்றவர்கள் பல இளைஞர்கள். அவர்களுடைய உழைப்பிலும் பக்கபலத்திலும்தான் நான் வளர்ந்திருக்கிறேன். நாடகக் கலையை வளர்க்க முயன்றிருக்கிறேன். அவ்வப்போது இந்த இளைஞர் குழாம் மாறும். 'அவர்கள் எங்கிருந்தாலும் வாழ்க' என்ற மனோபக்குவத்துடன் புதிதாக வரும் இளைஞர்களுடன் பழகுகிறேன். அவர்கள் பல துறைகளில் திறமைசாலிகளாக இருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். என் நண்பர் ஏ. ஆர். ஸ்ரீநிவாஸன் துடிதுடிப்பு நிறைந்த இளைஞர். நல்ல கற்பனை உள்ளம் படைத்தவர். நாடக டைரக்ஷன் சம்பந்தமாகவோ காட்சி அமைப்புகள் பற்றியோ அவர் என்னிடம் விவாதிக்கும் போது நான் பிரமிப்படைகிறேன். அவரிடமிருந்து நான் பல புதிய விஷயங்களை ஒரு மாணவன் போல் தெரிந்து கொள்கிறேன். நண்பர் சாரி, மேடை நிர்வாகத்திலும் காட்சிகள் அமைப்பதிலும் வெகு நாளைய அநுபவம் பெற்ற ஆசாமி. 'என்' என்பதற்குள் எண்ணெயாக நிற்கக் கூடியவர். இவருக்குப் பக்கத் துணையாக நீலு, சுந்தர், சிவராம் போன்றவர்கள் இருக்கிறார்கள். வெவ்வேறு துறையில் தொழில் புரியும் இவர்கள் கலை ஆர்வத்தினால் ஒன்றுகூடி உழைக்கிறார்கள். அவர்கள் உழைப்பும் உற்சாகமும் என்னை, என் வயதைக்கூட மறக்கச் செய்கிறது. இதுதான் எனக்குப் பெருமை'' என்கிறார்.

ஒய். ஜி. பி.யைத் தர்மபுத்திரராகவும், இந்த இளைஞர்களைப் பீமார்ஜுன நகுல சகாதேவர்களாகவும் கற்பனை செய்து கொள்ளலாம்! அப்படியானால் ஒரு கண்ணன் வேண்டாமோ துணைக்கு! ரொம்ப தூரம் போக வேண்டாம்! அந்தக் கண்ணன் பணியை ஒய். ஜி. பி.யின் மனைவி ஸ்ரீமதி ராஜலட்சுமியே ('ராஷ்மி') செய்து விடுகிறார். நாடகத் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் அவர் யோசனை இடம் பெறுகிறது. இந்த நிறுவனத்தை இயக்கும் 'கம்ப்யூட்டர்' என்றே அவரைக் குறிப்பிடலாம்.

'நாடகத்தில் ஒவ்வொரு சிறு கட்டமும் முக்கியத்துவம் வாய்ந்தது. அலட்சிய மனோபாவத்துக்கு அங்கே இடமே இல்லை' என்று வற்புறுத்தும் ஒய். ஜி. பி. வெகு நாட்களுக்கு முன்பே, தில்லியில் 'கோண்டுவின் குடித்தனம்' என்ற நகைச்சுவை நாடகத்தில் நடிக்க முன் வந்தபோது நாடகத்தில் பங்கு பெறும் சர்க்கரை டப்பாவிலிருந்து கட்டெறும்புகள் ஓடி வர வேண்டும் என்பதற்காக, தேடி அலைந்து நாலைந்து கட்டெறும்புகளைப் பிடித்துக் கொண்டு வந்தவர்தான்! அரங்கத்தில் உள்ளவர்களுக்குக் கட்டெறும்பு கண்களுக்குப் புலனாகாமல் இருக்கலாம். ஆனால் அந்த டப்பாவைத் திறக்கும் நடிகருக்கு முகத்தில் சரியான பாவத்தைத் தோற்றுவிக்க அந்தக் கட்டெறும்புகள் உதவும் என்பது அவர் வாதம்.

ஒய். ஜி. பி.யின் மகன் மகேந்திரா, இஞ்சினீயரிங் கல்லூரி மாணவர். இவரும் இவருடைய கல்லூரித் தோழரான சந்திர மௌலியும் இந்தக் குழுவின் நகைச்சுவைக் காவலர்கள்.

ஒரு நாடகக் குழுவுக்கு அதுவும் தொழில் நடிகர்களல்லாத 'அமெச்சூர்' குழுவுக்குக் கலை ஆர்வம் நடிப்புத் திறமை போன்ற எல்லாம் இருந்து விடலாம், ஆனால் அவை மட்டும் போதுமா? வைட்டமின் 'ப' வேண்டுமே? அமெச்சூர் நடிகர்களுக்கு ஒவ்வொரு நாடகத்திலும் மிஞ்சுவது இரண்டு இட்டிலி, ஒரு வடை ஆகியவைதான் என்பது எல்லாருக்கும் தெரியும். சில சமயம் அதற்குக்கூடத் தட்டுப்பாடு வந்து விடும்! ஒய். ஜி. பி. தம்மால் முடிந்த வரை தமது சம்பாத்தியத்திலிருந்து நாடகக் குழுவுக்கு வழங்குகிறார். அதையும் மீறிக் கையைக் கடித்தால் தயங்காமல் போய் ஜனாப் அப்துல்காதரிடம் கைநீட்டுகிறார். ஜனாப் அப்துல்காதரின் சங்கு மார்க் லுங்கியும் கைக்குட்டையும் பிரசித்தமான அளவுக்கு அவரது கலை ஆர்வமும் அதற்கு உதவும் சுபாவமும் பிரசித்தமாகவில்லை என்பதால் இதோ பகிரங்கப்படுத்தி விட்டேன்!

— பட்டினத்தார்

சென்ற ஒன்பதாந்தேதி சனிக்கிழமை மாலை சென்னை ரஸிக ரஞ்சனி சபா ஹாலில் சுதந்திரக் கட்சியின் ஆதரவில், திரு கே. சந்தானம் தலைமையில் பாங்குகளைச் சர்க்கார் எடுத்துக் கொண்டதைக் கண்டித்து ஒரு பெருங் கூட்டம் நடைபெற்றது. தொழில் துறை பிரமுகர் திரு எம். வி. அருணாசலம், திரு சித்ரா நாராயண ஸ்வாமி, திரு ஜே. வி. சோமயாஜுலு ஆகியோர் பாங்குகளைச் சர்க்கார் உடைமையாக்குவதிலுள்ள பேராபத்தான விளைவுகளை விளக்கினார்கள். ராஜாஜி கடைசியில் பேசியபோது அவையில் உள்ளேயும் வெளியேயும் இருந்த பெருந்திரளான மக்கள் அவரது கருத்துக்களை உன்னிப்பாகக் கேட்டு ஆமோதித்தார்கள்.



# பக்கத்து வீட்டுப் பிரமுகர்



**செம்பை திரு வைத்தியநாத பாகவதர் அவர்களைப் பற்றிச் சொல்பவர் திரு டி. கே. ராமச்சந்திரன். பக்கத்து வீட்டுக்காரர் என்பதோடு, பல நூறு கச்சேரிகளுக்குப் பக்கவாத்தியம் வாசித்த அநுபவமும் இவருக்கு உண்டு. ★**




“முதல் நாள் மாலையில் பாலக்காட்டில் ஒரு கச்சேரி. மறுநாள் மாலையில் பம்பாய் ஷண்முகானந்தா சபா ஹாலில் கச்சேரி. இந்த இரண்டு கச்சேரிகளின் தேதிகளையுமே மாற்ற முடியாத நிலை. பம்பாய்க்காரர்கள் இவருடைய விமானப் பிரயாணத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். பாலக்காட்டிலிருந்து இரவு கேரளா எக்ஸ்பிரஸைப் பிடித்து மறுநாள் காலையில் சென்னை வந்து நடுப்பகலில் பம்பாய்க்கு விமானத்தில் கிளம்பவேண்டும்.

பாலக்காட்டுக் கச்சேரியில் ஒரே உற்சாகம். இவர் அமர்க்களமாய்ப் பாடி முடித்துக் கடிகாரத்தைப் பார்த்தபோது, இரவு மணி பத்தேகால். ஐந்தாவது மைலில் உள்ள ஒலவக்கோடு ரயில் சந்திப்புக்கு, சென்னை செல்லும் கேரளா எக்ஸ்பிரஸ் வரும் நேரமும் இரவு மணி பத்தே கால்.

பக்கவாத்தியக்காரர்கள் இவர் முகத்தைப் பார்த்தார்கள். இவரோ, “டேய்! அந்தக் குருவாயூரப்பன் கைவிட மாட்டாண்டா! பம்பாய்க் கச்சேரி தங்கமாய் நடக்கும். கிளம்புங்கோ!” என்றார்.

அன்று அவர்கள் ஒலவக்கோடு சந்திப்புக்கு வந்த பிறகுதான் கேரளா எக்ஸ்பிரஸுக்குக் கைகாட்டியே இறக்கினார்கள். ரயில் ஒரு மணி நேரம் தாமதமாக வந்தது. பம்பாய்க் கச்சேரியும் அற்புதமாக மறுநாள் நடந்தது.

அநேக வருஷங்களாக செம்பை அவர்கள் எங்கள் குடும்ப நண்பராக இருந்தாலும் பக்கத்து வீட்டுக்காரர் என்று ஆனது இருபத்தி ஐந்து வருஷங்களுக்கு முன்தான். என் தகப்பனார் டி. ஜி. கிருஷ்ணய்யருக்குச் சங்கீதத் துறையில் ஈடுபாடு உண்டு. அவர் ஒரு சாகித்திய கர்த்தாவும்கூட. ‘லலிதா தாசர் கீர்த்தனைகள்’ என்ற தலைப்பில், அவர் சில கீர்த்தனைகளை இயற்றியிருந்தார். அவற்றை ஸ்வரப்படுத்தி அச்சிட்டு வெளியிட வேண்டும் என்ற அவா அவருக்கு உண்டு. அதற்குச் செம்பை அவர்களின் உதவியை என் தந்தை நாடினார். இந்தக் கைங்கரியத்தில் ஈடுபட்டதின் பயனாக, செம்பை அவர்கள் 1944ம் ஆண்டிலிருந்து எங்கள் பக்கத்து வீட்டையே விலைக்கு வாங்கி அதில் வசிக்கலானார். அந்த வீட்டின் பெயரும் ‘லலிதா விலாஸ்’ ஆயிற்று. காரணம் செம்பை தினம் அதிகாலையில் எங்கிருந்தாலும், எழுந்து ஸ்நானம் செய்து லலிதா சகஸ்ரநாமம் தோத்திரம் செய்து, நாராயணீயம் பாராயணம் செய்யும் பழக்கமுடையவர். அந்த ‘லலிதா சகஸ்ரநாமம்’ புத்தகம் — மலையாள மொழியில் உள்ளதுதான் — அறுபது வருஷங்களாக அவர் கையில் இருக்கும் சிறிய துணிப் பையில் நாராயணீயம் புத்தகத்துடன் சேர்ந்து இருக்கிறது. ‘இதுதான் என் சொத்து’



என்று அடிக்கடி அவர் சொல்ல நான் கேட்டிருக்கிறேன்.

அதிகாலையிலே அவருடைய குரல் அநேக நாட்களில் ஒலிக்கும். நியமநிஷ்டைகள் முடிந்த பிறகு சிஷ்யர்கள் யாரும் வந்தால் அவர்களுடன் சேர்ந்து தாமும் பாடுவார். ரசித்துச் சொல்லிக் கொடுப்பார். ஆனால் இந்தச் சிட்சைக்குப் பிரதிப் பிரயோசனமாகப் பணமாகவோ வேறு வகையாகவோ





சென்னை உயர்நீதி மன்றத்துக்குப் புதிய நீதிபதிகளாக நியமிக்கப் பட்டுள்ள திரு கோகுலகிருஷ்ணனும், திரு ஜீ. ராமானுஜமும்.

எதையும் பெற்றுக் கொள்வதில்லை என்ற கட்டுப்பாடும் வைத்துக் கொண்டிருக்கிறார். ஆதி நாட்களில் அவர் அப்பியாசம் செய்த தெல்லாம் தம் தகப்பனாரிடம்தான். இவர் கல்விக்காக எந்தப் பள்ளிக் கூடமும் போக வில்லை. தகப்பனாரிடம் இசை பயின்றதோடு சரி. அந்த நினைவில் இன்று சிஷ்யர்களையும் தம் குழந்தைகளாகவே நினைத்துச் சொல்லிக் கொடுக்கிறார்.

ஆனால் கச்சேரிகளுக்கு 'ரேட்' பேசும் போது கறாராகவே பேசிவிடுவார். வளைந்து கொடுக்கும் சுபாவம் இல்லை. ''நான் எனக் காகவா சம்பாதிக்கிறேன்? குருவாயூரப்ப னுக்காகத்தானே?'' என்று அவர் சொல்வ தின் தாத்பர்யம் பலருக்குப் புரியாது. ஏனென்றால் அவர் சில வருஷங்களாகக் கச்சேரி மூலம் வரும் அத்தனை தொகைகளையும் அவ் வப்போது குருவாயூரப்பனுக்கு 'உதயாஸ் தமன' பூஜை செய்து பார்த்து மகிழ்வதில் உபயோகப்படுத்தி விடுகிறார். ஒரு நாள் 'உதயாஸ்தமன' பூஜைக்காக ஆகும் செலவு ஐயாயிரம் ரூபாய்.

1952ம் வருஷத்தில் இவருடைய சாரீரம் திடீரென்று கோளாறாகி விட்டது. இவர் இரைந்து கத்தினால்கூடப் பக்கத்திலிருப்பவ ரும் கேட்க முடியாத நிலை. ஒரு சங்கீத வித் வானுக்கு இதைவிட வேறு என்ன சோதனை வேண்டும்? இந்தச் சூழ்நிலையில் இவர் ஒரு நாள் குருவாயூரப்பன் சன்னதியில் நின்று கொண்டு, பிறருக்குக் கேட்காது என்ற நினைப்பில் இரைந்து 'ஐம்பது வருஷங் களாக நான் பாடுகிற ஸ்தோத்திரம் கூட உனக்குக் கேட்கப் பிடிக்காமல் போயிற்று குருவாயூரப்பா?' என்று ஆத்திரத்துடன் மலையாள மொழியில் கத்தினார். ஆனால் இவ ருடைய வார்த்தைகள் எதிரே பல கஜ தூரம் தள்ளி நின்று கொண்டிருந்த வைத் தியமடம் நம்பூத்ரி என்பவரின் செவிகளில் மாத்திரம் விழுந்தன. அவர் நேராகச் செம்பை அவர்களிடம் வந்து விஷயத்தை விசாரித்துத் தமக்குத் தெரிந்த ஒரு நாட்டு வைத்தியரிடம் அழைத்துச் சென்றார். ஒரே வாரத்தில் இழந்த குரல் மீண்டும் ஒலித்தது.

இது குருவாயூரப்பனின் கருணைதான் என்று மன முருகிப்போனார் இவர். அதற் குப் பிறகு இவர் சம்பாதிப்ப தெல்லாம் குருவாயூரப்பனுக் குத்தான். ''நான் இழவன்! எழுபது வயசை எப்பவோ தாண்டியாச்சு! நானு பாட றேன்? அந்தக் குருவாயூரப் பன் பாடறான்'' என்ற மனப் பக்குவம் வந்துவிட்டது.

செம்பைக்குக் கோபமும் நிறைய வரும். ஆனால் அந்தக் கோபம் அகாரணமாய் வந்து விடாது. ஒரு நாள் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. மேடையிலே அவருக்குப் பின் னாலே உட்கார்ந்திருந்த சிஷ்யப் பையன், தர்மாஸ் பிளாஸ்கைத் திறக்க முயன்று அதைக் கைதவற விட்டு விட் டான். பிளாஸ்க் நொறுங்கி விட்டது. ஆலா பனையில் லயித்திருந்த செம்பை அப்படியே திரும்பி அந்தப் பையனை ஓர் அறை அறைந்து விட்டார்.

பிளாஸ்க் உடைந்து விட்டதே என்ற கோபத்தினால் இந்தச் சம்பவம் நடக்கவில்லை. ஒரு சங்கீதக்காரனுக்கு எப்போதும் கை நிதானம் வேண்டும் என்பதற்காகத்தான். இதை அவரே அப்புறம் சொன்னார். இதை யெல்லாம் ஒருவித அபிமான கோபம் என்று அவரை நன்கு புரிந்தவர்கள் உணர்ந்து கொள்வார்கள். ஏனென்றால் அவரைப் போல் நகைச்சுவை உணர்ச்சி உடையவர் கிடையாது. உற்சாகப்படுத்த வேண்டிய இடங்களில் தயங்காது பாராட்டுவார்.

ஒரு முறை டில்லிக்குப் போய்ச் சேர்ந்த பிறகு, கல்கத்தா சபா காரியதரிசியிடமிருந்து ஒரு தந்தி டில்லி விலாசத்துக்கு வந்தது. அதில் கல்கத்தா கச்சேரி எதிர்பாராத வித மாக ரத்தாகி விட்டதாகக் கண்டிருந்தது.

தந்தியின் விஷயத்தைக் கேட்டறிந்த செம்பை அவர்கள் சில நிமிஷ நேரம் யோசனையில் ஆழ்ந்து விட்டு ''ராமச்சந் திரா! அந்தக் கல்கத்தா சபா செகரடரிக்கு ஒரு டிரங்கால் போடுடா. நான் பேசறேன். இந்தத் தந்தியோட கருதி சரியில்லே'' என்றார். அவர் சந்தேகித்ததற்கு ஏற்றாற் போல் அந்தத் தந்தியைச் சபா காரியதரிசிக்கு விரோதமானவர்கள் யாரோ கொடுத்திருக் கிறார்கள் என்பது தெரிந்தது. கல்கத்தா கச்சேரி குறிப்பிட்ட தேதியில் ஜாம் ஜாம் என்று நடந்தது.

குருவாயூரப்பனுக்கு அடுத்தபடியாக இவர் நினைவில் எப்போதும் நிற்பவர்கள் பிடில் கோவிந்தசாமி பிள்ளையும் மிருதங்கம் தட் சிணாமூர்த்தி பிள்ளையும்தான். 1916க்கும் 1926க்கும் இடையே யுள்ள பத்து வருஷ காலத்தில் செம்பை இளைஞர். ஆனால் அவர் களோ முதியவர்கள். அவர்களுக்கு இந்த இளைஞரின் குரல் காம்பீர்யத்தில் அதீத மோகம். அவர்களுடைய பக்க வாத்தியங் களைச் சோபிக்க வைக்கும் சாரீரம் என்று

புரிந்து கொண்டார்கள். அந்தப் பத்து வருட காலத்தில் அவர்கள் இருவரும் இவரைத் துணை சேர்த்துக் கொண்டு சங்கீத உலகத்தில் மாபெரும் அற்புதங்களைச் செய்து காண்பித்தார்கள். 'நான் ஊரிலே இருப்பேன். கோவிந்தசாமி பிள்ளை கச்சேரிக்கு ஏற்பாடு செய்துவிட்டுத் தந்தி கொடுப்பார். நான் போய்ச் சேர்ந்துகொள்வேன். சன்மானம் அவர்கள் ஒவ்வொருவரும் பெற்றுக் கொள்வதை விட ஒரு ரூபாயாவது எனக்கு அதிகம் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தும் பெருந்தன்மையுள்ள மகான்கள் அவர்கள்' என்று அவர்களைப் பற்றி உணர்ச்சி பொங்கக் கூறுவார்.

அவர்கள் காலத்துக்குப் பிறகுதான் சௌடையா அவர்கள் இவருடன் சேர்ந்து கொண்டார். இருவரும் மிக நெருங்கிய நண்பர்கள். ஆறுலும் சௌடையா ஒரு திரைப்படம் தயாரித்து, அதில் செம்மை அவர்களை ஒரே ஒரு பாட்டு பாடச் சொன்ன போது இவர் கேட்ட சன்மானம் எவ்வளவு தெரியுமா? நூறு சவரன்கள்! அதை வாங்கி, தம் சொந்த ஊரில் உள்ள பார்த்தசாரதி ஸ்வாமிக்குத் தங்கக் கவசம் பண்ணிச் சாத்திவிட்டார். அன்றைக்கு நான்கூட அங்கே போயிருந்தேன். கடந்த ஐம்பத்தி மூன்று வருடங்களாக ஒவ்வொரு வருஷமும் அந்தப் பார்த்தசாரதிக்கு உற்சவம் நடத்தி வருபவரும் இவர்தான்.

அவர் ராஷ்டிரபதி விருது பெற்ற வருஷம் டில்லி சதஸில் அவருக்கு வயலின் வாசிக்கும் பெருமை எனக்குக் கிடைத்தது. செம்மை அவர்களை வயலின் வெகு நன்றாக வாசிப்பார்.

பாகவதர் வீடு எப்போதும் கலகலவென்றிருக்கும். வெளியூர்களுக்குப் போக நாள், நட்சத்திரம் எல்லாவற்றையும் துல்லியமாகப் பார்த்துவிட்டுத்தான் கிளம்புவார். பல நாட்கள் பரஸ்தானமாக முதல் நாள் இரவு எங்கள் வீட்டில் வந்து தங்கி விட்டு மறு நாள் இங்கிருந்து நேராகப் புறப்படுவார். அதே போல் அவர் புறப்பட்ட ஒன்பதாம் நாள் ஊருக்குத் திரும்ப நேரிட்டால் நேராக எங்கள் வீட்டில் வந்து தங்கிவிட்டு மறு நாள்தான் வீட்டுக்குப் போவார்.

'ராமச்சந்திரா! எங்கே போயிருந்தாய்?' என்று அன்பும் மலையாள ஓசையும் சரிசமமாய்க் கலந்து ஒலிக்கும் குரலுடன் அவர் என்னைப் பார்த்துக் கேட்கும் வேளையில் நான் அடையும் ஆனந்தம் இருக்கிறதே... அதை எப்படி விளக்கமாச் சொல்றதுன்னு எனக்கே தெரியலே.'' பேட்டி: சோமஸ்வாமிநாதன்

## கருணைக்கு விலை என்ன?

எங்கள் ஊரான ஹைதராபாத்தில் நடந்து வரும் தெலுங்கானு கலாட்டாவைப் பற்றி அறியாதார் யாருமில்லை. கலாட்டா வென்றால் கொஞ்சநஞ்சமல்ல. எத்தனை யெத்தனை கொடுமைகள் உண்டோ அத்தனையும் நடந்தன. ஒரு நாள் ஏதோ அசட்டுத் துணிச்சலில் வெளியே கிளம்பி விட்டேன். அதுவும் தனியாகவல்ல, ஐந்து வயதான என் குழந்தையுடன். போகும்போது ஒன்றுமில்லை. நகரம் அமைதியாகவே இருந்தது. வெளியே சென்று வேலையை முடித்துக் கொண்டு திரும்பும் நேரத்துக்குள் திடீரென்று கிளர்ச்சி மூண்டு, கொஞ்சம் கொஞ்சமாக வலுக்க ஆரம்பித்துவிட்டது. மிரண்டுபோன நான் சட்டென்று ஒரு ரிக்ஷாவை நிறுத்தி ஏறி அமர்ந்து என் இருப்பிடத்தைக் கூறி அவன் கேட்ட கூலிக்கு வாய் பேசாது ஒப்புக் கொண்டேன். வழியெல்லாம் ஒரே கலவரம், கல்லடி, அடிதடி, ரகளை பெருகி விட்டது. குழந்தை பயத்தில் என்னை இறுக அணைத்துக் கொண்டு என்னுடன் ஒட்டிக்கொண்டு விட்டான். இந்நிலையில் திடீரென்று எங்கிருந்தோ விர்ரென ஒரு கல் பறந்து வந்தது. நானும், குழந்தையும் தப்பித்துக் கொண்டோம். ஆனால் பரிதாபம்! ரிக்ஷாக்காரனின் நெற்றியை அந்தக் கல் நன்கு பதம் பார்த்து விட்டது. நெற்றியிலிருந்து ரத்தம் பெருகி வழிய ஆரம்பித்தது. பதறிப்போன நான் வண்டியை நிறுத்தும்படி எவ்வளவோ சொல்லியும் அவன் நிறுத்தாமல் ஓட்டிக் கொண்டு போனான். வீடு வந்து சேரும்வரை அவன் வண்டியை நிறுத்தவே இல்லை. காயத்திலிருந்து பெருகிய உதிரத்தால் அவன் போட்டிருந்த மேல் துண்டெல்லாம் நனைந்து விட்டிருந்தது. பச்சாதாபத்தாலும் நன்றியுணர்விலும் என் நெஞ்சமெல்லாம் கரைய, பேசிய கூலிக்குமேல் ஓர் ஐந்து ரூபாய் நோட்டை அவனிடம் நீட்டியபோது, ''வேண்டாம் அம்மா. உழைப்புக்குக் கூலி தந்தால் போதும். மனிதாபிமானத்துக்குக் கூலி வேண்டாம். என் கடமையை நான் செய்தேன். உங்களையும் இந்தக் குழந்தையையும் பத்திரமாக வீடு சேர்த்த மகிழ்ச்சி ஒன்றே எனக்குப் போதும்'' எனக் கூறி மெல்ல ரிக்ஷாவை ஓட்டியவாறு சென்று விட்டான்.



மனிதாபிமானத்துக்கும் கருணை உணர்ச்சிக்கும் விலை பேசிய நான் வெட்கித் தலை குனிந்தேன். ஒரு பக்கம் கலகக்காரர்களும் வெறியர்களும் நிறைந்திருந்தாலும் அவர்களுக்கிடையில் இப்படியும் சில நல்லவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். — பி. சாந்தா தத்

# சிலை வார்க்கும் கலைஞர்

இறைவனின் உருவங்களையே செய்து இன்பம் காணும் ஒரு கலைஞரைச் சந்திப்போமா ?

அந்த விசாலமான அறையில் இறைவனின் சுமார் ஏழெட்டுத் திருஉருவங்கள் தனித்தனியே அழகுப் பிம்பங்களாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன.



இவ்வளவு சிறப்பாகச் சிலையைச் செய்திருக்கும் ஒரு கலைஞர் உண்மையில் மிகவும் திறமை பெற்றவர் என்று சிலைகளைப் பார்த்தவுடனேயே தெரிகிறது.

இவ்வளவு பெருமைக்கும் உரிய இவர் மிகவும் எளிமையாகக் காட்சி அளிக்கிறார். அவர்தான் சிலை வார்க்கும் கலைஞரான திரு லியோ பீரிஸ் அவர்கள்.

''இந்தச் சிலைகளையெல்லாம் தாங்கள் ஒருவராகவேதான் செய்கிறீர்களா ?''

''ஆமாம், நான்தான் செய்கிறேன். சிறு சிறு உதவிகளுக்கு மட்டும் பிறரை எதிர் பார்க்கிறேன்.''

''தாங்கள் சிலை செய்யும் கலையை எங்கு கற்றுக் கொண்டீர்கள் ?''

''இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போது நான் இரண்டு வருடங்கள் இலங்கையில் இருந்தேன். அங்கு ஓரளவு நாளுகக் கற்றுக் கொண்டேன். பிறகு சென்னை வந்தேன். இது என் தாய் வழித் தொழில். எனக்கு இது பற்றி யாரும் கற்றுத் தரவில்லை. ஆனால் என்னிடமிருந்து சிலர் கற்றுச் சென்றுள்ளனர்.''



''இக்கலை பற்றிக் கொஞ்சம் விளக்கிக்கூற முடியுமா?''

''முன்பெல்லாம் இப்படிச் சிலை செய்யத் தேவையான அச்சு வார்ப்புக்கள் சீனாவிலிருந்துதான் வரும்; யுத்த காலத்தில் அங்கிருந்து வரும் பொருட்கள் தடைப்பட்டன. இங்கேயே அவைகளைச் செய்து கொள்ள வேண்டும் என்ற அவசியம், கட்டாயம் பிறந்தது. இதன்படி சென்னை 'தாமஸ் ரொடரிகோ அன் சன்'னில் முதன் முதலில் செய்யத் தொடங்கினேம். ஓரளவு வெற்றியும் கிடைத்தது. ஆனால் நான் முழுமையாகச் சிலைகள் செய்த இடம் மதுரையில் உள்ள 'அக்னஸ் எம்போரியம்'தான்!''

''சிலைகளை எப்படிச் செய்கின்றீர்கள்?''

''முதலில் களி மண்ணில் உருவத்தைச் செய்து கொள்ளுவோம். மோல்ட் தயாரிப்போம். பின்பு பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் என்னும் வெள்ளை நிறப் பவுடரால் மோல்டு ஊற்றிக் காய வைத்து விடுவோம். பிறகு மோல்டை (அச்சு வார்ப்பு) உடைத்து முழு உருவத்தை எடுத்துச் சுத்தம் செய்து, உருவத்தைச் சரி செய்து பிறகே வர்ணம் தீட்டுவோம்.''



அவர் எழுந்து சென்று ஒரு சிறு புகைப்படத்தை எடுத்து நமக்குக் காட்டுகிறார். என்ன ஆச்சரியம்! அந்தச் சிறு புகைப்படத்தில் உள்ள அதே உருவம் சுமார் ஒன்பது அடி உயரத்தில் கன கம்பீரமாகக் காட்சி அளிப்பதைக் கண்டு நம் கண்கள் படபடக்கின்றன!

எந்தச் சிறு படத்தையும் பார்த்து அதேபோல் எத்தனை அடி உயரத்திலும் சிலை வார்த்து விடும் இவருடைய கைத்திறன் தனிப் பெருமை வாய்ந்தது.

இவர் செய்த சிலைகள் இந்தியாவின் பல பகுதிகளிலும் இலங்கை, மலேயா போன்ற அயல்நாடுகளிலும் காட்சி தருகின்றன.

''தாங்கள் செய்த சிலைகளில் அதிக உயரம் எது?''

''இரண்டு அடியிலிருந்து பதினறு அடி வரை சிலைகள்

செய்திருக்கிறேன். நான் செய்த உயரமான பதினாறடி சிலை ஒன்று 'தூத்துக்குடி தூய மரியன்னை கல்லூரி'யில் மிக உயரத்தில் வைக்கப்பட்டுள்ளது. பதின்மூன்றடிச் சிலை ஒன்று 'பாளையங்கோட்டை கிறிஸ்து ராஜா ஆசிரியர் பயிற்சிப் பள்ளி'யில் இருக்கிறது.''

''இதுவரை எத்தனை சிலைகள் செய்திருப்பீர்கள்?''

''இருபத்தைந்து வருடங்களாகவே இத்தொழிலைச் செய்து வருகிறேன். சுமார் ஆயிரத்து இருநூறு சிலைகள் இருக்கலாம்!''

இவ்வளவு சிறப்புடன் எண்ணற்ற சிலைகள் செய்திருக்கும் இவருடைய தன்னடக்கத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு — இதுவரை தம் பெயரை எந்தச் சிலையிலும் பொறித்ததில்லையாம்! உருவாக்கியவரின் பெயரில்லாமலே அச்சிலைகள் புகழை எய்துகின்றன.

இவர் இக்கலையை எங்கும் பயின்றதில்லை. எனினும், திருவனந்தபுரம் ஸ்கூல் ஆப் ஆர்ட்ஸில் ஓவியம் பயின்று தேர்ச்சி பெற்றவர். சென்னையில் இருந்தபொழுது சினிமாவில் 'மேக்கப்' செய்யும் பணியில் சிறிது நாள் ஈடுபட்டிருந்திருக்கிறார்.

''சிறிய கலைக்காகச் சேவை செய்யும் தாங்கள் இத்தொழிலைப் பற்றி.....!''

''கலைக்காக நான் ஒன்றும் சேவை செய்யவில்லை., என்னுடைய குடும்பத்தை நடத்தவே நான் இத்தொழிலைச் செய்கின்றேன். இன்னும் இறம்பட நடத்த வேண்டுமானால் அதிக முதலீடு தேவை. போதிய வசதியும், கலைஞர்களுக்குப் போதிய உற்சாகமும் அளித்தால் இதைவிட சிறப்பாகச் செய்யமுடியும்!''

'கலைக்காகச் செய்யவில்லை' என்று இவர் கூறினாலும், இவருடைய மனைவி திருமதி பீரிஸ் கூறுகிறார்:

''நானூறு ரூபாய் மதிப்புள்ள ஒரு சிலையைச் செய்யச் சுமார், இரண்டு வாரங்கள் ஆகும். ஆனால் இவர் ஒரு மாதமானாலும் அச்சிலையை விட மாட்டார். 'சரியில்லை சரியில்லை' என்று கூறி மிகவும் சிரமப்பட்டுச் செய்து முடிப்பார். நாங்கள் 'நன்றாக இருக்கிறது' என்றாலும் அவர் நம்பவேமாட்டார்.''

இதைக் கேட்டவுடன் அவர் சற்றே புன்முறுவல் செய்தார். அதில் அவரது தன்னடக்க உணர்வுதான் தெரிந்தது.





முன் பக்கம் :

1. இயேசு ஜெருசலம் ஸ்திரீகளுக்கு ஆறுதல் கூறுகிறார்.
2. லியோ பீரிஸ் அவர்கள்.
3. இயேசுவுக்கு மரணத் தீர்ப்பு அளிக்கப்படுகிறது.

★

இந்தப் பக்கம் :

1. கொலைக்களத்தில் இயேசு.
2. மாதாவின் மடியில் இயேசு.
3. சிலுவையைச் சுமக்க முடியாமல் கீழே விழுதல்.

இவருடைய கைத்திறனைப் பல ரோமன் கத்தோலிக்கப் பாதிரிமார்கள் பாராட்டியிருக்கிறார்கள். ஆனாலும் இவருக்கு இதுவரை 'திருப்தி' ஏற்பட்டதே யில்லையாம்!

'கலைக் குடும்பம்' என்று துணிந்து கூறலாம் இவருடைய குடும்பத்தை. இவருடைய மகள் ஓவியத்திலும் தையற் கலையிலும் தேர்ச்சி பெற்றவர். இவரைப் போலவே சிலை வார்க்கும் அளவுக்குத் திறமை பெற்றவர் இவரின் மகள்.

'மிகச் சிறப்பு வாய்ந்த இத் தொழிலைப் பொதுமக்கள் மதிப்பதில்லை, ரசிப்பதில்லை, ஊக்கமூட்டுவதில்லை!' எனக் குறைப்படும் இவரிடம், ''ஒரு சந்தேகம். தாங்கள் இதுவரை கிறிஸ்துவ மதச் சிலைகளைத்தானே செய்திருக்கிறீர்கள்? ஏன் பிற மத தெய்வச் சிலைகளைச் செய்யவில்லை?'' என்று கேட்டேன்.

''ஆரம்ப காலத்திலிருந்தே எனக்குக் கிறிஸ்துவச் சிலைகள் செய்வதற்குண்டான வாய்ப்புக்கள்தான் கிடைத்தன. பிற மதத்தினர் யாரும் என்னை நாடி வரவில்லை. மேலும் திடீரென்று புதிதாக வேறு மதத் தெய்வங்களைச் சிலை வார்ப்பது சிரமம்தான்!''

சிலைகளுக்கு இடையில் நீண்ட நேரம் நின்று அவருடன் உரையாடிக் கொண்டிருந்த நான் சிலையாகி நிற்காததற்குக் காரணம் அவர் வடித்த சிலைகளில் உயிர்த் துடிப்பு மிகுந்திருந்ததுதான்.

— மதுரை தங்கம்



# கும்மிருட்டில் கொடிய புலி!



ஐந்து சிங்கங்கள், ஒரு முரட்டுப் புலி ஆகிய ஆறு வன விலங்குகளை ஒரே நேரத்தில் ஆட்டி வைக்கும் சர்க்கஸ் 'ரிங்'மாஸ்டராக உங்களை ஒரு கணம் கற்பனை செய்து கொள்ளுங்கள். ஆறு கொடிய மிருகங்களுடன் நீங்கள் தனியே ஒரு பெரிய இரும்புக் கூண்டில் இருக்கிறீர்கள். உங்கள் மேல் பாய, சரியான உயரத்தில் ஒரு முரட்டுப் புலி நிற்கிறது......

அந்தக் கணத்தில் மின்சாரக் கோளாறினால் சர்க்கஸ் அரங்கத்தில் உள்ள அத்தனை விளக்குகளும் அணைந்து இருள் சூழ்ந்து விடுகிறது.... உங்கள் மன நிலை என்னவாக இருக்கும்? நினைத்துப் பாருங்கள்!

இந்த அபூர்வ அனுபவம் தாமு தோத்ரே என்ற சர்க்கஸ் ரிங்மாஸ்டருக்கு அமெரிக்காவில் ஏற்பட்டது.

சர்க்கஸில் வன விலங்குகள் ஏதேனும் அத்துமீறிச் சிலசமயம் வம்பு செய்தால் சுட்டுவிடத் துப்பாக்கி தயாராக இருக்கும். ஆனால் இருட்டில் எதைக் குறி பார்த்துச் சுடுவது? மனிதர்கள் யார் மீதாவது குண்டு பாய்ந்து விட்டால்....?

இரண்டொரு நிமிட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் மின்சார விளக்குகள் எரிந்தன. சர்க்கஸைக் காணக் குழுமியிருந்த ரசிகர்கள் பயந்தபடி ஒன்றும் விபரீதம் நிகழ்ந்து விடவில்லை. அந்த ஆறு விலங்குகளும் அப்படியே 'பிரமிட்' அமைப்பில் நின்று கொண்டிருந்தன. தாமு தோத்ரே அவைகளை அதட்டிக் கொண்டுதானிருந்தார்!

விபரீதம் ஏன் நிகழவில்லை என்பதற்குப் பிறகு தோத்ரே விளக்கம் கொடுத்தார். ''இந்த வன விலங்குகளுக்கு இருளில் நன்றாகக் கண் தெரியும். ஆகையால் விளக்குகள் அணைந்தபோது நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்பது அவைகளுக்கு நன்கு தெரியும். நான் எப்போதும்போல அந்த இருட்டிலும் அவைகளை அதட்டிக் கொண்டுதானிருந்தேன். அதனால்தான் தப்பினேன்'' என்றார். விளக்குகள் அணைந்ததும் அவர் சற்று நிதானம் இழந்திருந்தால் போதும், ஆபத்துத்தான்!

''சிங்கம் புலி, சிறுத்தை போன்ற கொடிய வன விலங்குகளை ஒரு நாளும் நாய், பூனை அளவுக்குப் பழக்கி உறவு கொண்டாட முடியாது. அவைகளுக்குச் சில பயிற்சிகள் தான் கொடுக்க முடியும். சற்று அஜாக்கிரதையாக இருந்தாலும் சுதந்திரத் துடிப்புள்ள மிருகங்கள் எதற்கும் துணிந்து விடும்'' என்பது தோத்ரே அனுபவத்தில் கண்ட உண்மை.

'தங்கள் உடலில் மிருகங்கள் மூலம் ஏற்படும் காய வடுக்களைக் காட்டிச் சில பயிற்சியாளர்கள் பெருமைப்படுவார்கள். இது அசட்டுத்தனம். அவை அவர்களுடைய கவனக் குறைவின் சின்னங்கள். வீரத்தின் சின்னங்கள் அல்ல. உடலும் உள்ளமும் ஒரே கருதியில் வேகமாக இயங்க வேண்டிய வேலை இது' என்று சொல்லும் தோத்ரேக்கு இரண்டு சந்தர்ப்பங்களில் காயம் பட்டிருக்கிறது. ஒரு தடவை சிங்கம் தாக்கி விட்டது என்று ஒரு டாக்டரிடம் போனார். அவர் நம்பவில்லை. இரண்டாவது டாக்டர் அவரை ஒரு மனோதத்துவ வைத்தியரிடம் போகச் சொன்னார். மூன்றாவது டாக்டர்தான் அவர் சொன்னதை நம்பிச் சிகிச்சை அளித்தார்!

பல ஆண்டுகள் அமெரிக்கப் பிரஜையாக அந்த நாட்டிலேயே தங்கி 'ரிங்லிங் சகோதரர்கள்' சர்க்கஸில் பணியாற்றிப் பல அபிமான விசிறிகளைச் சம்பாதித்துக் கொண்டிருக்கும் தோத்ரே, மகாராஷ்டிர ராஜ்யத்தைச் சேர்ந்தவர். பாரதத்திலும் பாரிசிலும் இங்கிலாந்திலும் சர்க்கஸ்களில் பங்கெடுத்துக் கொண்டு அமெரிக்கா சென்றார்.

சர்க்கஸில் அவர் சோன்யா என்ற சிறுத்தையுடன் கட்டித் தழுவுவதுதான் கடைசிக் காட்சியாக இருக்கும். அந்தச் சோன்யா உயரமான இடத்திலிருந்து தாவி முன்னங்கால்களால் அவர் கழுத்தைக் கட்டிக் கொள்ளும். அவர் தம் கரங்களால் அதன் இடுப்பை அணைத்து கொள்வார். மக்கள் ஆரவாரம் செய்து களிப்பார்கள்.

அறுபத்தி ஆறு வயதை எட்டிய தாமு தோத்ரே, தம் தொழிலிலிருந்து ஓய்வு பெற்றுத் தாயகம் திரும்பிய பிறகு பூனாவில் வீடு கட்டிக் கொண்டு வசித்து வருகிறார். அந்த வீட்டுக்குப் பெயர் 'சர்க்கஸ் வில்லா'!

ஆதாரம்: ஸ்பான் — மேனு

# பொன்னியின் செல்வன்



அமரர் கல்கி

## அத்தியாயம் நாற்பத்தைந்து

## சிறைக் கப்பல்

கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் 'யானை இறவு' என்னும் கடல் துறை பின்னுக்குச் சென்றது. பின்னர், கானகத்து மரங்கள் பின்னோக்கி ஓடின. வானத்துப் பறவைகள் பின்னோக்கிப் பறந்தன. ஓடைகள், குளங்கள், ஊர்ப் புறங்கள், கோயில்கள், மண்டபங்கள் எல்லாம் பின்னோக்கிப் பாய்ந்து மறைந்தன. மான் கூட்டம் ஒன்று அந்த யானையுடன் சிறிது தூரம் போட்டியிட்டு ஓடப் பார்த்தது. மான்களும் தோல்வியடைந்து பின் தங்கின. யானை மட்டும் முன்னால் முன்னால் முன்னால் போய்க் கொண்டிருந்தது. எத்தனை தூரம் எத்தனை நேரம் என்றெல்லாம் பூங்குழலிக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் இன்னமும் ஈழ நாட்டிலே தான் இந்த யானை போய்க் கொண்டிருக்கிறதா என்று மட்டும் பூங்குழலிக்கு வியப்பாயிருந்தது. இத்தனை நேரம் அந்தத் தீவை மூன்று தடவை கடந்து போயிருக்கலாமே? இல்லை, இல்லை! இந்த யானை ஈழ நாட்டைக் கடந்து செல்லவில்லை. பூலோகத்தைக் கடந்து போய்க் கொண்டிருக்கிறது. பூலோகத்தின் தென் முனையிலிருந்து வட முனைக்குப் போய்க் கொண்டிருக்கிறது! இதன் முதுகில் ஏறிக் கொண்டு நானும் பூமியைப் பிரதட்சணம் செய்கிறேன். நான் மட்டுமா? இளவரசருந்தான்!

முதலில், யானை மதம் பிடித்து ஓடத் தொடங்கியதும், பூங்குழலிக்குக் கொஞ்சம் பயமாய்த்தான் இருந்தது. பயத்துடன், என்ன நிகழ்கின்றது என்று தெரியாத தயக்கமும் இருந்தது. இரண்டு மூன்று தடவை இளவரசர் அவளைத் திரும்பிப் பார்த்துப் புன்னகை புரிந்தார். பின்னர்



அவனுடைய பயமும் தயக்கமும் மறைந்தன. எல்லையற்ற உற்சாகம் அவனை ஆட்கொண்டது. கொஞ்ச நேரம் வரை இப்பூவுலகில் ஒரு மத்தகஜத்தின் மீது ஏறிச் சென்றான். திடீரென்று எப்படியோ சொர்க்கத்துக்குப் போய் விட்டான். சொர்க்கத்தில் தேவேந்திரனுடைய ஐராவதத்தின் பேரில் அவன் வீற்றிருந்தான். ஐராவதம் வான வீதிகளில் ஊர்வலம் போய்க் கொண்டிருக்கிறது. கற்பக விருட்சங்கள் அவன் மீது சுகந்த மலர்களைப் பொழிந்தன. கந்தர்வர்கள் இன்னிசைக் கருவிகளிலிருந்து இனிய சுவரங்களை எழுப்பிக் கொண்டு அவன் பின்னோடு பறந்து வந்தார்கள். அப்ஸர ஸ்திரீகள் நடனமாடிக்கொண்டு வந்தார்கள். ஊர்வலம் சென்ற வான வீதியின் இருபுறமும் நட்சத்திர தீபங்கள் சுடர்விட்டு ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தன! இப்படிப் பலப் பலப் பல யுகங்கள் சென்றன!

இதோ, ஐராவதத்தின் வேகம் குறைகிறது. திடீரென்று அது பூலோகத்துக்கு வந்து விட்டது. ஈழ நாட்டின் காடுகளுக்கே வந்துவிட்டது. யானைப் பாகன் குனிந்து அதன் மத்தகத்தைத் தட்டிக் கொடுக்கிறான். அதன் காதண்டை ஏதோ சொல்கிறான். — சேச்சே! அவன் யானைப் பாகன் அல்ல; தேவேந்திரன் அல்லவா? — இல்லை; இளவரசர் அல்லவா இவர்?

நாலு புறமும் மரங்கள் சூழ்ந்த ஒரு குளத்தின் கரையில் வந்து யானை அமைதியாக நின்றது.

பூங்குழலி சிறிது கவலையுடன், இளவரசரை வரவேற்று உபசரிப்பதற்காக ஜனக் கூட்டம் வந்து அக்கரையில் நிற்கிறதோ என்று பார்த்தாள். இல்லை! பின்னால் குதிரைகள் தொடர்ந்து வருகின்றனவா என்று பார்த்தாள். அதுவும் இல்லை! குளத்தைப் பார்த்தாள். அதில் பூத்திருந்த அல்லி மலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் அப்படி அப்படியே கொடிகளுடன் பிய்த்துக் கொண்டு வந்தன. அவனை நாலுபுறமும் சூழ்ந்து கொண்டன. கன்னங்களிலும் தோள்களிலும் உடம்பு முழுவதும் அந்த மலர்கள் அவனைத் தழுவிக் கொண்டு மகிழ்ந்தன. பின்னர் அப்பொல்லாத மலர்களின் கொடிகள் அவனை இறுக்கிப் பிடித்து அமுக்கி மூச்சுத் திணறச் செய்தன. உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கி அப்பூங்கொடிகளின் பிடியிலிருந்து அவன் திமிறினான். அப்படித் திமிறிய உடனே வானுலகிலிருந்து பூமிக்குத் தலைகீழாய் வந்தது போலிருந்தது. யானை தன் பெரிய முன்னங் கால்களை மடித்துக் குனிந்தது. பிறகு பின்னங் கால்களையும் மடித்துக் கொண்டு தரையில் படுத்தது. இளவரசர் யானையின் கழுத்திலிருந்து கீழே குதித்தார். "பூங்குழலி! யானை மேலிருந்து இறங்குவதற்கு மனம் இல்லையா?" என்றார்.

பூங்குழலி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு தன் நினைவை அடைந்தாள். "ஐயா! சொர்க்கத்திலிருந்து பூமிக்கு வருவது கஷ்டந்தானே?" என்று முணுமுணுத்துக் கொண்டு இறங்கினாள்.

யானை மீண்டும் எழுந்து குளக்கரையிலிருந்த ஒரு பெரிய மரத்தின் கிளையை ஒடித்துத் தன் அகண்ட வாய்க்குள்ளே திணித்துக் கொண்டது.

அருள்மொழி வர்மர் குளத்தின் கரையோரமாகச் சென்று உட்கார்ந்தார்.



வ யங்கி நின்ற பூங்குழலியையும் அருகில் நிந்து உட்காரச் சொன்னார்.

தெளிந்த நீரில் பூங்குழலியின் முகம் பிரதிபலித்தது. யானையின் ஓட்டத்தினாலும் அச்சமயம் நேர்ந்த உள்ளக் கிளர்ச்சியினாலும் அவள் முகம் செக்கச் செவேலென்று ஆகிச் செங்கழுநீர்ப் பூவுடன் போட்டியிட்டது.

நீரில் தெரிந்த அவள் முகத்தைப் பார்த்தவண்ணம் இளவரசர், ''சமுத்திரகுமாரி! உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!'' என்றார்.

அல்லி மலர்களும செங்கழுநீர்ப் பூக்களும் மீண்டும் இடம் பெயர்ந்து வந்து பூங்குழலியின் உடல் முழுதும் முத்தமிட்டன!

''உன்னை ஏன் எனக்குப் பிடித்திருக்கிறது தெரியுமா?'' என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலியின் கண் முன்னால் வானமும் வையமும் குளமும் அதிலுள்ள மலர்களும் குளக் கரையிலிருந்த மரங்களும் சுழன்று சுழன்று வந்தன.

''எனக்குத் தெரிந்த ஒவ்வொருவரும் நான் அவர்கள் இஷ்டம் போல் நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். நீ ஒருத்தி மட்டும் என் விருப்பத்தின்படி நடக்கச் சந்தோஷத்துடன் சம்மதித்தாய்! இந்த உதவியை என்றும் மறக்க மாட்டேன், சமுத்திர குமாரி!''

பூங்குழலியின் உடம்பு ஒரு யாழ் ஆயிற்று. அவளுடைய நரம்புகள் எல்லாம் அந்த யாழின் நரம்புகள் ஆயின. பொன்வண்ண விரல்கள் அந்த நரம்புகளை மீட்டித் தேவகானத்திலும் இனிய இசையை எழுப்பின.

''சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து என் பிரயாணத்தைத் தடை செய்வதற்குச் சூழ்ச்சி செய்தார்கள்! சேநாதிபதி நாம் வரும் வழியில் பல இடையூறுகளை உண்டு பண்ணினார். நமக்கு முன் அவசரமாக ஆள் அனுப்பிக் கிராமவாசிகளை உபசாரம் நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார். பார்த்திபேந்திரர் விரைந்து திரிகோண மலைக்குப் போயிருக்கிறார். அங்கிருந்து கப்பல் ஏறி நமக்கு முன்னால் தொண்டை மானாற்றின் முகத்துவாரத்துக்கு வந்து விட வேண்டுமென்பது அவருடைய உத்தேசம். ஆகா! அவர்களுடைய சூழ்ச்சி எனக்குத் தெரியாது என்று நினைத்தார்கள்! உன் உதவியினால் அவர்களுடைய சூழ்ச்சியைத் தோற்கடித்தேன்....''

பூங்குழலிக்குச் சட்டென்று தான் செய்த காரியம் என்னவென்பது நினைவு வந்தது. அவளை நரக லோகத்தில் யம தூதர்கள் உயிரோடு செக்கிலே போட்டு ஆட்டுவது போலிருந்தது.

''ஐயா! அவர்கள் எல்லாரும் தங்களை எதிரிகளிடம் சிறைப்படாமல் தப்புவிக்க

முயன்றூர்கள். நான் பாவி! தங்களைச் சிறைப்படுத்த அழைத்துப் போகிறேன்!'' என்று கூறிவிட்டு விம்மினுள் பூங்குழலி.

''அடேடே! இது என்ன? உன்னைப் பற்றி நான் எவ்வளவோ நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்தேன். நீயும் அவர்களைப் போல் ஆகிவிட்டாயே?''

''என் சுய புத்தியினால் இந்தப் பாதகத்தை நான் செய்யவில்லை. தங்களுடைய ஆசை வார்த்தையில் மயங்கிப் பைத்தியமாகி விட்டேன். இப்போது புத்தி தெளிந்தது. நான் போகிறேன்....'' என்று சொல்லி விட்டுப் பூங்குழலி குதித்து எழுந்தாள்.

அவள் ஓடிப் போகாமல் தடுப்பதற்கு இளவரசர் அவளுடைய கரத்தை இலேசாகத் தொட்டுப் பற்றினார்.

அச்சமயத்தில் தேவலோகத்துக் கன்னிகைகளுக்கு வேறு வேலை இருக்கவில்லை. அவர்கள் வெண்ணிலவின் சாற்றைச் சந்தனக் குழம்புடன் கலந்து பூங்குழலியின் மீது தெளித்தார்கள்.

அவள் முற்றும் சக்தி இழந்து, செயலிழந்து, மீண்டும் கீழே உட்கார்ந்தாள். இரண்டு கரங்களினாலும் முகத்தை மூடிக்கொண்டு விம்மத் தொடங்கினாள்.

''சமுத்திர குமாரி! உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல எண்ணினேன். நீ இப்படி அழுவதாயிருந்தால் சொல்வதற்கில்லை. உடனே புறப்பட வேண்டியதுதான்.''

பூங்குழலி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அவரை நிமிர்ந்து பார்த்தாள்.

''அதுதான் சரி; கேள்! இவர்கள் எல்லாரும் என்னைச் சிறைப்படாமல் காப்பாற்ற முயல்கிறார்கள் என்று சொன்னாயே? அது உண்மைதான். அது எதற்காகத் தெரியுமா?''

''தங்கள் பேரில் அவர்கள் வைத்திருக்கும் அன்பினால்தான். நான் ஒருத்தி மட்டுந்தான் பாதகி!....''

''பொறு, பொறு! என்பேரில் எல்லாருக்கும் அன்புதான்! எதற்காகத் தெரியுமா? யாரோ ஜோசியர்களும் ரேகை சாஸ்திரிகளும் சொல்லியிருக்கிறார்களாம், — நான் ஒரு காலத்தில் சக்கரவர்த்தி ஆகப் போகிறேன் என்று. ஆகையால் ஒவ்வொருவரும் என்னைச் சிம்மாசனத்திலே தூக்கி வைத்து என் தலையிலே ஒரு கிரீடத்தையும் சுமத்தி விடப் பார்க்கிறார்கள். பேராசை பிடித்தவர்கள்!''

''ஐயா! அவர்கள் அப்படி ஆசைப்பட்டால் அதில் தவறு என்ன? இந்த லோகத்துக்கு மட்டுந்தானா, மூன்று உலகத்துக்கும் சக்கரவர்த்தியாகத் தாங்கள் தகுதி வாய்ந்தவர் அல்லவா?''

''ஆகா! நீயும் அவர்களைப் போலத் தான் பேசுகிறாய்! பெண்ணே! இவ்வுலகில் அரண்மனையைப் போன்ற சிறைக்கூடம் வேறில்லை; சிம்மாசனத்தைப் போன்ற பலிபீடமும் இல்லை; கிரீடம் அணிவது போன்ற தண்டனை வேறு கிடையவே கிடையாது. இதையெல்லாம் மற்றவர்களிடம் சொன்னால் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்; நீயாவது ஒப்புக் கொள்ளுவாய் என்று நினைத்தேன்.''

பூங்குழலியின் கண்ணிமைகள் பட்டுப் பூச்சியின் சிறகுகளைப் போல் அடித்துக் கொண்டன. அவள் ஆர்வம் ததும்பிய அகன்ற கண்களினால் அரசிளங் குமாரரை நோக்கினாள்.

''சமுத்திர குமாரி! உண்மையாகச் சொல்! உன்னை வாழ்நாளெல்லாம் ஒரு சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும்படி சொன்னால் உட்கார்ந்திருப்பாயா?'' என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலி சிறிது நேரம் யோசனை செய்தாள். பின்னர், ''மாட்டேன்!'' என்று தெளிவாகச் சொன்னாள்.

''பார்த்தாயா? பின்னே என்னை மட்டும் அந்தத் தண்டனைக்கு ஏன் உள்ளாக்க விரும்புகிறாய்?''

''தாங்கள் இராஜ குலத்தில் பிறந்தவர் அல்லவா?''

''இராஜ குலத்தில் பிறந்ததினால் என்ன? நல்ல வேளையாகக் கடவுள் என்னை அந்தத் தண்டனைக்கு உள்ளாக்க விரும்பவில்லை. இராஜ்யம் ஆளுவதற்கு என் மூத்த சகோதரர் இருக்கிறார்; என் பெரிய பாட்டனாரின் மகன் ஒருவரும் இருக்கிறார். அவரும் இராஜ்யம் ஆள ஆசைப்படுகிறார்....''

''ஆகா! அது தங்கள் காதுக்கும் எட்டி விட்டதா?'' என்றாள் பூங்குழலி.

''நல்ல கதை! எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா, என்ன? ஆகையால் தஞ்சாவூர் சிம்மாசனம் அதன் பேரில் உட்காருவதற்கு ஆள் இல்லாமல் தவிக்கப் போவதில்லை. அத்துடன் எனக்குக் கிரீடம் சுமந்து இராஜ்யம் ஆளும் ஆசையும் இல்லை!....''

''தங்களுக்கு எதிலேதான் ஆசை?'' என்று கேட்டாள் பூங்குழலி.

''அப்படிக் கேள், சொல்லுகிறேன்! சற்று முன் இந்த மத்தகஜத்தின் மீது உட்கார்ந்து பிரயாணம் செய்தோமே? அம்மாதிரி வனங்கள் வளர்ந்தரங்கள் எல்லாம் புகுந்து சண்டமாருதம் போல் சுற்றி வருவதில் எனக்கு ஆசை. கப்பல்களில் ஏறிக் கடல்களைக் கடந்து செல்வதில் ஆசை. உயரமான மலைகளின் உச்சிச் சிகரங்களின் மேல் ஏறுவதில்

ஆசை. கடல்களுக்கு அப்பால் இந்த இலங்கையைப் போல் எத்தனையோ இலங்கைகளும், பரத கண்டத்தைப் போல் எத்தனையோ பெரிய பெரிய கண்டங்களும் உண்டு என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அங்கே யெல்லாம் போய் அந்தந்த நாடுகளில் உள்ள அதிசயங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசை !...''

இளவரசர் கூறும் மொழிகளை அப்படியே விழுங்குவாள் போல் பூங்குழலி வாயைத் திறந்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள். ஆர்வம் கட்டுக்கடங்காமல் போகவே, ''ஐயா! அங்கே யெல்லாம் போகும் போது என்னையும் அழைத்துப் போவீர்களா?'' என்று கேட்டாள்.

''நான் சொன்னவை யெல்லாம் என் ஆசைகள். அவை நிறைவேறப் போகின்றன என்று யார் கண்டது ?'' என்றார் இளவரசர்.

பூங்குழலி கனவு லோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்தாள். ''ஐயா! அப்படியானால் தாங்கள் எதற்காக இப்போது தஞ்சாவூருக்குப் போக வேண்டும்?'' என்றாள்.

''அதைச் சொல்லத்தான் ஆரம்பித்தேன். அதற்குள் நீ பேச்சை மாற்றி எங்கேயோ கொண்டு போய் விட்டாய். சமுத்திர குமாரி ! இந்த இலங்கைத் தீவில் வாய் திறந்து பேசும் சக்தியற்ற ஊமை ஸ்திரீ ஒருத்தி அங்குமிங்கும் சித்தப் பிரமை கொண்டவள் போல் சுற்றிக் கொண்டிருக்கிறாளே? அவளை உனக்குத் தெரியுமா ?'' என்று கேட்டார் இளவரசர் அருள்மொழிவர்மர்.

பூங்குழலி அடங்கா வியப்புடன், ''தெரியும், இளவரசே! எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றாள்.

''காரணம் பிறகு சொல்லுகிறேன். அந்த ஸ்திரீயை உனக்கு எப்படித் தெரியும்? அவளைப் பற்றி என்ன தெரியும்?'' என்று கேட்டார்.

''ஐயா! நான் குழந்தை வயதில் என்னைப் பெற்ற தாயை இழந்தேன். பிறகு எனக்கு அன்னையின் அன்பை அளித்தவள் அந்த மூதாட்டிதான். அவள் என் குரு; என் தெய்வம். அவளைப் பற்றி வேறு என்ன கேட்கிறீர்கள் ?''

''அந்த மூதாட்டிக்கு நிரந்தரமான வாசஸ்தலம் ஏதாவது உண்டா ? எப்போதும் சுற்றித் திரிந்து கொண்டேயிருப்பவள்தானா ?''

''கோடிக்கரையிலிருந்து இலங்கையை நெருங்கி வரும் போது பூதத் தீவு என்று ஒரு தீவு இருக்கிறது. அதில் ஒரு பாறைக் குகை இருக்கிறது. அங்கேதான் அந்த அம்மாள் பெரும்பாலும் இருப்பாள். அவ்விடத்தில்தான் தங்களை நான் முதன் முதலில் பார்த்தேன்.''

''என்ன அங்கே பார்த்தாயா ?''

''ஆம்! அந்தப் பாறைக் குகையில் சில அழகான சித்திரங்களை அந்த அம்மாள் எழுதியிருக்கிறாள். அந்தச் சித்திரங்களில் தங்கள் உருவத்தையும் கண்டேன்! பிறகு ஒரு நாள் கோடிக் கரையில் தங்களை நேரில் பார்த்த போது, அதனால்தான் பிரமித்துப் போனேன்.''

''ஓ! இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. விளங்காத விஷயமும் விளங்குகிறது. சமுத்திர குமாரி! அந்த மூதாட்டிக்கும் எனக்கும் உள்ள உறவைப் பற்றியும் உனக்குத் தெரியுமா?''

''ஏதோ உறவு இருக்க வேண்டும் என்று ஊகித்தேன். ஆனால் இன்ன உறவு என்று தெரியாது !''

''பூங்குழலி! அந்த மூதாட்டி என் பெரிய தாயார். நியாயமாகத் தஞ்சாவூர் சிங்காசனத்தில் வீற்றிருக்க வேண்டிய பெருமாட்டி அவள்....''



''கடவுளே! அப்படியா ?''

''ஆனால் விதியின் எழுத்து வேறு விதமாயிருந்தது. யார் என்ன செய்ய முடியும்? என் தந்தையின் உள்ளத்தில் ஏதோ ஓர் இரகசியத் துன்பம் இருந்து வேதனைப்படுத்தி வருகிறது என்று சில சமயம் எனக்குத் தோன்றுவதுண்டு. அதன் உண்மையை இப்போதுதான் கண்டுபிடித்தேன். என் பெரிய தாயார் இறந்து விட்டதாக என் தந்தை எண்ணிக் கொண்டிருக்கிறார். தம்மால் இறந்துவிட்டதாகவும் எண்ணிக் கொண்டிருக்கிறார். அவள் இறக்கவில்லை, உயிரோடிருக்கிறாள் என்பதை அவருக்கு நான் போய்ச் சொல்ல வேண்டும். சொன்னால் அவர் இருதயத்தின் தாபம் தணியும்; அவரை அரித்துக் கொண்டிருக்கும் மன வேதனை தீரும். சக்கரவர்த்தியின் உடல் நிலை சரியாக இல்லை

என்றுதான் உனக்குத் தெரிந்திருக்குமே? மனித வாழ்க்கை அநித்தியமானது. எப்போது என்ன நேரிடும் என்று யாரும் சொல்வதற்கில்லை. வானத்தில் சில நாளாகத் தூமகேது ஒன்று தோன்றி வருகிறது. அதைப் பற்றி ஜனங்கள் பலவாறு பேசிக் கொள்கிறார்கள். சக்கரவர்த்தியின் மனமும் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. இந்த நிலைமையில், விபரீதமாக ஏதுவும் நேர்வதற்கு முன்னால், நான் கண்டுபிடித்த விவரத்தை அவருக்குத் தெரிவித்துவிட வேண்டும். சமுத்திர குமாரி! அதற்காகவேதான் நான் அவசரமாகத் தஞ்சைக்குப் போக விரும்புகிறேன். நீ எனக்குச் செய்யும் உதவி எவ்வளவு முக்கியமானது என்று இப்போது தெரிகிறது அல்லவா?''

ஆர்வத்துடன் இளவரசரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பூங்குழலி ஒரு பெருமூச்சு விட்டாள். ''கடவுளே! மனித வாழ்க்கையில் ஏன் இத்தனை இன்பத்துடன் துன்பத்தையும் வைத்தாய்?'' என்று முணுமுணுத்தாள்.



பிறகு இளவரசரைப் பார்த்து, ''ஐயா! இந்தப் பேதையினால் தங்களுக்கு ஏதேனும் உதவி ஏற்பட்டால் அது என் பூர்வ ஜன்ம பாக்கியம். ஆனால் இதற்கு என் உதவி ஏன்? சேநாதிபதி முதலியவர்களிடம் சொல்லியிருந்தால் அவர்கள் தங்களைத் தஞ்சைக்கு அனுப்பியிருக்க மாட்டார்களா?'' என்றாள்.

''இல்லை; அவர்கள் யாரிடமும் சொல்ல நான் விரும்பவில்லை. என்னை எப்படியாவது சிம்மாசனம் ஏற்றுவதில் முனைந்திருக்கும் அவர்களுக்கு இது ஒன்றும் முக்கியமாகத் தோன்றாது. என் தந்தையின் அந்தரங்கத்தை அவர்களிடமெல்லாம் சொல்வதற்கு நான் இஷ்டப்படவில்லை. சொன்னால் அவர்கள் புரிந்து கொண்டிருக்கவும் மாட்டார்கள். உன்னிடம் இன்னொரு உதவியும் கோருகிறேன், சமுத்திர குமாரி! அதற்காகவே முக்கியமாக இங்கே யானையை நிறுத்தினேன். எனக்குச் சக்கரவர்த்தி பட்டமும் சாம்ராஜ்ய சிம்மாசனமும் அளித்த ஜோசியர்கள் என் வாழ்க்கையில் பல அபாயங்கள் — பல கண்டங்கள் — ஏற்படும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இந்தப் பிரயாணத்தில் அப்படி ஏதாவது எனக்கு நேர்ந்து விட்டால்.... என் தந்தையை நான் சந்திக்க முடியாமல் போய் விட்டால், நீ சக்கரவர்த்தியிடம் போக வேண்டும். எப்படியாவது அவரைச் சந்தித்து என் பெரியம்மை உயிரோடிருக்கிறாள் என்பதை அவரிடம் சொல்ல வேண்டும். அவர் இஷ்டப்பட்டால் அந்த மூதாட்டியை அவரிடம் அழைத்துப் போக வேண்டும். இந்தக் காரியத்தையெல்லாம் செய்வாயா, பூங்குழலி?''

''தங்களுக்கு ஒரு கண்டமும் நேராது; அபாயம் தங்களிடம் நெருங்கப் பயந்து ஓடும். கட்டாயம் பத்திரமாய்த் தஞ்சாவூர் போய்ச் சேர்வீர்கள்....''

''ஒரு வேளை எனக்கு ஏதாவது நேர்ந்தால் நான் கோரியபடி செய்வாய் அல்லவா?''

''கட்டாயம் செய்கிறேன், இளவரசே!''

''இந்த முக்கியமான காரியத்தை வேறு யாரிடம் நான் ஒப்புவிக்க முடியும்? நீயே சொல், பார்க்கலாம்.''

''என்னிடம் ஒப்புவிக்க வேண்டிய காரியத்தை ஒப்புவித்தாகி விட்டது. இத்துடன் என் உபயோகம் தீர்ந்து விட்டதல்லவா? நான் விடைபெற்றுக் கொள்ளலாமா?'' என்றாள் பூங்குழலி. அவளுடைய குரல் கண்ணீரின் ஈரப் பசையோடு கலந்து வந்தது.

''ஆகா! அது எப்படி? தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை இன்னும் நாம் அடையவில்லையே? சோழநாட்டுப் போர்க் கப்பலை இன்னும் காணவில்லையே? அதற்குள் எப்படி விடைபெற்றுக் கொள்ளலாம்? கோபித்துக் கொள்ளாதே! இன்னும் சிறிது நேரம் பல்லைக் கடித்துக் கொண்டு என்னுடைய சகவாசத்தைப் பொறுத்துக் கொள். யானை மேல் மறுபடியும் ஏறி இன்னும் கொஞ்ச தூரம் என்னுடன் வா! புலிக்கொடி பறக்கும் கப்பலைத் தூரத்தில் கண்டதும் நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லலாம்!'' என்றார் இளவரசர்.

மறுமொழி ஒன்றும் சொல்லாமல் பூங்குழலி யானை நின்ற இடத்தை நோக்கி நடந்தாள். இளவரசரும்

சென்றார். அவருடைய வார்த்தைக்குப் படிந்து யானை மண்டியிட்டுப் படுத்தது. இருவரும் அதன் முதுகில் ஏறிக் கொண்டார்கள். முன்போல் யானையை இளவரசர் விரட்ட வில்லை. ஆயினும் விரைவாகவே நடந்து சென்றது.

"சமுத்திரகுமாரி! எனக்கு மிகவும் பிடித்த சில காரியங்களைப் பற்றிச் சொன்னேனே? உனக்குப் பிடித்தவை என்னவென்று சொல்ல வேண்டாமா?" என்றார் அருள்மொழிவர்மர்.

"எருமை வாகனத்தின் மீது வரும் யமனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். நள்ளிரவில் பாறை உச்சியின் மீது நின்று கொண்டு கொள்ளிவாய்ப் பிசாசுகளை நேரம் போவதே தெரியாமல் பார்ப்பதற்கு ரொம்பப் பிடிக்கும்...."

"நல்ல விசித்திரமான குணமுள்ள பெண் நீ!"

"தங்கள் சிநேகிதர் கூறியது போல் 'பைத்தியக்காரப் பெண்' என்று சொல்லுங்கள். அதற்காக நான் வருத்தப்படமாட்டேன். அப்புறம் சிறிய படகில் ஏறி அலைகடலின் நடுவில் போய்க்கொண்டே இருப்பதற்குப் பிடிக்கும். அதிலும் கடலில் சுழற் காற்று அடித்ததோ, என் உற்சாகம் எல்லை கடந்துவிடும். அப்போது படகு ஒரு சமயம் அலை உச்சியில் ஏறி வானுலகத்தை எட்டிப் பிடிக்கும்; மறுகணம் பாதாளத்தில் தடாலென்று விழும். அதைப் போல் எனக்குப் பிடித்த காரியம் வேறொன்றுமில்லை. சற்று முன்னால் இந்த யானை வெறி கொண்டதுபோல் ஓடி வந்ததே, அப்போதும் எனக்கு அவ்வளவு உற்சாகமாகவே இருந்தது!"



"ஆ! பூங்குழலி! முருகப் பெருமான் உன்னுடைய புன்னகையை நாடி வந்திருந்தால் அடியோடு தோற்றிருப்பார். யானை முகனை அனுப்பிக் குறமகள் வள்ளியைப் பயமுறுத்தினாரே, அந்த யுக்தி ஒன்றும் உன்னிடம் பலித்திராது!" என்றார் இளவரசர்.

அவர்கள் தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தை அணுகியபோது "ஆ! இது என்ன?" என்று பூங்குழலி கூச்சலிட்டாள்.

"என்ன? என்ன?" என்று இளவரசர் ஆவலுடன் கேட்டார்.

"புலிக் கொடியுடன் கூடிய மரக்கலங்கள் நான் பார்த்த இடத்தில் இல்லையே? என்னைப் பற்றித் தாங்கள் என்ன நினைப்பீர்கள்? சேநாதிபதி என் மீது சந்தேகப்பட்டது போல் தங்களை ஏமாற்றி அழைத்து வந்தவள் ஆகிவிட்டேனே!" என்றாள்.

"அப்படி நான் ஒரு நாளும் நினைக்க மாட்டேன், பூங்குழலி! நீ பொய் சொல்லி என்னை வஞ்சித்து அழைத்து வர எவ்வித முகாந்தரமும் இல்லை..."

"ஏன் இல்லை, இளவரசே! காதல் காரணமாக இருக்கலாம் அல்லவா? உலகமெல்லாம் அழகில் மன்மதனையும் வீர பராக்கிரமத்தில் அர்ச்சுனனையும் நிகர்த்தவர் என்று போற்றும் பொன்னியின் செல்வர் மீது மோகங் கொண்டு ஒரு பேதைப் பெண் இம்மாதிரி செய்திருக்கலாம் அல்லவா?"

"பெண்ணே! சேநாதிபதி இங்கே இச்சமயம் இருந்திருந்தால் ஒரு வேளை அவ்வாறு சந்தேகப் பட்டிருக்கலாம். ஆனால் உன் மனத்திலும் என் மனத்திலும் அத்தகைய பைத்தியக்கார எண்ணங்களுக்கு இடமில்லை."

"ஐயா! பழையாறை அரண்மனையில் வானதி தேவி என்று வீரர் குலத்து இளவரசி ஒருத்தி இருக்கிறாளே, அவளைப் பற்றியும் அப்படித் தாங்கள் சொல்வீர்களா?"

"ஆம், ஆம்! அதை நான் மறந்து விடவில்லை. இந்தச் சேநாதிபதியும் என் தமக்கையும் சேர்ந்து அந்தப் பெண்ணை என் கழுத்தில் கட்டிவிடப் பார்க்கிறார்கள். சோழ குல சிம்மாசனத்தில் அமர வேண்டும் என்ற ஆசையினால் அந்தப் பேதைப் பெண்ணுக்கும் அத்தகைய ஆசை ஒரு வேளை இருக்கலாம். அதற்கு நான் பொறுப்பல்ல, பூங்குழலி! அது போகட்டும்! நீ பார்த்த போது கப்பல்கள் எங்கே இருந்தன?" என்று இளவரசர் கேட்டார்.

"அதோ அந்த மூலையில்தான் நின்று கொண்டிருந்தன! எனக்கு மிக நன்றாக நினைவிலிருக்கிறது!" என்றாள் பூங்குழலி.

"அதனால் என்ன? கொஞ்சம் அப்பால் இப்பால் நகர்ந்து சென்று

நிற்கக் கூடும் அல்லவா ? எல்லாவற்றுக்கும் கடற்கரை வரையில் போய்ப் பார்த்து விடுவோம் !'' என்றார் இளவரசர்.

'' கப்பல்கள் போயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இப்பொழுது எதற்காகப் போய்த் தேட வேண்டும் ?'' என்றாள் பூங்குழலி.

''ஆகா! நீ அப்படி நினைக்கலாம். ஆனால் எனக்கு அதைப் போல் ஏமாற்றம் தருவது வேறொன்றுமில்லை!'' என்றார் இளவரசர்.

மூந்நூறு வருஷங்களுக்கு முன்னால் இலங்கை இளவரசனாகிய மானவன்மன் காஞ்சிபுரத்தில் வந்து சரண்புகுந்திருந்தான். அவனுக்கு இராஜ்யத்தை மீட்டுத் தருவதற்காக மாமல்ல சக்கரவர்த்தி ஒரு பெரும் படையை அனுப்பினார். அவர் அனுப்பிய படைகள் இந்தப் பிரதேசத்திலேதான் வந்து இறங்கின. அச்சமயம் தொண்டைமான் ஆறு உள்ள இடத்தில் ஒரு சிறிய ஓடைதான் இருந்தது. கப்பல்கள் வந்து நிற்பதற்கும் படைகள் இறங்குவதற்கும் சௌகரியமாவதற்கு அந்த ஓடையை வெட்டி ஆழமாகவும் பெரிதாகவும் ஆக்கினார்கள். பிறகு அந்த ஓடை தொண்டைமானாறு என்று பெயர் பெற்றது. முகத்துவாரத்தின் அருகில் அந்த நதி வளைந்து வளைந்து சென்றது. இருபுறமும் மரங்கள் அடர்ந்திருந்தன. இதனால் கடலிலிருந்து பார்ப்போருக்குத் தெரியாதபடி கப்பல்கள் நிற்பதற்கு வசதியாக இருந்தது.

அவ்வாறு பூமிக்குள் ஆறு புகுந்து தண்ணீர் நிறையத் தேங்கியிருந்த இடம் ஒன்றிலேதான் இளவரசரைச் சிறைப் பிடிக்க வந்த மரக்கலங்களைப் பூங்குழலி பார்த்திருந்தாள். முதலில் பார்த்த இடத்தில் அந்த மரக்கலங்கள் இப்போது காணப்படவில்லை. அதாவது பாய்மரங்கள், கொடிகள் முதலியவை தென்படவில்லை. அந்த இடத்தை மேலும் நெருங்கிப் பார்த்த போது ஓர் அதிசயமான காட்சி புலப்பட்டது. கப்பல் ஒன்று வெள்ளத்தை விட்டு அதிக தூரம் பூமிக்குள்ளே சென்று சேற்றிலே புதைந்து போயிருந்தது. அதன் பாய்மரங்கள் கொடிகள் முதலியவை ஒடிந்தும் சிதைந்தும் கிடந்தன. அதில் மனிதர்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. இரண்டு நாளைக்கு முன்னால் அவள் பார்த்த கப்பல்களிலே அது ஒன்று என்பது பூங்குழலிக்கு நன்கு தெரிந்தது.

இளவரசரைச் சிறைப் பிடித்துக் கொண்டு போவதற்கென்று வந்த கப்பல்களில் ஒன்று. அதுவே சேற்றில் சிறைப்பட்டுக் கிடப்பதைக் கண்டு பூங்குழலி ஆச்சரியக் கடலில் முழ்கினாள்!

(தொடரும்)

## 6. மகாத்மாவும் தமிழ்ப் பெண்மணியும்

தென்னாப்பிரிக்காவில் நிற வெறியை எதிர்த்துச் சத்தியாக்கிரகப் போராட்டம் நடந்த சமயம். ஒரு வெள்ளைக்கார வெறியன் காந்திஜியின்மீது கோபம் கொண்டு அவரைச் சுடவும் துப்பாக்கியை எடுத்து விட்டான். ஒரு தமிழ்ப் பெண்மணி வீராவேசமாகப் பாய்ந்து காந்திஜியை மறைத்து நின்று கொண்டு, 'இப்போது சுடு' என்றாள். அந்த வெறியனின் கைத் துப்பாக்கி அவளையும் அறியாமல் கீழே விழுந்தது.




அவள் வீரத்தையும், துணிச்சலையும் கண்ட காந்திஜியின் கண்களில் நீர் துளித்தது. அச்சிறுமியைக் காந்திஜி தம் ஆயுள் உள்ளளவும் மறக்கவே யில்லை.

அவள்தான் 'வள்ளியம்மை' என்கிற ஹரிஜனப் பெண். தஞ்சை மாவட்டத்தில் உள்ள தில்லையாடி என்கிற கிராமத்தைச் சேர்ந்தவள். கூலி வேலை செய்து பிழைக்கத் தென்னாப்பிரிக்காவுக்கு வந்தவள்.

1897ல் பிறந்து, மக்களின் உரிமைக்காகப் போராடிச் சிறைவாசத்தின் கொடுமையால் எலும்பும் தோலுமாகி விடுதலை பெற்ற ஒரு மாதத்துக்குள் உயிரை விட்டாள். 1915ல் தமிழ் நாட்டில் காந்திஜி பேசிய ஒவ்வொரு கூட்டத்திலும் வள்ளியம்மையையும் மற்ற தமிழ் சத்தியாக்கிரகிகளையும் குறிப்பிட்டு என் நன்றியை எப்படித் தெரிவிப்பேன் என்று உணர்ச்சிப் பரவசமாகிப் பேசியிருக்கிறார்.

1915 ஏப்ரலில் தில்லையாடி சுப்பிரமணிய ஆச்சாரியாரின் அழைப்புக்கிணங்கி காந்திஜி அக்கிராமத்துக்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்து தம் நன்றியை வெளியிட்டார். டர்பனில் வள்ளியம்மை நினைவாக ஒரு மண்டபம் கட்ட காந்திஜி முயன்றார். ஆனால் அம்முயற்சி ஈடேறவில்லை.

—ஜனன்

# ராமாயணம்

## ராஜாஜி

### 24. சீதையின் தீர்மானம்

அந்தப்புரத்தில் நடந்த விஷயங்கள் இன்னும் நகரத்து ஜனங்களுக்குச் சரியாகத் தெரியாது. ராமனோ வனம் செல்லுவதில் தன் முழு மனத்தையும் செலுத்தி அதற்கு வேண்டியதை யெல்லாம் மிகவும் துரிதமாகக் கவனித்து வந்தான்.

எல்லாக் காரியங்களையும் முடித்து விட்டுக் கௌசல்யா தேவியிடம் மங்கள ஆசீர்வாதம் பெறப் போனான்.

''நீ போய்விட்ட பிறகு நான் இந்த அயோத்தியில் எப்படி இருக்க முடியும்? உன்னுடன் நானும் வனம் போவதே நலம்'' என்று கௌசல்யை திரும்பச் சொன்னாள்.

வேண்டாமென்று ராமன் அவளுக்குக் காரணங்களையும் தருமத்தையும் எடுத்துக் காட்டினான். அரசனாகிய புருஷனை விட்டு விட்டு மகனோடு காடு செல்வது தகாது. மூப்படைந்த புருஷனுக்கு சிசுருஷை செய்து கொண்டு சுகமோ கஷ்டமோ சமாளித்துக் கொண்டு அயோத்தியில் இருப்பது தான் கடமை என்பது அவளுக்கே தெரிந்த விஷயமானாலும், துக்கத்தால் குழப்பமடைந்திருந்த அவளுக்கு ராமன் எடுத்துச் சொன்னான். தாயுள்ளத்தில் கிளம்பிய புகையை அகற்றி விட்டு, ராமன் சொல்வதே சரியென்று ஒப்புக் கொண்டாள்.

மகனை சுவஸ்தி மந்திரங்கள் சொல்லி ஆசீர்வதித்து, ''தகப்பன் ஆணையைச் செய்து முடித்து விட்டு வெற்றியுடன் திரும்பி வருவாயாக'' என்றாள்.

''பதினான்கு வருஷங்களையும் சுலபமாகக் கழித்து விட்டு வந்துவிடுகிறேன்'' என்று ராமனும் சிரித்துக் கொண்டு சொல்லி அவளைத் தேற்றினான்.

தாயின் மங்கள ஆசிகளைப் பெற்ற சக்கரவர்த்தித் திருமகனுடைய முகத்தில் தேஜஸ் முன்னைவிட அதிகமாகப் பிரகாசித்தது என்கிறார் முனிவர். கடமையைக் கருதி ஒரு பெரிய தியாகம் செய்யச் சங்கற்பம் செய்பவர்களுடைய முகத்தைப் பார்க்கும்போதுதான் முனிவருடைய சொற்களின் பொருள் விளங்கும்.

அரசன் அழைத்து வரச் சொன்னான் என்று சுமந்திரனோடு சென்றான் அல்லவா ராமன்? தேரும் குடையும் சாமரங்களும் பரிவாரமுமாக எப்போது திரும்பி வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் சீதை. தந்தையின் வாக்கை நிறைவேற்றுவதற்காக வனத்துக்குப் போகிறேன் என்று தன் காதலிக்கு எவ்வாறு சொல்லிச் சமாளிப்பது என்கிற ஏக்கத்தோடே சென்றான் ராமன். தேரும் சாமரங்களுமின்றி ராமன் தனியாகத் திரும்பி வருவதைப் பார்த்தாள். முகத்தில் ஏக்கத்தையும் கண்டாள் சீதை.

'ஏன் என் நாதர் மனத்தில் ஏதோ கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்? எது எப்படியாயினும் நம்மிருவருக்கும் உள்ள அன்பு ஒன்று போதாதா?' என்று எண்ணி, ''என்ன விஷயம்? ஒரு மாதிரி இருக்கிறீர்களே?'' என்று கேட்டாள்.

வெகு சுருக்கமாகவே ராமன் நடந்த விஷயத்தைச் சொன்னான். சொல்லி விட்டு, ''வைதேஹி! நீ என்னை விட்டுப் பிரிந்து இவ்விடம் தனியாக இருப்பதில் உனக்கு ஏற்படக் கூடிய துக்கம் எனக்குத் தெரியும். ஆயினும் தருமத்தை நீ நன்றாக அறிவாய். ஜனகனுடைய மகளுக்கு நான் சொல்லவேண்டியது ஒன்றும் இல்லை. மகாராஜாவிடமும் தாய்மார்கள் மூவரிடமும் ஜாக்கிரதையாக நடந்து கொள். மற்ற அந்தப்புரப் பெண்களைக் காட்டிலும் அதிகமாக நீ எதையும் எதிர்பார்க்க வேண்டாம். அரசனாகிய பரதனிடம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். உன்னிடம் அவனுக்குள்ள பிரியம் குறையாமல் இருக்கும்படி

நடந்து கொள்ள வேண்டும். வைதேஹி! என்மேல் நீ வைத்திருக்கும் அன்பு கொஞ்சமும் குறையாமல் பார்த்துக் கொள்வாய் அல்லவா? நான் வனத்தில் பதினான்கு வருடங்கள் கழித்துத் திரும்பி வருவேன். அதுவரையில் பூஜையையும் சரியாகக் காத்து வரவேண்டும். கௌசல்யா தேவி மிகவும் துக்கப்படுவாள். அவளைக் கவலையோடு பார்த்து வரவேண்டும். பரதனும் சத்ருக்னனும் எனக்குப் பிரியமானவர்கள். அவர்களைச் சகோதரர்கள் போல் கருதி வருவாய். அரச குல சுபாவங்களை மனத்தில் வைத்து நடந்து கொள். என்னை அதிகமாகப் புகழ்ந்து பேசாதே. நான் இன்றே வனம் போக வேண்டும். மனத்தை நிலையில் வைத்துக் கொண்டிருப்பாயாக'' என்றான் ராமன்.

இந்தப் பேச்சைக் கேட்ட சீதைக்குப் பெரும் கோபம் வந்து விட்டது. அன்பெல்லாம் கோப உருவமாக வெளிப்பட்டது.

''நன்றாகப் பேசினீர்! தருமமெல்லாம் அறிந்த ராஜ குமாரரே! எனக்குச் சிரிப்பு வருகிறது. புருஷன் வேறு, மனைவி வேறு என்பதை இன்றுதான் உம்முடைய பேச்சில் அறிந்தேன். ராமர் வனம் போக வேண்டியதானால் அந்த ஆணையானது சீதைக்கும்தான். வனத்தில் செல்லும்போது நான் முன்னால் சென்று காட்டுப் பாதையில் உள்ள முள்ளையும் புல்லையும் மிதித்து



உமக்கு மெதுவாக்கிக் கொண்டு செல்வேன். பிடிவாதம் செய்கிறேன் என்று கோபம் வேண்டாம். என்னுடைய தாயும் தந்தையும் தருமத்தைப் பற்றி எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். நீர் இன்று எனக்குச் சொன்னது நான் இதற்கு முன் கேட்டதற்கெல்லாம் முற்றிலும் விரோதமாக இருக்கிறது. நீர் செல்லும் இடம் நானும் கூடச் செல்ல வேண்டும் என்பதே நான் கற்ற ஒழுக்கம். இன்றே நீர் வனம் போக வேண்டியதானால் உம்முடன் நானும் இன்றே போவேன். இதைப் பற்றி அதிகம் பேச வேண்டிய அவசியமில்லை. வனம் சென்றால் நான் கஷ்டப்படுவேன்; துக்கப்படுவேன் என்றெல்லாம் எண்ண வேண்டாம். வனவாசத்தை மிகவும் சந்தோஷமாகவே அனுபவிப்பேன். உம்முடன் இருந்தால் வனவாசம் என்பது எனக்கு ஒரு விளையாட்டாகத்தான் இருக்கும். இங்கே என்னைத் தனியாக விட்டுப் போகாதீர். நீர் வனம் சென்றால் இங்கே எனக்கு என்ன வேலை? வனத்தில் என்னால் உமக்கு ஓர் இடைஞ்சலும் ஏற்படாது. காயும் கிழங்கும் சாப்பிட்டுக் கொண்டு நிச்சயமாக உமக்கு முன்னால் நான் நடந்து செல்வேன். உம்முடன் சென்று மலையும் ஆறும் பார்த்து மகிழ வேண்டுமென்பது எனது ஆசை. பறவைகளும் புஷ்பங்களும் நிறைந்த வனத்தில் உம்முடன் நானும் இருந்து சந்தோஷமாக ஆறுகளில் குளித்தும் நித்திய கருமங்களைச் செய்தும் சுகமாகக் காலம் கழிப்பேன். உம்முடன் இல்லாமல் சுவர்க்கமும் எனக்கு வேண்டாம். என்னைத் தனியாக விட்டுப் போனால் என் மரணம் நிச்சயம். நான் உம்மிடம் யாசிக்கிறேன். என்னை அழைத்துப் போக வேண்டும். என்மேல் இரக்கம் கொள்வீர். என்னை நிர்க்கதியாக்க வேண்டாம்'' என்றாள் சீதை. கோபமாக ஆரம்பித்தவள் மிகவும் கெஞ்சிக் கேட்டு முடித்தாள்.

ராமன் காட்டில் ஏற்படும் பயம், கஷ்டம் எல்லாவற்றையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்லி, ''நீ காட்டுக்கு என்னுடன் வருவது தகாது'' என்றான்.

சீதையின் கண்களில் நீர் பெருகிற்று. ''புலி, சிங்கம், கரடி, பாம்பு இவையெல்லாம் உம்மைக் கண்டால் தூர விலகிச் செல்லும். நீர் சொல்லும் வெய்யில், மழை, காற்று, பசி முள் அனைத்தும் நான் சந்தோஷமாகப் பொறுத்துக் கொள்வேன். எனக்கு வனவாசத்தைப் பற்றிக் கொஞ்சமும் பயமில்லை. நீர் என்னை இங்கே விட்டுவிட்டுப் போனீரானால் என் உயிர் என்னை விட்டு நீங்கும், நிச்சயம்'' என்று சந்தேகத்துக்கும் மறு பேச்சுக்கும் இடமின்றிச் சொல்லிவிட்டாள்.

சீதை அத்தோடு விடவில்லை. ''நான் மிதிலையில் இருந்த காலத்தில் பிராமணர்களும் ஜோதிடர்களும் இவளுக்கு வனவாசப் பிராப்தி என்று என்னைக் குறித்து என் தாயிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் தனியாக வனவாசம் செய்ய முடியுமா? உம்முடன் சேர்ந்து வனவாசம் செய்துவிட்டு எப்படியும் நடக்க வேண்டிய அந்த நிகழ்ச்சியைச் சுகமாக முடித்து விடுவதற்கு இதுவே சமயம். வனவாசம் மிகக் கஷ்டம் என்பதெல்லாம் யாருக்கு? இந்திரியங்களை வசப்படுத்தாமலிருக்கும் ஸ்திரீ புருஷர்களுக்குத்தான். நீராவது நானாவது அவ்விதம் கஷ்டப்பட மாட்டோம். என்னைத் தடுக்காதீர்'' என்றாள். **(தொடரும்)**

## விசிறியில் வீசினால்



தகவல் : ரமேஷ்

'' உங்களுக்கு ஏதாவது விநோத ஆசைகள் ஏற்பட்டது உண்டா ?'' என்று கேட்டபோது ஒருவர் சொன்னது:

'' சுற்றிக்கொண்டிருக்கும் மின்சார விசிறியின்மீது ஒரு கோழி முட்டையை விட்டெறிய வேண்டும் என்று எனக்கு ரொம்ப நாட்களாக ஆசை!''

- உமன் அண்டு ஹோம்

இதுபோன்ற விநோத ஆசை ஏதேனும் உங்களுக்கு ஏற்பட்டதுண்டா ? நாலைந்து வரிகளுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு உண்டு. - ஆசிரியர்.

முடிவு தேதி 5-9-69. கடிதத் தொடர்பு இல்லை. பிரசுரமாகாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது. உறையின்மேல் விநோத ஆசை என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

# விசேஷ அளிப்பு!

## ஸ்டாக் உள்ளவரை




ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின் அளவு
எப்போதும் போல் தான் (450 கிராம் நெட்)

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்**
**காட்பரீஸ் போர்ன்விடா!**

Bensons-2536.Tm

# வாய்மை வென்றது!

ரா. கணபதி

ஹரிச்சந்திரன் மிகுந்த மனோ வியாகுலத்துடன் குலகுரு வசிஷ்டரை அடைந்தான்.

''தேசத்தில் இப்படிப் பஞ்சமும் துர்பிட்சமும் தாண்டவமாடுகின்றனவே. இதற்குக் காரணம் என்ன? இதற்குப் பரிகாரம் என்ன?'' என்று வினவினான்.

''காரணம் உனக்கே தெரியும். நான் அதைச் சொன்னால் மனம் நொந்து போவாய். பரிகாரம் மட்டும் சொல்கிறேன், கேள்: முன்னொரு சமயம் கொடும் வறட்சி நிலை வந்துற்ற போது தேவி பராசக்தியை மாமுனிவர்கள் பிரார்த்திக்க, அன்னை தன் உடலிலிருந்தே பயிர் பச்சைகளையும் காய்கறி கனி வர்க்கங்களையும் உண்டாக்கித் தந்து பஞ்சத்தைப் பஞ்சாகப் பறக்கச் செய்தாள். அந்தக் கோலத்தில் அருளிய தேவியை சதாக்ஷி என்றும் சாகம்பரி என்றும் அழைப்பார்கள். ஜீவ ஓட்டத்துக்குக் காரணமான அந்தத் தேவியே வறண்ட பாலையில் தன் க்ஷீரம் போல் நீரூற்றைத் தோற்றுவிக்கிறாள். பட்ட மரத்தில் பச்சையைப் பாய்ச்சுவது அந்த உயிர்ச் சக்தியின் இன்னருளே. சதாக்ஷியை ஆராதனை செய்வாய். துர்ப்பிட்சம் தொலையும். அதற்குமுன், இந்தப் பஞ்சத்தின் காரணத்தில் மனத்தைச் செலுத்து. அந்தக் காரணத்தை எண்ணி உன் உள்ளத்தை ரணமாக்கிக் கொள்ளாதே. பச்சாத்தாபத்தால் சகல பாபமும் தீரும்'' என்றார் வசிஷ்டர்.

மேக மூட்டம்போல் ஏற்கனவே ஹரிச்சந்திரன் அறிந்திருந்த அந்தக் காரணம் இப்போது நன்கு உறுதிப்பட்டு விட்டது. 'உள்ளத்தை ரணமாக்கிக் கொள்ளாதே' என்று குரு கூறியிருப்பினும் ஹரிச்சந்திரனின் இதயம் நோகத்தான் செய்தது. தேசத்துடனேயே தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு விட்ட மன்னர்கள் செய்கிற பிழை அந்தத் தேசம் முழுவதையும் பாதிக்கும் என அவன் அறிவான். தான் செய்த பெரும் பாவத்துக்காகவே இன்று மக்கள் அனைவரும் பஞ்சத்தில் அவதியுறுகின்றனர் என்று புரிந்து கொண்டு மனம்* துடித்தான்.

அவன் செய்த அந்த மாபாவம் என்ன? அசத்தியம்தான்!

'ஹரிச்சந்திரனா பொய்ம்மைக்கு ஆட்பட்டான்?' என்று வியக்க வேண்டாம். பொய்ம்மையின் அடி ஆழம் வரையில் சென்றதாலேயேதான் அவன் பிற்பாடு சத்திய ஆவேசம் பெற்றான். உலக கோளத்தில் கிழக்காகச் சென்று கொண்டே இருந்தால், தானாக மேற்குக்கு வந்து விடுவோம்! உணர்வுகளும் இப்படியே எதிர்த் திசையில் கொண்டு விட்டுவிடும்.

இது தேவி பாகவதத்தில் உள்ள வரலாறு.

புத்திரப் பேறு வாய்க்கப் பெறாத ஹரிச்சந்திரன் வருண பகவானைக் குறித்து வேள்வி எடுத்தான்.

வருணன் எழுந்தருளினான். ஹரிச்சந்திரனைச் சோதிக்க வேண்டும் என்றே'' பிள்ளைவரம் தந்தால் என்ன பிரதி செய்வாய்?'' என்றான்.

''எது கேட்டாலும் தருவேன்'' என ஆணவத்துடன் விடை தந்தான் ஹரிச்சந்திரன். எதையும் தன்னால் தானம் செய்ய முடியும் என்ற ஆணவத்துக்கே மகாபலி பலியானான்.

'எதைத் தானம் செய்து என்ன பயன்? இந்த ஆணவத்தை அல்லவோ தானம் செய்ய வேண்டும்?' என்று எண்ணினான் வருணன்.

''நான் உனக்குத் தருகிற பிள்ளையையே எனக்குப் பலி தருவாய்'' என்றான்.

ஹரிச்சந்திரனின் ஆசை அடியோடு நொறுங்கி விழுந்தது. ஆயினும் ஆணவம் நொறுங்கவில்லை. கலக்கத்தை மறைத்து, ''அதற்கென்ன? தங்கள் உடைமையைத் தங்களுக்கே தருவேன்'' என்றான்.

'ஓஹோ, அப்படியா சேதி?' என்று உள்ளுக்குள் நகைத்து மறைந்தான் வருணன்.

ஈரிரு திங்கள் சென்றபின் பட்டமகிஷி சந்திரமதி இளமதி போன்ற இளவலைப் பெற்றாள்.

வருண பகவான் வந்தான். ''அப்பனே! பிள்ளையைத் தருகிறாயா?'' என்று வினவினான்.

ஹரிச்சந்திரன் 'சாமர்த்தியம்' செய்யத் தொடங்கினான். ''குழந்தை பிறந்ததில் எனக்குத் தீட்டு சம்பவித்துள்ளது. இச்சமயத்திலா பலி தருவது? தீட்டு கழிந்தபின் அவசியம் தருவேன்'' என்றான்.

உள் நகையுடன் மறைந்தான் வருணன்.

நாட்கள் ஓடின.

''குழந்தாய்! தீட்டுக் கழிந்து விட்டதே. பாலனைத் தருகிறாயா?'' என்றான் வருணன்.

மீண்டும் சாதுரியமாகப் பேசினான் ஹரிச்சந்திரன். ''பல்லில்லாத பசு பலிக்கு உதவாது. குழந்தைக்குப் பல் முளைக்கட்டும். தேவரீருக்கு நிவேதனம் செய்வேன்.''

''ஆகா, எவ்வளவு சாஸ்திரோக்தம்?''— குறும்புடன் கூறி மறைந்தான் வருணன்.

மாதங்கள் சென்றன.

''பல் முளைத்ததா?'' என்று முத்துப் பல் தெரிய நகைத்தபடி கேட்டான் வருணன்.

''ஐயோ, ஸ்வாமி! தாங்கள் மீண்டும் மீண்டும் அடியேனைத் தேடி வர வேண்டுமா? நானே பலி தர மாட்டேனா? கர்ப்பத்திலிருந்த கேசத்துடன் குழந்தையைப் பலி தருவது அசுத்தம் என்று கேள்விப்படுகிறேன். மூன்று வயசானவுடன் கேசத்தை மழித்து, சிகை வைத்துத் தங்களுக்கு அர்ப்பணம் செய்வேன்'' என்றான் ஹரிச்சந்திரன்.

மூன்று வயதானபின் கேசத்தை மழித்தான். ஆனால் பாசம் மண்டி வளர்ந்து விட்டது — மூன்றாண்டுகள் வளர்த்த தோஷம்!

வருணனிடம் வாசாலகம் செய்தான் வேந்தன்: ''இந்தப் பட்டு மார்பில் பூணூல் தவழத் தங்களுக்குச் சமர்ப்பித்தால்தான் நிம்மதி பெறுவேன். உபநயனம் ஆகாதவன் எப்படி க்ஷத்திரியனாக முடியும்?'' என்றான்.

''ரொம்ப ரொம்ப வாஸ்தவம்'' என்று சிரித்தான் வருணன். ''அப்படியானால்

இன்னும் ஒன்பதாண்டுகளுக்கு நான் இங்கு வந்து அலைய வேண்டாம். நல்ல ஓய்வு கொடுத்து விட்டாய்'' என்றான்.

வருஷங்கள் சென்றன.

ஹரிச்சந்திரன் நிம்மதியுடன் தள்ளிப் போட்ட காலமும் குறைந்து கொண்டு வந்தது. நிம்மதி குலையத் தொடங்கியது. ''இனி என்ன சொல்லித் தப்பிப்பது? பிள்ளையைத் தந்தவனே அதற்கு மிருத்யுவாகவும் இருக்கிறானே!'' என்று விசாரப்பட்டான். சந்திரமதியும் கவலையில் மூழ்கினாள்.

பெற்றோரின் உளைச்சலைப் பிள்ளை புரிந்து கொண்டான். தான் பலியாக வேண்டிய நிலையில் இருப்பதை உணர்ந்தான்.

செவ்வரியோடிய நீண்ட கண்கள் கொண்டதால் அப்பாலனுக்கு லோஹிதாட்சன் என்று பெயர். இப்போது அழுது அழுது அக்கண்கள் பட்டரளியாகச் சிவந்தன.

இளவரசனின் உபநயனம் என்பது கலியாண கோலாகலமாக நடக்காமல், மரணச் சடங்கு போல் நடந்தேறியது.

பலியிடவிருக்கும் பெற்றோரிடம் பயந்து, நாட்டை விட்டுக் காட்டுக்கு ஓடி விட்டான் லோஹிதாட்சன்.

'குழந்தையைக் காணோமே என்று அரண்மனை அல்லற்படும் போதே, 'நல்ல வேளை, காணாமற் போய்ப் பலிக்குத் தப்பினானே' என்று திருப்தியும் பட்டான் ஹரிச்சந்திரன்.

குறுகுறுவென்று சிரித்துக் கொண்டு வருணன் வந்து நின்றான்.

''அப்பனே! இப்போதேனும் உன் சூதை ஒப்புக்கொள். காணாமற் போன பிள்ளையை நானே கொண்டு வந்து உன்னிடம் ஒப்புவிக்கிறேன்'' என்று ஹரிச்சந்திரனிடம் கூறினான்.

அப்போதும் ஹரிச்சந்திரனின் ஆணவம் அன்றுபாடாக இல்லை.

''தேவரீர் இப்படிப் பேசலாமா? அந்த அயோக்கியப் பயல் எங்கோ தலைமறைவாகி விட்டான். எப்படியும் தேடிப் பிடித்து வந்து பலியிட்டு உமது அருட்பெறுவேன். ஆட்கொள்ள வேணும்'' என்றான்.

வருணனின் பொறுமை மறைந்தது. தீயாக நின்றான் நீர்க் கடவுள்.

''ஆட்கொள்ளவா சொல்கிறாய்? இதோ, உன்னுள்ளேயே புகுந்து 'அருள்' செய்கிறேன்'' என்று இடி முழக்கக் குரலில் கூறி மறைந்தான் வருணன்.

'எங்கு மறைந்தான்? தன் வயிற்றுக்குள்ளேயேதான் அவன் வந்து விட்டானோ?' என்று எண்ணினான் மன்னன். அவனுடைய வயிற்றுக்குள் அப்படிப்பட்ட கனம்—வருண



வின் இருப்பிடமான ஏழு கடலையும் விழுங்கி விட்ட பாரம்—அழுத்தியது.

தனியாகத் தவித்தான் ஹரிச்சந்திரன். மருத்துவ நிபுணர்கள் பரிசோதித்தனர். பயங்கரமான ஜலோதரம் என்ற பிணி மன்னனுக்குச் சம்பவித்திருப்பதாகக்கூறினர்.

''இது வைத்தியத்தால் தீராது. எப்படியாகிலும் லோகிதாட்சனைக் கண்டு பிடித்து வந்து பலியிட்டால்தான் இது தீரும். உடனே இளவரசனைத் தேடிக் கொண்டு வாருங்கள்'' என்று அலறினான் அரசன்.

தனக்கு நோய் என்றவுடன் பிள்ளையையே பலி தர முடிவு செய்து விட்டான்!

நோய் உக்கிரமாகியது; இளவரசனோ கிடைக்கவில்லை.

மீண்டும் சூதில் இறங்கியது ஹரிச்சந்திரனின் மனம். மந்திரிமாரை அழைத்தான். ''நிறையப் பணம் கொடுத்து ஒரு பிள்ளையை விலைக்கு வாங்குங்கள். அவனை நான் ஸ்வீகாரம் செய்து கொண்டு, பின்னர் வருண பகவானுக்குப் பலி தருவேன். தேவனை நீண்ட நாட்களாகக் காக்க வைத்தது. இந்த ஜலோதரத்தைவிடப் பாரமாக என் நெஞ்சை அழுத்துகிறது'' என்றான்.

ஒரு கல்லில் இரு மாங்கனியாக, இவ்வாறு அந்நியப் பிள்ளை ஒருவனை பலி தந்தால் நோய் தீருவதோடு, பிற்பாடு லோஹிதாட்சன் கிடைத்தாலும், அவனை இழக்கவேண்டியதில்லை என்ற தந்திரமும் இருந்தது.

மன்னனுக்குப் புத்திர தானம் செய்தால் ஏராளமான திரவியம் தருவதாக மந்திரிகள் பிரகடனம் செய்தனர். வறுமையில் அவதியுற்ற அஜீகர்த்தன் என்ற ஏழைப் பிராமணன் தன்னுடைய இரண்டாவது மகன் சுனச்சேபனைப் பொருளுக்காக விற்றான்.

மன்னன் அப்பிள்ளையை மகனாக்கிக் கொண்டான். தந்தை என்ற தயை சற்றும் இன்றி, சுனச்சேபனை வருணனுக்குப் பலி தர யாகமும் தொடங்கினான்.

யூபஸ்தம்பத்தில் கட்டுண்டு கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தான் சுனச்சேபன்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த விசுவாமித்திர மாமுனியின் மனம் ஒருபுறம் மன்னன்பால் சீற்றத்தில் கொதித்தது; மறுபுறம் ஏழைப் பிராமணப் பிள்ளையின்பால் அருளில் குழைந்தது.

ஞானதிருஷ்டியினால் உண்மையைக் கண்டார். சுனச்சேபனை அணுகி அவனது காதில் 'வருண மந்திரம்' ஓதினார். அவன் அம் மந்திரத்தை மனனம் செய்யலானான்.

பலியிட வேண்டிய தருணம்.

சாட்சாத் வருண பகவானே அங்கு எழுந்தருளினான். பலியைப் பெற வந்துவிட்டான் என்றெண்ணி ஆவலாக வரவேற்க எழுந்தான் மன்னன். அவனை அருவருப்புடன் நோக்கிவிட்டு வருணன் கம்பீரமாக மொழிந்தான்: ''மன்னா! உன் யாகத்தில் மகிழ்ந்து நான் இங்கு வரவில்லை. இது யாகம் அல்ல. அக்கிரமம் நடக்கிறது. மந்திரிகளும், மாமறையாளரும், மக்களும் உனக்கு நன்மதி கூறாமல் இந்த அநியாயத்துக்கு உடந்தையாக இருக்கிறார்கள். விசுவாமித்திரர் ஒருவரே தம் மனத்தில் எழுந்த கருணை மேகத்தைத் தடை செய்யாமல் மழை பொழிய விட்டார். வருணனாகிய எனக்கு அந்த அருள் மழைதான் ஆஹுதி; ஆணவம் பிடித்த அரசனின் நரப்பலியல்ல. சுனச்சேபனைக் கட்டவிழ்த்து விடுங்கள். அவனுக்கு இனி அஜீகர்த்தன் அப்பன் அல்ல. பணம் வாங்கிக் கொண்டு பிள்ளையை விற்றவுடனேயே தந்தை உறவு அற்றுப் போய் விட்டது. தூர் நோக்கத்துடன் ஸ்வீகாரம் செய்து கொண்ட அரசனும் அவனுக்குத் தந்தையல்ல. அன்பை அடைக்காமல் பொழிந்து மந்திரோபதேசமும் செய்த விசுவாமித்திரரே அவனது தந்தை. அவரோடு அவன் செல்லட்டும். ஹரிச்சந்திரனே! உன்னை நான் சபிக்கவில்லை. உன் மனமேதான் சபித்துக் கொள்ள வேண்டும். உன் மகனை நான் பலி கேட்கவுமில்லை. இங்கு நடந்தவற்றைக் கேள்வியுற்று அவன் உன்னை விரைவிலேயே வந்தடைவான்.''

அந்தர்த்தானமானான் வருணன்.

லோஹிதாட்சனும் நாடு திரும்பினான்.

வருணன் அந்நாட்டுக்குத் திரும்பவே இல்லை. விளைவு? மழையின்றிப் பஞ்சமும் பட்டினியும் மலிந்தன. ஹரிச்சந்திரன் குலகுருவின் ஆலோசனையை நாடினான். அவனது பாபமே தேசத்தைத் தாக்குவதாக உணர்த்தி, சதாட்சியாகிய சாகம்பரியை உபாசிக்குமாறு உபதேசித்தார் குலகுரு வசிஷ்டர்.

நாகப் பாம்பின் நச்சு முதிர்ந்து முறுகி இறுகி விட்டால் நாகரத்தினமாகிவிடுகிறது. ஹரிச்சந்திரனின் பொய்ம்மை விஷம் சத்திய ரத்தினமாகி விட்டது.

வறண்ட பூமிக்கு ஜீவசத்துத் தருகிற சதாக்ஷி, ஆணவத்தில் வறண்ட அவனது ஆன்மாவுக்கு சத்திய சக்தி என்ற ஜீவசத்தை அருளினாள். தேசத்தில் நல்ல மழை பொழிந்தது. தன தானியங்கள் செழித்தன.

இந்திர சபையில் வசிஷ்டர் தமது சீடனை ஹரிச்சந்திரனின் வாய்மை பற்றி மிகவும் பெருமை கொண்டு பேசினார்.

ஆதியில் அவனது கபட வேஷத்தைக் கண்டிக்காமலிருந்த வசிஷ்டர் இப்போது அவனுடைய சத்திய நாட்டத்தைப் பாராட்டிப் பெருமிதப்படுவது விசுவாமித்திரருக்குப் பொறுக்கவில்லை. எனவே அவர் ஹரிச்சந்திரனை எவ்வாறேனும் பொய் சொல்ல வைப்பதாகச் சூள் உரைத்தார்.

உண்மையில் ஹரிச்சந்திரனின் வாய்மைப் பற்றை வையகத்துக்கு உணர்த்துவதே விசுவாமித்திரரின் நோக்கம். அந்த நல்ல நோக்கத்துக்காகத் தமக்கு அபக்யாதி ஏற்படுத்திக் கொள்ளவும் அவர் தயங்கவில்லை.

இதன் பின் நடந்த கதை பெரும்பாலும் அனைவருக்கும் தெரிந்ததே. சுருக்கமாகப் பார்ப்போம்.

விசுவாமித்திரர் தாம் விரும்பும்போது ஹரிச்சந்திரன் தானம் செய்ய வேண்டும் என்று உறுதிமொழி பெறுகிறார். பிறகு ''உன் ராஜ்யத்தையேகொடு'' என்கிறார்.

''தந்தேன்'' என்று மனமார தத்தம் செய்கிறான் சத்தியசந்தன் ஹரிச்சந்திரன்.

''இந்தத் தான புண்ணியத்தை ஈட்டித் தந்துள்ள எனக்கு ஒரு பை பொற்காசு தட்சிணை கொடு'' என்கிறார் முனிவர்.

''ஆகா, தருகிறேன். என்னுடையவும், என் மனைவி, மகனுடையவும் ஆபரணங்களை எல்லாம் தங்களுக்குத் தட்சிணை தருவேன்'' என்கிறான் ஹரிச்சந்திரன்.

விசுவாமித்திரர் ஏளனமாக நகைக்கிறார். ''இது என்ன சாமர்த்தியம் அப்பனே! எப்

போது நீ உன் ராஜ்யத்தைத் தானம் செய்தாயோ, அப்போதே உன்னுடைய சொந்தச் சொத்துக்களும் அணிமணிகளும் என் உடைமையாகிவிட்டன. அவற்றை எப்படி நீ மறுபடி தானம் செய்ய முடியும்?'' என்கிறார்.

ஹரிச்சந்திரன் அதிர்ந்து போகிறான்.

''கலங்காதே! வாக்குறுதியை நிறைவேற்ற முடியவில்லை என்று ஒப்புக் கொண்டு விட்டால் போதும்; எனக்கு தட்சிணை வேண்டாம்'' என்கிறார் முனிவர்.

வாக்குறுதியை அவ்வளவு எளிதில் மீறுகிற காலம் அல்ல அது! குறிப்பாக, சத்தியப் பிரமாணத்துக்குத் தன்னைப் புதிதாக அர்ப்பணம் செய்து கொண்டிருந்த ஹரிச்சந்திரன் இதில் பிடிவாதமாக இருக்கிறான்.

''வாக்குத் தவறுவது ஒருகாலும் இல்லை. ஒரு மாதத்துக்குள் எப்படியாவது தந்து விடுகிறேன்'' என்கிறான்.

பரமத் தியாகமான முடிவுக்கு வருகிறான். தன்னையும், தன் மனையாளையும் மகனையும் யாரேனும் அடிமைகளாக விலைக்கு வாங்கி, விலையை முனிவருக்குத் தரலாம் என்று சந்தை சந்தையாகச் சென்று கதறுகிறான்.

அவனுடைய காலில் பொன்னைக் கொண்டு வந்து கொட்டுவதற்கு மக்கள் தயாராக இருக்கின்றனர். ஆனால் அவனோ. ''யாசகம் வாங்க மாட்டேன். எங்களை வேலைக்காரர்களாக ஏற்றுக் கொண்டால்தான் பணத்தை ஏற்பேன்'' என்கிறான்.

அவர்களை அடிமை கொள்ள யாருக்கு மனம் வரும்? அயோத்தி ராஜ்யத்தில் 'விற்பனை'யாகாத ஹரிச்சந்திரன் குடும்பம் காசி ராஜ்யத்துக்குச் செல்கிறது. அங்கும் அவர்கள் விலை போகவில்லை. கெடு முடிகிற தருணம்.

'வருணனை ஏமாற்றிய கதை மறுபடி நடக்காது; கெடு தப்பினால் அவன் குடும்பத்தோடு உயிர் விடுவான்' என்று அறிவார் விசுவாமித்திர முனிவர். எனவே அவர்களை விலை பேசி வாங்குவதற்காக அவரே ஓர் அந்தணனையும், ஒரு சண்டாளனையும் சிருஷ்டிக்கிறார். (இதிலிருந்தே ஹரிச்சந்திரனின், புகழை நிலைநிறுத்துவதுதான் அவரது இலட்சியம் என்பது நிதர்சனமாகிறதன்றோ !)

அந்தணன் சந்திரமதியையும் லோஹிதாட்சனையும் அடிமைகளாக வாங்கித் தன் வீட்டில் வேலைக்கு அமர்த்திக் கொண்டு படாத பாடு படுத்துகிறான்.

சண்டாளன் ஹரிச்சந்திரனை விலைக்கு வாங்கிச் சுடுகாட்டைக் காவல் காக்கும் வேலையை அவனுக்குத் தருகிறான்.

இவர்களது விலையான பொன் முடிப்பைப் பெற்றுக் கொண்ட விசுவாமித்திரர் மேலும் சோதனைகளை அருளுகிறார் — ஹரிச்சந்திரன் என்ற பொன்னைப் புடம் போடுவதற்காக.

லோஹிதாட்சனைப் பாம்பு தீண்டி அவன் மரிக்கிறான். நள்ளிரவில் அந்தப் பாலனின் பிரேதத்தைத் தூக்கிக் கொண்டு அநாதையான சந்திரமதி இடுகாடு வருகிறாள் — அங்குள்ள வெட்டியான் முன்னாள் வேந்தன் என்று தெரியாமலே.

உலக இலக்கியம் எதிலுமே காண முடியாத உணர்ச்சி செறிந்த கட்டம். சண்டாளனுக்குச் செலுத்த வேண்டிய கூலியைச் சந்திரமதி கொடுத்தால்தான் அந்தப் பிள்ளையைத் தகனம் செய்ய முடியும் என்று நிர்த்தாட்சிண்யமாகச் சொல்கிறான், சத்தியத்துக்குச் சமர்ப்பணமாகிவிட்ட ஹரிச்சந்திரன்.

நிக்கிரமை பிடித்து நிற்கும் சந்திரமதியைத் துரதிருஷ்டம் துரத்தி வருகிறது. காசி ராஜகுமாரனைக் கொன்றதாக அவள் மீது அபாண்டப் பழி சுமத்தப்படுகிறது. வெட்டியானாகிய ஹரிச்சந்திரனே அவளை வெட்டி வீழ்த்த வேண்டியதாகிறது.

சந்திரமதிக்கு இது துரதிருஷ்டமாகத் தோன்றவில்லை. உலகிலிருந்து விடுதலை கிடைத்ததில் மகிழ்வே கொள்கிறாள்.

''என்னையும், லோஹிதாட்சனையும் ஏராளமான பணம் கொடுத்து அந்தப் பிராமணர் வாங்கினார். அவருக்குப் பலன் இல்லாமல், இவ்வளவு விரைவில் இருவரும் சாகிறோமே. இந்தப் பாவம் என்னைத் தாக்காமலிருக்க சதாட்சியைப் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். மணமாலையிட்ட தங்கள் தூய திருக்கரத்தாலேயே சிரச்சேதம் அடைகிறேன்'' என்று கணவனை வலம் வந்து வணங்குகிறாள்.

'சதாட்சி... சதாட்சி...!' ஹரிச்சந்திரனால் தாங்கவே முடியவில்லை. 'ஜீவசத்தைத் தரும் சதாட்சியை உபாசித்தும் இப்படிப் பிணங்களின் நடுவில் வேலை பார்க்கிறேனே! மகனைப் பிணமாகப் பார்க்கிறேனே! இதோ மனைவியின் ஜீவனையும் அபகரிக்கிறேனே!'

வந்து நிற்கிறார் விசுவாமித்திரர். ''என் கலக்கம்? சிரச்சேதம் செய்வதற்கில்லை என்று ஒரு வார்த்தை சொல்லிவிடு. காசி ராஜனும், சண்டாளனும் எனக்கு வேண்டியவர்கள் தான். உன்னை மன்னித்து விடுவர்'' என்கிறார்.

ஹரிச்சந்திரன் தாரை தாரையாகக் கண்ணீர் வடித்துக் கொண்டு தீனமாகக் கேட்கிறான்: ''அவர்கள் மன்னிக்கலாம். ஆனால் என் மனச்சாட்சி எப்படி மன்னிக்கும்? வெட்டியானின் கடமை இன்னது என்று மனப்பூர்வமாக உணர்ந்தே இவ்வேலையை ஒப்புக் கொண்டேன். அதிலிருந்து விலகுவது அசத்தியம். சுனச்சேபனைக் கதறக் கதற யூபஸ்தம்பத்தில் கட்டிப் பலி கொடுக்க முற்பட்டதற்காக அம்பாளின் தண்டனையே இது.''

வீசிவிட்டான் வாளை. சந்திரமதியின் கழுத்தை வளைக்கிறது வாள்.

ஆஹா, என்ன விந்தை! மீண்டும் அவளுக்கு மாலையல்லவா சூட்டியிருக்கிறான்!

கத்தி எங்கே? பூமாலை ஏது ?

பூமாலை மட்டுமல்ல. பூ மழையும் விண்ணிலிருந்து பொழிகிறது.

பூவும் காயும் கனியுமாக உலகுக்கு ஜீவசத்து ஊட்டும் தேவி பிரசன்னமாகிறாள். அவளது பூ இதயம் கருணை அமுதைப் பிலிற்ற, அமிருத கும்பத்தை அப்படியே கவிழ்க்கிறாள் தேவி. மரித்த லோஹிதாட்சனும், காசி ராஜகுமாரனும் புது மலரென உயிர்த்து வருகின்றனர்.

ஞானாம்பிகை பிரசன்னமானவுடன் விசுவாமித்திர மாயம் மறைகிறது.

சத்தியப் பொருளான தேவியின் சாந்நித்தியத்தில் நித்தியத்வம் பெற்றுவிட்ட ஹரிச்சந்திரனின் வாய்மை யுக யுகமாக நம் நாட்டுக்கே ஒரு நெய் விளக்காகிறது.

**பா**லப் பருவத்திலேயே அண்ணல் காந்தியைக் கொள்ளை கொண்டது ஹரிச்சந்திர சரித்திரம். அதற்கு ஓர் உரையாக வாழ்ந்தார் அவர். பக்த இலட்சணங்களில் ஒன்றாக நாரத மேதா கூறும் வாய்மைக்கு அவனையே ரூபகமாக வடிக்கிறார் ஓவியர் 'கனு'.

# நான்கு திசைகள் (நாடகம்)



கற்பகம் ஸ்டேஜ் கலைக் குழுவினர் நடித்த "நான்கு திசைகள்" என்னும் நாடகம் வழக்கமான பாதையிலிருந்து திசை மாறிப் புதிய கதியில் செல்கிறது.

செல்வமணி அண்ணன்; ஞானமணி தம்பி. ஆனால் அண்ணன் அவனைத் தன் சொந்த மகனாகவே கருதி வளர்த்தான். அவன் மனைவி வாணியும் ஞானமணியைப் பெற்ற மகனாகவே கொண்டு பரிவு காட்டினாள். ஞானமணி மாத்திரம் என்ன, அண்ணனையும், அண்ணியையும், அன்னையும் பிதாவுமாகவே நினைத்திருந்தான். இந்த அந்த அன்பு தான் அவன் வாழ்க்கையில் ஒரு புரட்சியை உண்டுபண்ணி விட்டது.

தம்பியின் மனைவி கற்பகம் சகோதரர்களின் பிரிவினைக்குக் காரணமாயிருக்கிறாள். ஆனால் இந்தப் பிரிவு தம்பியை மனிதனாக்குகிறது; உலகம் புகழும் கலைஞனாக்குகிறது; கடைசியில் இரு குடும்பங்களையும் ஒன்று சேர்த்து இலட்சியக் குடும்பமாக உலகம் புகழும்படி செய்கிறது; அண்ணன் — தம்பி ஒற்றுமை மேலும் வலுப்படுகிறது. இதிலிருந்து நாடகமும் வலுப்பெற்றுப் பீடுநடை போடுகிறது.

நாடகத்தில், நடிப்பின் சிகரமாக விளங்குபவர் கற்பகமாக நடித்த ரேணுகாதான். நல்ல முகபாவங்கள். கண்ணீரில் கலக்கவும், களிப்பில் பொங்கவும் அவரால் சுலபமாக முடிகிறதே! கதாநாயிகைக்கேற்ற முகவெட்டும், உடற்கட்டும் உள்ளவர் ரேணுகா. இலட்சிய மனைவியாக வரும் அவர், இலட்சியம் சித்தியானதும் அடையும் பெருமிதம் எல்லோரையும் பெருமிதம் கொள்ளச் செய்துவிட்டது.

வயலின் வாசிக்கும் தன் கலையில் தேர்ந்த தன் கணவன் அந்தக் கலையை மறந்து சோம்பேறி வாழ்வு வாழ்வது சரியல்ல; அந்தக் கலையை அவன் உலகம் பொதுவுடைமையாக்க வேண்டும்; அவன் அந்தக் குடும்பத்தை விட்டுப் பிரிந்தால்தான் அந்த இலட்சியம் பூர்த்தியாகும் -- என்று கற்பகம் செல்வமணியிடம் போராடி வெற்றி பெற்றது நாடகத்தின் நல்ல திருப்பம்; புதுமையானதும்கூட.

ஞானமணியாகச் சினிமா நடிகர் வசந்தகுமார் வந்தார். பொறுப்பில்லாத வாலிபனாக வாழ்ந்த போதும், மனைவியின் தூண்டுதலினால் புகழ் பெற்ற கலைஞனாக மாறியபோதும் அவர் நடிப்பு சோபித்தது.

கேசவராம், அண்ணன் செல்வமணியாக வந்து சிறப்பாக நடித்தார். கம்பீரமான அவர் நடிப்பில், பண்பும், பரிவும், பாசமும், சோகமும் இழையோடி நாடகத்துக்கு உயிரூட்டின.

நாடகத்தில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடும்படியிருந்தது — வசனம். மனத்தில் தங்காமலே போய்விட்டது — ஹாஸ்யம். ராகு, கேது என்று இரு நண்பர்கள் வந்து ஹாஸ்யத்தை நிலைநிறுத்த முழு முயற்சி செய்தனர்! முயற்சி பலனளிக்கவில்லை!

அண்ணி வாணியாக வந்த சசிகலா அடக்கமாக நடித்தார். அழகும் பதுமை ஜலஜாவாகத் தோன்றிய மீரா நாடகத்தின் வில்லி. அவர் நடிப்பில் இன்னும் நன்கு பயிற்சி பெற வேண்டும்.

நாடகத்துக்கு ஒரு வில்லன் வேண்டும் என்பதற்காகப் பணக்காரப் பெண் ஜலஜாவைப் படைத்திருக்கிறார் ஆசிரியர் என்று தோன்றுகிறது. ஞானமணியை மணக்க முடியாமல் தோல்வி அடைந்ததும் பழி வாங்கும் நோக்கம் அவளுக்கு வந்து விடுகிறது. அந்த நோக்கத்தைத் தோல்வியுறச் செய்வதற்காக ஜலஜாவைக் கற்பகத்தின் அண்ணன் சேகரு விருப்பம் இல்லாமல் மணந்து கொள்கிறான். இது புதுக் கதையாகத் திரும்புகிறது. ஜலஜாவின் பொறாமையால் விளையும் சூழ்ச்சிகள் கேலிக்கூத்தாயிருக்கின்றன. ஜலஜாவின் தகப்பனார் ஒரு காமெடியன் மாதிரி தோன்றுகிறார். இவை ஒரு பக்கமிருந்தாலும் மொத்தத்தில் நாடகம் திருப்தி அளிக்கிறது. இந்நாடகத்தின் மூலக் கதை வசனம் ஆகியவற்றை எழுதித் தாமே டைரக்ட் செய்யும் பொறுப்பையும் ஏற்ற எழுத்தாளர் கோவி. மணிசேகரன் பாராட்டுக்குரியவர்.

-- காந்தன்

## பெண் தலைவியானால்...?



தலைவன் இல்லாதவர்கள் அழிவார்கள்; இளைஞனைத் தலைவனாகக் கொண்டவர்கள் அழிவார்கள்; பெண்ணைத் தலைவியாகக் கொண்டவர்கள் அழிவார்கள்; பலரைத் தலைவர்களாகக் கொண்டவர்கள் அழிவார்கள்.

மான்கள் புல்லை மட்டுமே விரும்புகின்றன; மீன்கள் நீரை மட்டுமே விரும்புகின்றன; உத்தமர்கள் உலக அமைதியை மட்டுமே விரும்புகிறார்கள்; அப்படியிருந்தும் அக்கிரமமாக மான்களை வேடர்கள் துரத்துகிறார்கள்; மீன்களை வலைஞர்கள் துரத்துகிறார்கள்; உத்தமர்களைப் பொறாமைக்காரர்கள் துரத்துகிறார்கள்.

மகனை ஐந்து வருட காலம் இளவரசனைப்போல் பாவிக்க வேண்டும்; பிறகு பத்து வருட காலம் சேவகனைப்போல் பாவிக்க வேண்டும்; பதினாறு வருடங்களுக்குப் பிறகு தோழனாகப் பாவிக்க வேண்டும்.

நாடு செய்யும் பாவத்துக்கு அரசன் பொறுப்பாளி; அரசன் செய்யும் பாவத்துக்குக் குரு பொறுப்பாளி; மனைவி செய்யும் பாவத்துக்குக் கணவன் பொறுப்பாளி. சீடன் செய்யும் பாவத்துக்கு ஆசிரியன் பொறுப்பாளி.

(சம்ஸ்கிருதப் பழமொழிகளைத் தொகுத்து அளித்தவர்: அ. ராதா)



## அத்தியாயம் 4

அடுத்த நாள் தூங்கி எழுந்ததும், வாசலில் போய் நின்றான் சங்கரன். யாராவது பேப்பர்க்காரன் போனால், தனக்கும் தினசரி பேப்பர் கொண்டு போடச் சொல்ல வேண்டும்.

தெருவில் வெள்ளைச் சட்டை, சிவப்பு ஸ்கர்ட் 'யூனிஃபார்'முடன் குழந்தைகள் குருவிகள் மாதிரி சத்தம் போட்டுக் கொண்டு பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்தன.

சங்கரன் முகத்தில் ஒரு புன்னகை. அவனுக்கு முன்பு குடியிருந்த வீட்டில் ஏற்பட்ட நிகழ்ச்சியொன்று நினைவுக்கு வந்தது. முதல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த குழந்தைக்குத் திடீரென்று ஒரு நாள் சந்தேகம் வந்து விட்டது. ''ஏண்டி, பாடத்திலே போட்டிருக்கே, 'காலில்லாதவன் நொண்டி'ன்னு. அப்படின்னா சங்கரன் மாமா?'' என்று நான்காம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த அக்காவைக் கேட்டது. உடனே அக்கா சீறினாள். ''சீ, பொல்லாது, வாயை மூடு... பாவம் மாமா!'' சங்கரன் அப்பொழுது நினைத்தான், இதற்குள் இந்த விதரணையையும் அநுதாபத்தையும் இந்தக் குழந்தைக்கு யார் கற்றுக் கொடுத்திருப்பார்கள்?— இயற்கையிலேயே வருவதா?... இயற்கை, தான் செய்த குற்றத்துக்கு ஈடு செய்யும் வண்ணம் எல்லாரிடத்திலும் இப்படி அநுதாப உணர்வை . விநியோகிக்கின்றதோ?...

''ரொம்ப சீக்கிரம் எழுந்துட்டாப் போல இருக்கு...'' சங்கரன், குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்தான். ரமணியின் மனைவி!...

# இந்திரா பார்த்தசாரதி



எண்ணெய் தேய்த்து நீராடி யிருந்தான் போலிருக்கிறது. கூந்தலை வாரி முடியாமல், தளரத் தளர விட்டிருந்தாள்.

''ஆமாம்... குழந்தைகள் பள்ளிக்கூடம் போற காட்சியைப் பார்க்கிறது என் பொழுதுபோக்கு...''

''பார்க்கிலே குழந்தைகள் விளையாடறதைப் பார்க்கிறதுமா?'' என்று அவள் புன்னகை செய்தாள்.

''ஆமாம்...''

''உங்களுக்கும் 'ஹீரோ' உண்டோ?''

''கோபு ஒன்று விடாமல் சொல்லியிருக்கான் போலிருக்கே...''

''எங்களுக்குள்ளே தனித் தனியா ஒரு ரகசியமும் கிடையாது...''

''எனக்கும் 'ஹீரோ' உண்டு.''

''அப்படியா?''

''ஆனா இதுவரை யார்கிட்டேயும் சொல்லாத அந்தரங்கம் இது...''

''உங்களை வற்புறுத்தலே நான்...''

''மிஸ்டர் ரமணி...?'' என்று இழுத்தான் சங்கரன்.

''தூங்கறுர்...''

சங்கரன் சிறிது நேரம் பேசாமலிருந்தான். பிறகு சொல்ல ஆரம்பித்தான். ''சின்ன வயசிலே என் 'ஹீரோ' பட்டம் விட்டு ஊரிலே இருக்கிற பட்டத்தை எல்லாம் அறுத்துத் தள்ளிளுன். எனக்கு வயசு ஆக ஆக என் 'ஹீரோ'வும் மாறிண்டே வந்தான். சுதந்திர இயக்கத்தின் போது, அவன் 'டெர்ரரிஸ்ட்'. எனக்கு இலக்கியத்திலே ஈடுபாடு உண்டானபோது, அவனுக்கு 'நோபல் பிரைஸ்' கிடைச்சுது.''

''இப்போ?''

''இப்போ உலகம் தெரிஞ்சுபோச்சு, என் 'ஹீரோ'வும் எனக்குள்ளேயே செத்துப் போயிட்டான்...''

''மண்ணோடை ஒட்டாத 'ஹீரோ'வெல்லாம் இப்படிச் செத்துப் போறது ஆச்சர்யமில்லே.''

எதிரே பச்சைப் பசும் வெளி. சூரிய ஒளி பட்டு ஒவ்வொரு புல் நுனியும் பிரகாசத்தை வாரி இறைத்தது. 'புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி...' இவ்வரிகள் நினைவுக்கு வந்தன. சங்கரன் உடம்பு சிலிர்த்தது. உடம்பே ஆனந்தத்தைச் சுமக்கும் கருவியாக மாறியது.

''குட் மார்னிங்...'' சங்கரன் ஈரம் சேர்ந்த கண்களைத் துடைத்துக் கொண்டு திரும்பினான். கோபு நின்று கொண்டிருந்தான். அவன் அம்மா எங்கே?...

அவள் உள்ளே போய்விட்டாள்.

''குட் மார்னிங்...''

''புல் தரை பிரமாதமா இருக்கு, இல்லே மாமா!'' என்று கேட்டான் கோபு.

''வெறும் புல் வெளியா கவனிப்பற்றுக் கிடந்தால் அதிலே என்ன அழகு இருக்கு? ஒரு கலைஞன் கை பட்டால் தான் அதுக்கு அழகு இருக்கு, அர்த்தமும் இருக்கு...''

''என்ன மாமா சொல்றீங்க?''

''அது கிடக்கட்டும்... நீ கதை எழுதுவியாமே...?'' கோபுவின் முகத்தில் செம்மை படர்ந்தது.

''என்ன கதை அது?... 'இம்பெர்டன்ட்' பசு மாட்டின் உணர்ச்சிகள்... அப்படித்தானே?...'' சங்கரன் கோபுவின் முதுகில் தட்டினான்.

''யார் சொன்னு?'' என்று கேட்டான் கோபு.

''யார் சொன்னு என்ன? கதை எங்கே காட்டு, பார்ப்போம்...''

''கிழிச்சுப் போட்டுட்டேன்...''

''இலக்கியத்துக்குப் பெரியநஷ்டம்!''

''ஏதோ மனசிலே தோணித்து... ஒரு... வேகத்திலே எழுதினேன்...... கலாட்டா பண்ணறேளே...''

''வெரி குட்... நல்ல இலக்கியத்தின் நோக்கத்தை இதைக் காட்டிலும் யாராலேயும் சொல்ல முடியாது...''

'' ஹலோ...'' ரமணி 'சிவப்பு ட்ரெஸ்ஸிங் கவுன்' அணிந்துகொண்டு வெளியே வந்தான். ''உள்ளே போயேண்டா, படிக்க....'' என்று கோபுவை ஓர் அதட்டல் போட்டான்.

சங்கரன் ஏதோ சொல்ல நினைத்தான். ஆனால் கோபுவின் அம்மா பூங்காவருகே சந்தித்து அவனுக்கு எச்சரிக்கை செய்தது நினைவுக்கு வந்தது. பேசாமலிருந்து விட்டான்.

வராந்தாவில் கிடந்த தினப்பத்திரிகையைக் கையில் எடுத்துக் கொண்டான் ரமணி.

''பேப்பரிலே என்ன விசேஷம்?'' என்று கேட்டான் ரமணி.

''நான் இன்னும் பார்க்கலே...''

அப்பொழுதுதான் சங்கரனுக்கு ஞாபகம் வந்தது, தான் ஒரு பேப்பர்க்காரனையும் பார்த்துப் பேப்பர் போடச் சொல்லவில்லையே என்று. ஆனால் அது அவனுக்கு இப்பொழுது அவ்வளவு முக்கியமாகப் படவில்லை.

அன்று மாலை அவன் ஆபீஸிலிருந்து வந்ததும், வாசலில் கோபு நிற்பதைக் கண்டான்.

''பார்க் போகலாமா?'' என்று கேட்டான் கோபு. இதற்குத்தான் நாள் முழுதும் வாசலிலேயே கோபு நின்று கொண்டிருந்தானோ வென்று சங்கரனுக்குத் தோன்றியது. அவ்வளவு ஆர்வம், துடிப்பு.

''ஓ, போகலாம்...... குளிச்சுட்டு வந்துடறேன்...'' சங்கரன் அறையைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான்.

அவன் உடையை மாற்றிக் கொண்டு குளிக்கப் போனான்.

அவன் திரும்பி வந்தபோது மேஜையின் மீது ஆவி பறக்கக் காப்பி இருந்தது.

''கோபு... என்ன இது!... தினம் சாயந்திரம் எனக்குக் காப்பி கொடுத்துக் கட்டுமா?....''

கோபுவின் அம்மா அறைக்குள் நுழைந்தாள்.

''காப்பியை எடுத்துண்டு போகட்டுமா?....''

சங்கரனுக்கு என்னவோ போலிருந்தது. ''அதுக்குச் சொல்லல்லே தினம்..''

''இது ஒரு சாதாரண விஷயமா எனக்குப் படறது...'' என்றாள் அவள்.

சங்கரனுக்கு மிகவும் வெட்கமாகப் போயிற்று. அவன் ஒன்றும் பேசாமல் காப்பியைக் குடித்தான். ஓர் அல்ப விஷயத்துக்காக விவாதித்திருக்க வேண்டாம் என்று தோன்றிற்று.

கோபு உள்ளே வந்தான். ''சரி... போகலாமா, மாமா...?''

''ஓ, போகலாம்.''

வீட்டைவிட்டு வெளியே வந்தார்கள்.

''சீக்கிரம் வந்துடு. அப்பா வர்றதுக்குள்ளே...'' என்றாள் அவன் தாய்.

அந்த 'ப்ளாக்' வாசல் கதவைத் தாண்டி வெளியே வந்ததும் கையில் நோட்டு புஸ்தகம், நோட்ஸ்களுடன்

# தாங்க முடியாத நோவா?

ஸால்ஜான் தலைநோவின் தாக்குதலைத் தடுக்கிறது.
பல்வலி, உடல்நோவு, ஃப்ளு, தசைவலி
ஆகியவற்றிலிருந்து நிவாரணமளிக்கிறது.

பலநிறங்கொண்ட



# ஸால்ஜான்

கே: ஸால்ஜான் பல நிறங் கொண்டதாகத் தயாரிக்கப்படுவது ஏன்?
ப: ஒரு நிறமிருந்த நோவு நிவாரணியை நீங்கள் சுலபமாகக் கண்டு கொள்வதற்காகத்தான்!

நோவுகளிலிருந்து துரிதமான
நிச்சயமான, அபாயமில்லாத
நிவாரணம் அளிக்கிறது.

ஒரு ஸ்மித், ஸ்டானிஸ்ட்ரீட் தயாரிப்பு

EP-SS-цТ

சிலர் உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர்.

''அப்பா இருக்காராடா, கோபு?'' என்றார் ஒருவர்.

''இல்லே...''

சங்கரனைப் பார்த்ததும் ஒருவர் கேட்டார்: ''நீங்க பத்தாம் பிளாக்கிலே இருக்கேள் இல்லே...?''

''இருந்தேன்... இப்போ...''

''எங்க வீட்டிலே இருக்கார்....'' என்று முடித்தான் கோபு.

''ரோட்டிலே பார்த்துக் கேட்கக் கூடாது. இருந்தாலும் பாருங்கோ..'' என்று அசட்டுச் சிரிப்புடன் நோட்டீஸை நீட்டினார், வழுக்கைத் தலையாயிருந்த ஒருவர்.

கந்த சஷ்டிக்காக அவர்கள் வசூல் செய்கிறார்கள்.

''கோபுவோட அப்பா, மிஸ்டர் ரமணி, வருஷா வருஷம் இருபத்தைஞ்சுக்குக் குறைஞ்சு போடறதில்லே...''

''அப்படியா?'' என்று சொல்லிவிட்டு நோட்டீஸைத் திருப்பிக் கொடுத்தான் சங்கரன்.

மஞ்சள் நோட்டுப் புத்தகத்தை அவனிடம் நீட்டினார், குட்டையாக, கறுப்பாக இருந்த ஓர் ஆசாமி.

சங்கரன் இரண்டு ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுத்தான்.

''இவ்வளவுதானா?''

சங்கரன் பதில் சொல்லவில்லை. நோட்டுப் புத்தகத்திலும் எழுதவில்லை. அவர்களிடம் ஒன்றும் பேசாமல் மேலே நடந்து சென்றான்.

''நீங்களும் என் மாதிரி, அம்மா மாதிரி போலிருக்கு'' என்றான் கோபு.

''அப்படீன்னா?''

''எங்க இரண்டு பேருக்கும் சாமி பேரிலே நம்பிக்கை கிடையாது.''

சங்கரன் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

''ஆமாம்... எங்கப்பா வித விதமா பூஜை பண்ணுவார். ஹநுமார், பிள்ளையார், சாயி பாபா, அந்தோணி சாமி...''

''என்னது, அந்தோணி சாமியா?''

''ஆமாம்... யாரோ மெட்ராஸிலே வந்தவா சொன்னாளாம். அந்தோணி சாமி கேட்டதைத் தரும்னு. அப்பா உடனே பிடிச்சண்டுட்டார்...''

''உனக்குச் சாமி பேரிலே நம்பிக்கை கிடையாதுன்னா, நஷ்டம் யாருக்கு, உனக்கா, சாமிக்கா?''

''அதைப் பத்தி எனக்குக் கவலையில்லே.... இத்தனை நல்ல அம்மாவைக் கஷ்டப்பட விடற தெய்வம் இருந்தா என்ன, இல்லாட்டா என்ன?'' என்றான் கோபு ஆவேசமாக.

''கண்ணுக்குத் தெரியாத ஒண்ணு மேலே கோபப் படறது நமக்கு ஆறுதல்... கோபத்தை ஆற்ற இதைத் தவிர வேறு வழியில்லே...''

''கோணல் மாணலா என்னைப் படைச்ச அந்தச் சாமி பேரிலே எப்படி எனக்கு நம்பிக்கை இருக்கும், சொல்லுங்கோ... எங்கப்பா பேரிலே எனக்கு எவ்வளவு கோபமுண்டோ அவ்வளவு கோபம் உண்டு சாமி பேரிலே.''

''சாமி பேரிலே நம்பிக்கை இல்லேங்கறே, சாமி படைச்சார்ங்கிறியே!'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் சங்கரன்.

''நீங்கதான் சொன்னேளே, யார் பேரிலேயாவது கோபப் படணும்னு. அதுக்காகச் சொல்றேன்.''

சங்கரன் வியப்படைந்தான். இந்தப் பையனுக்கா படிப்பு வரவில்லை, மூளை கிடையாது என்கிறார்கள்!

''இன்னிக்குக் கிரிக்கெட் விளையாடறாங்க...'' என்றான் கோபு. பூங்காவில் கிரிக்கெட் ஆட்டம் நடந்து கொண்டிருந்தது.

''எனக்குக் கிரிக்கெட்னா பிடிக்காது'' என்றான் கோபு.

''ஏன்?''

''மந்த விளையாட்டு!... ஃபுட்பால் மாதிரி ஒரு விறுவிறுப்புக் கிடையாது.''

பல வீர சாகஸ நவீனங்களை எழுதிய ஸ்டீவன்ஸன், வாழ்நாள் முழுதும் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையிலிருந்து அவற்றை எழுதினார் என்ற செய்தி சங்கரனுக்கு நினைவு வந்தது.

இருவரும் பூங்காவில் உட்கார்ந்தார்கள்.

''உங்களைக் கண்டா எனக்கு ரொம்பவும் பிடிச்சிருக்கு...'' என்றான் கோபு திடீரென்று.

''உன் விருப்பைக் கண்டாலும் பயமாயிருக்கு, வெறுப்பைக் கண்டாலும் பயமா இருக்கு...'' என்றான் சங்கரன் புன்னகையுடன்.

''யார் யார் எப்படி இருக்கணும்னு நான் மனசுக்குள்ளே நினைக்கிறேனோ, அப்படி இல்லாட்டா எனக்கு ஆத்திரம்தான் வரும்'' என்றான் கோபு.

''அட, கடவுளே!...நீ என்ன நினைக்கிறேன்னு பார்த்துண்டு யாராலே இருக்க முடியும் ?''

''ஏன், எங்கம்மா இருக்காளே!''

''அப்படியா?''

''ஆமாம்..... எனக்கோ, அம்மாவுக்கோ ஒத்தருக்கொத்தர் தெரியாத ரகசியம் ஒண்ணும் கிடையாது.''

சங்கரன் புல் ஒன்றைப் பிடுங்கி நுனியைக் கடித்தான். ''அப்படியா?'' என்றான் அவன், ஏதோ யோசித்துக் கொண்டே.

''அம்மாகிட்டே நான் ஒன்றையும் மறைக்க மாட்டேன்.''

''தெரிஞ்சுது....''

''தெரிஞ்சுதா ?''

''ஆமாம்..... நாம முதல் நாள் பார்க்கிலே பார்த்தது, பேசினது எல்லாம் ஒண்ணு விடாமெ அம்மாகிட்டே சொல்லியிருக்கே போலிருக்கே....''

கோபு முகத்தில் புன்னகை ததும்பியது. ''அம்மா சொன்னாளா?''

''ஆமாம்.... உன்னோட அந்தரங்கத்தைப் பகிர்ந்து கொள்ள இன்னொரு ஆளாச்சு....''

கோபுவுக்கு ஒரே மகிழ்ச்சி. அவன் முகம் உற்சாகப் பெருக்கினால் பிரகாசமடைந்தது. அவன் சங்கரனின் கையைப் பிடித்துக் கொண்டு, அவன் விரல்களைச் சொடுக்கினான்.

'' உனக்குப் படிப்பு வரல்லேன்னு நீயா ஏன் நினைச்சுக்கிறே ?'' என்று கேட்டான் சங்கரன்.

''எனக்கு மூளை கிடையாது.''

''நோ... அது தப்பு.... உனக்கு மூளை கிடையாதுன்னு யார் சொன்னா?''

''பாடத்திலே சைபர் வாங்கினா, மூளை இடையாதுன்னுதானே அர்த்தம்?''

''இல்லே.... நீ சரியா முயற்சி செய்யலேன்னு அர்த்தம். மத்த உன் வயசுப் பையன்களைவிட உனக்கு மூளை அதிகம்!''

''எனக்கு எவ்வளவு வயசு இருக்குங்கிறீங்க ?''

''தெரியாது....!''

''பதினாறு வயசு... இன்னொண்ணு தெரியுமா ? நான் எந்த நிமிஷத்திலும் செத்துப் போகலாம்... டாக்டர்கள் சொல்லி யிருக்காளாம். அதுக்காகத் தான் காத்துண்டிருக்கேன் ....''

''எதுக்காக? சிவனுக்காகவா, எமனை உதைக்க? டோன்ட் டாக் ரப்பிஷ்...''

''இல்லே மாமா... நான் ஒரு 'ப்ளு பேபியாம்....' ஆபரேஷன் செய்ய வேண்ணு எந்த நிமிஷத்திலும் சாகலாமாம். எங்கப்பா ஆபரேஷன் வேண்டாம்னுட்டார்.''

''எனக்குத் தெரிஞ்ச 'ப்ளு பேபி' போன வருஷம் செத்துப் போச்சு....''

'' யாரது ?'' என்று ஆவலுடன் கேட்டான் கோபு.

''என் சிநேகிதனோட தாத்தா. வயசு எழுபது.....''

கோபு சிரித்தான். ''நிஜமா மாமா?''



''ஸ்கூல் யூனிஃபார்ம், ஸ்பெஷல் பீஸ் கட்டப் பணம் வேணும் ! அப்பா எங்கேம்மா?''

''என் சிநேகிதனோட விலாசம் தரேன். எழுதிக் கேளு...''

''அப்போ நான் உயிரோட இருப்பேங்கிறீளா ?''

''நிச்சயமா.... இன்னும் அறுபது வருஷங்களுக்குக் குறைச்சலில்லே..... 'சாகப் போறேன், சாகப் போறேன்'னு படிக்காமெ இருந்தின்னா, மூளை இல்லேன்னு அர்த்தமா ? படி, நானும் சொல்லித் தரேன்'' என்றான் சங்கரன்.

''எனக்கு அடிக்கடி உடம்புக்கு வரதே, மாமா....''

''நன்னா படிக்க ஆரம்பிச்சா வராது.''

''நீங்க சொல்லித் தரீங்களா ?''

''நிச்சயமா வகுப்பிலே நீதான் முதல் பாரு....!''

கோபு யோசித்தான்.

சங்கரனுக்குச் சந்தோஷம், வக்கிரமான பையன் என்று எல்லாராலும் கருதப்பட்டவனைத் தான் திருத்தி, வாழ்க்கையில் நம்பிக்கையும் பிடிப்பும் ஏற்படச் செய்யப் போகிறோமென்று. ரமணி என்ன சொல்லுவான் ?

''போகலாமா, மாமா ?'' என்றான் கோபு.

''ஓ !....''

வீட்டுக்குச் சென்ற போது, ரமணி வாசலில் நின்று கொண்டிருந்தான்.

அவன் கோபுவைக் கோபத்துடன் கேட்டான் : '' எங்கே போயிட்டு வர்றே?''

'' சும்மா தான்... பார்க்குக்குப் போனேன். இவனையும்கூட அழைச்சிண்டு போனேன்'' என்றான் சங்கரன்.

ரமணியின் முகத்தில் சிடுசிடுப்புக் குறையவில்லை. அவன் சங்கரனிடம் சொன்னான். ''ஐ விஷ் யூ டோன்ட் டேக் ஹிம் அவுட்....''

ரமணி இவ்வளவு வெளிப்படையாகத் தன்னிடம் இவ்வாறு சொல்லுவான் என்று சங்கரன் எதிர்பார்க்கவில்லை. நேற்றிரவு கண்ணைச் சிமிட்டிக் கொண்டு அவனிடம் பேசிய ரமணி வேறு. இப்பொழுது அவனிடம், கோபத்துடன் பேசும் ரமணி வேறு...

''உள்ளே போடா!'' என்று கோபுவிடம் ஆவேசமாகக் கத்தினான் ரமணி.

''உங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம்?'' என்று நிதானமாகக் கேட்டான் சங்கரன்.

கோபு உள்ளே போனான்.

''அவன் ஒரு அரைப் பைத்தியம்'' என்றான் ரமணி.

''யாரு?''

''யாரா? நல்ல சிமென்ட் கான்க்ரீட் ரோட்டிலே போறபோது, சாணியை மிதிச்ச மாதிரி ஒரு பிள்ளை பொறந்திருக்கானே, அவன்தான். அவன் என்ன செய்வான், செய்யமாட்டான்னு சொல்ல முடியாது.''

சங்கரனுக்கு ரமணியின் மயிரைப் பற்றி இழுத்து, அவன் குலுங்கிக் குலுங்கி அழும்படியாக அடிக்கவேண்டுமென்று கை குறுகுறுத்தது.

''ஒரு நாளைக்கு என்னைக் கொலை பண்ணாலும் பண்ணிடுவான். அவன் பல்லைக் கடிக்கிறதைப் பார்த்தா எனக்கு அவ்வளவு பயமாயிருக்கு.''

''எனக்கு என்னமோ அவன் 'நார்மலா' இருக்கிறதாகத்தான் படறது'' என்றான் சங்கரன்.

''நீங்க நேத்துதான் வந்திருக்கீங்க! என்ன சொல்ல முடியும் உங்களாலே?''

''பார்க்கிலே பேசிண்டிருந்தோம். அவன் இனிமே ஒழுங்காப் படிக்கிறேனிருக்கான். நானும் பாடம் சொல்லித் தரலாமான்னு பார்க்கிறேன்.....''

''அவனுக்காவது, படிப்பு வரதாவது..... அவனுக்கு மூளையே கிடையாது......''

கோபு கதவருகே நின்று கொண்டிருந்தான். அவன் முகத்தைப் பார்க்கப் பயமாக இருந்தது.

''நீங்க சொல்றதுதான் சரின்னு நம்பணும்னு பிடிவாதமா இருக்கேள் போலிருக்கே....''

''நான்ஸென்ஸ்... ஐ ஆம் ஸாரி. கொஞ்சம் 'ரூடா' பேசறேன்னு நினைக்காதீங்கோ. நூறு வாத்தியான் வந்துட்டுப் போனதுதான் மிச்சம். ஒவ்வொரு பயலுக்கும் பணம் சும்மா அழுததுதான் மிச்சம். ஆனா, இந்த அவலட்சணம் இடியட்டா இருந்தால், ஈராலே நாய் வாலை நேராக்க முடியும்?''

''எனக்கு நீங்க பணம் கொடுக்க வேண்டாம்.....'' என்றான் சங்கரன்.

''நோ... நோ... அதுக்காகச் சொல்லலே. இவனுக்குப் படிப்பும் வரல்லே. உடம்பும் வியாதி. இட் ஈஸ் ஒன்லி மை மிஸ்ஃபார்ட்யூன். அதுக்காகச் சொன்னேன். இப்படி இருக்கிறப்போ, கண்டபடி வெளியிலே சுத்திட்டு, எங்கேயாவது காரிலே, பஸ்லே மாட்டிண்டு உசிரை விட்டுத் தொலைச்சான்னா, யாரு கோர்ட்டுக்கும், போலீஸ் ஸ்டேஷனுக்கும் போய் அலையறதுன்னு கேட்கிறேன்....''

கதவருகே நின்று கொண்டிருந்த கோபு உள்ளே போனான்.

சங்கரனுக்கு அடி வயிற்றிலிருந்து ஆத்திரம் வந்தது. பிள்ளையைப் பற்றி ஒருவன் இப்படியா பேசுவான்? இதையெல்லாம் கோபு கேட்டுக் கொண்டிருந்தான் என்று நினைத்த போது....

அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தன் அறைக்குள் நுழைந்தான்.

சங்கரன், கொல்லைப்புறத்திலிருந்த தாழ்வாரத்தில், மரச் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு கோபுவின் அம்மா நின்று கொண்டிருப்பதை, ஜன்னல் வழியே பார்த்தான். இவர்களுடைய வீட்டுப் பின்புறத்தை நோக்கியிருந்த எதிர் வீட்டில், இரண்டு மூன்று குழந்தைகள் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தன. கூடை நாற்காலிகளில் உட்கார்ந்தவாறு பெற்றோர்கள் இதை ரஸிக்கும் காட்சி....

கோபு, அவன் அம்மா அருகே வந்து நின்றான். அவள் திரும்பிப் பார்த்தாள். அவன் அவள் புடவைத் தலைப்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழத் தொடங்கினான். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு மரச் சட்டத்தைக் கோபத்துடன் ஓங்கிக் கையால் குத்தினான். இந்தப் பலஹீனமான பையனுக்கு இவ்வளவு பலம் எங்கிருந்து வந்தது? சட்டம் அதிர்ந்தது.

''என்ன சத்தம் அங்கே....?'' என்று அதட்டினான் ரமணி, தன் அறையிலிருந்து.

''கால் தடுக்கிச் சட்டத்தின் மேலே விழுந்துட்டான் கோபு.....'' என்றாள் ரமணியின் மனைவி.

''உசிர் இருக்கா இல்லையா?''

அப்பொழுது கோபுவின் அம்மா முகத்தைப் பார்க்கப் பயமாக இருந்தது.

(தொடரும்)

# சாதனை

என்.எஸ்.சிதம்பரம்

அண்ட வெளியில் அடிவைத்தான்!
அழகு மதியில் அடிவைத்தான்!
கண்ட மதியின் மண்டலத்துக்
காட்சி யெல்லாம் பகர்ந்திட்டான்!
தொண்டு புரியும் மனிதனவன்
தூர வானப் பெரும்பரப்பைக்
கண்டு வந்த வெற்றியினைக்
கருதி உலகம் வியக்குதடா!

விளங்கும் விண்ணின் வெற்றியெலாம்
விஞ்ஞா னத்தின் வெற்றியடா!
களங்கம் கலைமெய்ஞ் ஞானத்தில்
காலை மனிதன் வைத்தானா?
வளங்கள் நிலவில் பலஉண்டு,
வாழ வழிஅங் குண்டென்றால்
களத்தை நோக்கும் வீரனைப்போல்
ககனம் விழைவான் மனிதனடா!

வானம் அளக்கும் மானிடன்,தன்
மனத்தை யளந்து பார்ப்பானா?
மோன வேள்வி புரிந்துஉலகம்
முழுதும் தன்னுள் பார்ப்பானா?

ஞான யோக தர்சனத்தே
நண்ணும் மதிமண் டலத்தமுத
பானஞ் செய்து மகிழ்வானா?
பாரைச் சற்றே மறப்பானா?

சிலநாட் சென்றால் புவிமனிதன்
செவ்வாய் உலகிற் கேகிடுவான்!
பலநாட் கனவும் இந்நாளே
பலித்த களிப்பில் மிதந்திடுவான்!
இலைஓர் கவளம் என்றிரக்கும்
ஏழைக் கென்ன பணிபுரிந்தான்?
மலைபோல் குவியும் மனிதஇடர்
மாள யாது வழிவகுத்தான்?

கதிரும் புதனும் வெள்ளியொடு
காரி முதலாம் கோள்உலகும்
பதியக் காலின் அடிவைக்கப்
பார்க்கும் விந்தை நிலமனிதன்
புதிய கிரக தரிசனத்தின்
பூரிப் பினிலே விங்குகின்றான்!
சதிசெய் எண்ணம் சாய்ந்துமண்ணிற்
சத்ய யுகத்தைக் காண்பானா?

சாரும் உலகத் துயிர்களிடம்
சமதர் சனமே வேண்டுமென்று
கோரும் வேத வாக்கியத்தைக்
குறிக்கோ ளாகக் கொண்டுஇந்தப்
பாரின் மனிதன் செயல்புரியப்
பாயும் வான வீரனுடைச்
சீரின் மிக்க சாதனைகள்
சிறந்த வகைதான் செய்திடுமா?





# தீராத விளையாட்டு

## அத்தியாயம் 25

இருவரும் வீட்டில் உட்கார்ந்து பேசுவது போல் வேப்பமரத்தடியில் உட்கார்ந்து நிம்மதியாகப் பேசலானார்கள்.

''ரெண்டு பேருமே ஒரு சங்கதியை மறந்துட்டோம். நான் சறுக்கி விழுந்ததிலே உங்கள் கேள்வியை நீங்கள் மறந்துட்டீங்க; என் பதிலை நான் மறந்துட்டேன். நானும் நீங்களும், தனியா வெளியே வர எங்க வீட்டிலே எப்படிச் சம்மதிச்சாங்கன்னு கேட்டீங்க, இல்லையா?...எங்க அப்பாவை இந்த உலகம் ஓர் அதிசயமான மனிதராகத்தான் நினைக்கும். நீங்களும் அப்படித்தான் நினைப்பீங்க. ஏன் தெரியுமா? அவர் நினைக்கிறபடி சொல்லுவார். சொல்றபடி செய்வார் என்கிறதனாலே இல்லை. அவரைப் பொறுத்தவரையில் அது ஒரு சாதாரண விஷயம்தான். ஆனால் தாம் செய்யறதுபோல் மத்தவங்க செய்தால் அதைக் கண்டு கோபப்படாமல் சந்தோஷப்படுறாரே, அதைப் பார்த்துத்தான் அவரை அதிசயமான மனுஷரா நினைப்பீங்கன்னு நான் சொல்றேன்!'' என்றாள் விஜயா. பார்க்கப் போனால் விஜயாவின் தந்தை ராமலிங்கம்பிள்ளை ஓர் அதிசய மனிதர்தான்!

* * *

'நான் சொல்கிறபடி செய்; செய்கிறபடி செய்யாதே' என்பவன், பிறருக்கு முள் நிறைந்த பாதையைக் காட்டிவிட்டுத் தான் மட்டும் ரோஜா மலர் பரப்பிய பாதையில் நடக்கும் சுயநலமி' என்று சுவாமி விவேகானந்தர் கூறியிருப்பதாக விஜயாவின் தந்தை ஆர். கே. ராமலிங்கம் பிள்ளை அவளிடமே பல முறை கூறியிருக்கிறார். தான் செய்வது போல் பிறரும் செய்வதைக் கண்டு சந்தோஷப்படுவது அவருடைய அலாதிக் குணங்களில் ஒன்று என்பதைப் பற்றித்தான் அவரைப் பற்றிப் பேசத் தொடங்கியதுமே விஜயா எடுத்துரைத்தாள். அவர் ஜாதி வேற்றுமை பார்க்காமல் காதல் கல்யாணம் செய்து கொண்டவர். தம்முடைய மகனும், பெண்களும் அவ்விதம் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டால் அதை ஆதரிப்பதற்குக் காத்



# கு. அழகிரிசாமி

இருந்தவர். ஆனால் அவருடைய இந்த அலாதி குணத்தை அவருடைய மகனே பயங்கரமாகச் சோதித்து விட்டான். அதன் பின் அந்தக் கொள்கையைக் கைவிட்டு விடும்படி அவருடைய மனைவியே அவரைக் கேட்டுக் கொள்ளத் தொடங்கினாள். ஆனால் அவர் அதற்குச் சிறிதும் இணங்கவில்லை. ''எனக்கு ஒன்று; ஊருக்கு வேறொன்று என்று பேசுவது எங்கள் பரம்பரையிலேயே கிடையாது. நம்முடைய நல்ல கொள்கைகளை, சில கயவர்களுடைய துர்நடத்தையைக் கண்டு கைவிட்டுவிடுவதா? அப்படியானால் நாமே கயவர்களுக்கு வெற்றியும், நமக்கும் நம்முடைய நல்ல கொள்கைகளுக்கும் தோல்வியும் கிட்டும்படி செய்தவர்களாவோம்'' என்று சொல்லி விட்டார்.

ராமலிங்கம் பிள்ளை தம்முடைய தந்தையிடமிருந்து சொத்துக்களை மட்டுமின்றி, கொள்கைகளையுமே பிதுரார்ஜிதமாகப் பெற்றுக் கொண்டவர். அவருடைய தகப்பனார் நிறையச் சம்பாதித்தார். நிறைய வாரி வழங்கவும் செய்தார். 'நம்மிடம் இருக்கும் சொத்து நம் சொத்தல்ல; நம்முடைய மேற்பார்வையில் இருக்கும் தர்மச் சொத்து அது' என்று அவர் சொல்வார். ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் காந்திஜியின் புத்தகங்களை வாசித்துக் கொண்டிருப்பார். மகனுக்கும் வாசித்துக் காண்பித்து விளக்குவார். மதுரையில் ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை ஏற்பாடு செய்தபோது அதை முழு மனத்தோடு ஆதரித்து உதவியும் புரிந்த காந்தி பக்தர்களில் அவரும் ஒருவர். அவரை 'மதுரைக் காந்தி!' என்றுகூட அவருடைய மனைவி கேலி செய்வது உண்டு.

தந்தை காலமான பிறகு பூர்வீகச் சொத்துக்களைப் பன்மடங்கு பெருக்கினார் ராமலிங்கம் பிள்ளை. ஓயாத உழைப்பாளி. பல வர்த்தக, தொழில் நிலையங்களில் பங்குகள் வைத்திருக்கிறார். உரம், சிமிண்ட் போன்ற பல பொருள்களின் விற்பனை ஏஜென்சியும் எடுத்திருக்கிறார். சொத்துக்களைப் பெருக்கிய அவர், மகாத்மா காந்தியும் தம்முடைய தந்தையும் கடைப்பிடித்த கொள்கைகளை அனுதினமும் சமயம் வாய்க்கும் போதெல்லாம் கூறி, தாமும் அந்தக் கொள்கைகளின்படி நடந்து காட்டி, தம்முடைய சந்ததிகளின் குணங்களையும் பெருக்குவதற்கு முயன்றார். அப்போது தாம் காதல் கல்யாணம் செய்து கொண்டதையும் மக்களுக்கு அவர் கூறியிருக்கிறார்.

'உங்கள் தாய் ஓர் ஏழைப் பெண். வேறு ஜாதி. நானும் அவளும் ஒரு சமயம் சந்தித்தோம்; நெருங்கிப் பழகினோம். பரஸ்பரம் விரும்பிக் கல்யாணமும் செய்து கொண்டோம். என் பெற்றோர்களைப் போலவே அவளுடைய பெற்றோர்களும் அதற்குச் சம்மதம் அளித்தார்கள். இன்னும் அவளுக்குப் பிறந்த வீட்டு உறவுகள்

# பயிர்களுக்குப் பாதுகாப்பு... உங்களுக்கு நிச்சய லாபம்

## இவை இரண்டையுமே அளிக்கிறது, எஸ்ஸோவின் புதிய பயிர் பாதுகாப்புத் திட்டம்.

**இப்பொழுது ஒவ்வொரு பயிருக்கும்...தனிப் பட்ட பாதுகாப்புத் திட்டம்.**

உங்கள் பயிர்களைப் பாழடிக்கும் பூச்சிகளையும் நோய்களையும் பற்றிய கவலைகளை இனி விட்டொழியுங்கள். எஸ்ஸோவின் புதிய பயிர் பாதுகாப்புத் திட்டங்களைக் கையாண்டு லாபமடையுங்கள்! எல்லா வகைப் பூச்சிகளிலிருந்து உங்கள் பயிர்களுக்கு முழுப் பாதுகாப்பும் அளிப்பதற்கென்றே இத் திட்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

உங்கள் பயிர், அதாவது நெல், பருத்தி, கரும்பு, நிலக்கடலை, புகையிலை, காய்கறிகள் ஆகிய எதுவானாலும், உங்கள் பயிருக்கு நேரும் தொல்லை எதுவானாலும், அதற்கான பரிகாரம் எஸ்ஸோவிடம் உள்ளது.

நினைவிருக்கட்டும், உங்கள் பயிர்களைப் பாதுகாக்க எஸ்ஸோ எத்தனையோ பூச்சிக்கொல்லிகளை வழங்குகிறது—மலேதியான், லிண்டேன், DDT,BHC, த்ரைதியான், என்ட்ரின், எஸ்ஸோ பூசணக்கொல்லி 406 (காப்டான்), களைக்கும் கந்தகம், இன்னும் எத்தனையோ பூச்சிக்கொல்லிகள் பல்வேறு உருவங்களில், அதாவது தூவக் கூடிய பொடியாகவும், தெளிக்கக்கூடிய திரவமாகவும் கிடைக்கின்றன.

யாவும் உங்களுக்கே...மேலும் பல நலன்களையும் அளிக்கிறது எஸ்ஸோ! தனது தொழில் நுட்ப செய்திறனையும், முதிர்ந்த அனுபவத்தையும் ஒவ்வொரு கிராமத்திற்கும் கொண்டு செல்கிறது எஸ்ஸோ.

ஒவ்வொரு பயிர் பாதுகாப்புத் திட்டம் பற்றிய விவரங்களையும் உங்கள் எஸ்ஸோ பூச்சிக் கொல்லி வியாபாரியைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். இன்றே!

அல்லது, எங்களுக்கு எழுதி, இலவசப் பிரசுரங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்: எழுத வேண்டிய முகவரி:

**எஸ்ஸோ ஸ்டாண்டர்டு ஈஸ்டர்ன் இன்க்.**

தபால் பெட்டி 355, பம்பாய் 1. அல்லது தபால் பெட்டி 146, கல்கத்தா 1. அல்லது தபால் பெட்டி 115, சென்னை 1 அல்லது தபால் பெட்டி 255, புது டெல்லி 1.

PESTICIDES

**எஸ்ஸோ ஸ்டாண்டர்டு ஈஸ்டர்ன், இன்க்.**

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடைமையுடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது.)

பம்பாய் . கல்கத்தா . சென்னை . புது டெல்லி

CHE-39-TAM

இருந்து வருவதுடன், பிறந்த வீட்டி லும் சுமுகம் நிலவுகிறது. ஒரு விதமான கவலேயோ, காய்ச்சலோ, கசப்போ இல்லே. காதலின் அடிப்படையிலும் பெற்றோர்களின் சம்மதத்தின் பேரிலும் நடக்கும் கல்யாணங்களே தெய்விக மான திருமணங்கள்....''

இப்படி அவர் சொல்லி வந்ததன் மூலம் காதலே அவர் ஆதரிப்பவர் என்பதை அவருடைய மக்கள் சுலப மாகப் புரிந்து கொண்டார்கள். அவ ருடைய மகன் — படித்துப் பட்டம் பெற்றும், கெட்ட சகவாசத்தினுலும் பணக்காரனின் பிள்ளே என்ற திமிரி ஞலும் துர்நடத்தைகளில் இறங்கிக் கெட்டழிந்து கொண்டிருந்தவன் — தந் தையின் கொள்கையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளத் துணிந்தான். எதிர் வரிசையில் ஒரு சிறு வீட்டில் குடியிருந்த ஒரு பெண்ணே ஏமாற்றி அவளோடு தொடர்பு வைத் துக் கொண்டிருந்தான். இந்தச் செய்தி தெரிந்த மாத்திரத்தில் ராமலிங்கம் பிள்ளே அவனேக் கூப்பிட்டுக் கேட்டார். அவன் ''காதல்'' என்று ஒரு வார்த் தையில் பதில் கூறிவிட்டான். அந்தப் பெற்றோர்களேயும் அவர் கூப்பிட்டுக் கேட்டார். அவர்கள் இந்தக் காத லுக்குச் சம்மதம் அளிக்க வில்லே. அவர்கள் சம்மதிக்கும்வரை காதலர்கள் காத்திருக்க வேண்டும் என்ருர் அவர். அந்த இளம் பெண்ணும் அதற்கு மனப் பூர்வமாகவே சம்மதித்தாள். ஆனுல் ஒரு வாரத்துக்குள்ளேயே ராம லிங்கம் பிள்ளேயின் மகன் அவளுக்கு ஆசை வார்த்தைகளேச் சொல்லி மனத் தைக் கலேத்து அவளேப் பெரிய சினிமா நடிகையாக்கிப் பெரிய பணக் காரியாக்குவதாகவும் தானே பணம் போட்டுப் படம் எடுக்கப் போவ தாகவும் உறுதி கூறி ரகசியமாக அழைத்துக் கொண்டு ஓடி விட்டான். சென்னேக்குச் சென்று கைப்பணம் கரை யும்வரையில் அவளே வைத்து வாழ்ந்து விட்டு, கடைசியில் அவளே எங்கோ விட்டு விட்டு மதுரைக்குத் திரும்பி வந்தான். அந்தப் பெண் தன் தீய நடத்தையால் தனக்கே துரோகம் செய்து விட்டதாகவும் அதனுல் அவளே உதறிவிட்டு வந்ததாகவும் தந்தையிடம் அவன் வேஷம் போட்டான். அவரது கட்டளேயை மீறி, அவளே ரகசியமாக அழைத்துக் கொண்டு ஓடிவிட்ட அவன் என்னென்னவோ சொல்லிப் பார்த் தான். ஒரு வார்த்தையைக் கூட நம்ப வில்லே அவர். நம்பாததுடன் அவனே அன்றே வீட்டை விட்டும் வெளி யேற்றினுர். ஆனுல் அன்று இரவே அவன் குடித்து விட்டுத் திரும்பி வந்து அவரைக் கண்டபடி திட்டி, அவரால் தான் தன் வாழ்க்கை கெட்டு விட்ட தாகவும் சொன்னுன். ''நீர் காதல் கல்யாணம் கலப்புக் கல்யாணம் செய்து என்னே ஜாதி கெட்டவனுக ஆக்கி விட்டீர்! உம்மைப் பார்த்து நானும் காதல் பண்ணி இப்போ நட்டாற்றில் கிடந்து தத்தளிக்கிறேன். உமது கெட்ட நடத்தைக்கு நான் பலியாகி விட்டேன். இப்போ நான் கேட்ட பணத்தைக் கொடும். எங்காவது போய்விடுகிறேன். கொடுக்க மறுத்தால் உம்மை ஒரு வாரத்துக்குள் தீர்த்துக் கட்ட ஆள் வைத்திருக்கிறேன்'' என்று கூச்சல் போட்டான். அவர் கொஞ்சமும் கலங் காமல், தயங்காமல் அவனே அடித்தே விரட்டினுர். அன்று போனவன் திரும்பி வரவே இல்லே.

ராமலிங்கம் பிள்ளேயின் மனேவியும், பெண்களும் பயந்து கொண்டிருந் தார்கள் — எந்த நேரத்தில் அவர் கொலே செய்யப் படுவாரோ என்று. அவர் கொஞ்சமும் கலங்கவில்லே. அத் துடன் மனேவி மக்களின் பயத்தையும் அவர் தெளிவித்துக் கொண்டு வந்தார். மகனே நம்பி ஓடி வாழ்க்கையையே பாழாக்கிக் கொண்ட பெண்ணின் பெற் ரேர்களிடம் நேரில் போனுர். தாம் மட்டுமல்ல, தம்முடைய மனேவி மக் களேயும் வேண்டுமென்றே அழைத்துக் கொண்டு போனுர். அத்தனே பேர் முன்னிலேயிலும் பெண்ணின் ஏழைப் பெற்றோர்களுடைய காலில் விழுந்து, ''என் மகனே நல்லவனுக மாற்ற முடி யாத என் குற்றத்தை மன்னியுங்கள். நீங்கள் கேட்ட அபராதத்தைக் கொடுக்கிறேன்'' என்று சொன்னுர். இதைக் கண்டு கஸ்தூரியம்மாளும் விஜயாவும் கலாவும் கண்ணீரை ஆருகப் பெருக்கி அழுதார்கள். பெண்ணின் பெற்றோர்களோ, 'எங்களுக்கு எங்கள் குழந்தை போன பிறகு உங்கள் பணம் எதற்கு? செப்புக் காசுகூட வேண்டாம். நீங்கள் போங்கள். ஆண்டவன் இருக் கிறுன். எங்களே அவன் காப்பாற்று வான்' என்று சொல்லி விட்டார்கள். என்ன சொல்லியும் அவர்கள் தங்கள் பேச்சையோ, மனசையோ மாற்றிக் கொள்ளாமல் சொன்னதையே சொல் லிக் கொண்டிருந்தார்கள்.

வீடு திரும்பிய ராமலிங்கம் பிள்ளே ஒவ்வொரு நாளும் மன நிம்மதி இல் லாமல் கழித்துக் கொண்டிருந்தார். விஜயாவிடத்தில்கூட அவர் பேசவில்லே.

கஸ்தூரியம்மாள் எந்த நேரமும் கண்ணீரும் கம்பலேயுமாக இருந்தாள்.



''அம்மா! ஸ்லேட்டைத் தொலைக்காமல் பத்திரமாகக் கொண்டு வந்திட்டேன்.''

விஜயாவோ ஆண் இனத்தையே விஷமாக வெறுக்கத் தொடங்கி விட்டாள்: தன் தமையனின் குடிவெறித் தோற்றமே ஆண் இனத்தின் உண்மைச் சொருபமாக அவளுக்குத் தோன்றியது. அவன் பேசிய இழிவான வார்த்தைகளும், அவனுடைய பயமுறுத்தல்களும், அவன் ஒரு பெண்ணை ஆசைகாட்டிக் கெடுத்த நயவஞ்சகமும் அவளுடைய மனத்தில் ஆழப் பதிந்து, ஆண்கள் என்றாலே அரக்கர்கள் என்ற முடிவுக்கு வந்துவிட்டாள். இந்த வெறுப்பும் கோபமும் சேர்ந்து, அவளை எந்த நேரமும் தற்காப்புக்கும் தாக்குதலுக்கும் தயாராக இருக்கும் வீராங்கனையைப் போல் மாற்றி விட்டது. பெண்மையின் நளினம், நாணம், மென்குரல் போன்றவை யெல்லாம் அவளிடமிருந்து மறைந்து விட்டன. பெரும்பாலும் மௌனமாகவே இருப்பாள்; பேசினால் வெடிப்புறப் பேசுவாள். நிமிர்ந்த பார்வையைத் தவிர குனிந்த பார்வையே கிடையாது. எந்த ஆணையும் அவள் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை.

கலாவின் நிலை வேறு விதமாக இருந்தது. தமையன் ஆட்டம் ஆடிவிட்டு மறைந்த மறுநாளே ஜுரமாகப் படுத்தவள் இருபது நாட்களுக்குப் பிறகுதான் எழுந்து உட்கார்ந்தாள்.

ராமலிங்கம் பிள்ளை ஒரு நாள் மனைவியிடம் சொன்னார்: 'நான்தான் தப்புப் பண்ணி விட்டேன். நான் உபதேசம் செய்ததிலும் குறையில்லை. எனக்குத் தெரிந்த வரையில், என் நடத்தையிலும் குறையில்லை. ஆனால் என் பிள்ளைகளின் சந்தோஷத்தையும் உன் சந்தோஷத்தையும் கருதி இந்தப் பங்களாவை வாங்கி விலை உயர்ந்த பொருள்களை வாங்கி நிரப்பி, உங்களைப் பிரபுத்துவ வாழ்க்கை வாழச் செய்து விட்டது என் தப்பு. இது அவனுக்குப் பணக்காரத் திமிரைக் கொடுத்து விட்டது. பணக்காரன் பிள்ளையைத் தங்கள் சுயநலத்துக்காகக் கெடுக்க எத்தனையோ பேர்கள் காத்திருக்கிறார்கள். இது காந்தி வாழ்ந்த நாடுதானா என்று நினைக்கும்போதெல்லாம் மனம் குமுறுகிறது. போகட்டும். என் தப்பை முதலில் சரி செய்கிறேன். நாம் இந்த மாதிரி இனி வாழக் கூடாது. இந்தப் பங்களாவிலும் இருக்க வேண்டாம். எளிய வாழ்க்கை போதும் நமக்கு. வேறு எங்கேயாவது போய்க் குடியிருப்போம்; நம்முடைய தவறுக்கு அப்படியாவது ஒரு பிராயச்சித்தம் செய்வோம்.''

மற்றொரு நாள், ''இந்த வீட்டில் இருந்து கொண்டு, விஜயாவுக்கும் கலாவுக்கும் கல்யாணங்களை நடத்தினால், பெண்ணை இழந்த அந்த ஏழைகளின் மனம், நம்முடைய ஆடம்பரங்களைக் கண்டு எப்படியெல்லாம் எரியும்? வேண்டாம், நமக்கு இந்தப் பங்களா வேண்டவே வேண்டாம்'' என்றார்.

கலாவுக்கு ஜுரம் குணமான ஒரு வாரத்துக்குள்ளாகவே அந்தப் பங்களாவைக் காலி செய்து வாடகைக்கு விட்டார். மணல் ரோட்டில் உள்ள தம்முடைய மற்றொரு பங்களாவின் மாடியில் அநேக ஆடம்பரப் பொருள்களைக் கொண்டு போய்ப் போட்டார். குடும்பத்தோடு அரசடி விநாயகர் கோவில் தெருவின் பழைய வீடு ஒன்றுக்கு வாடகை பேசிக் குடிபெயர்ந்து வந்தார். அவருக்குச் சொந்தமான எல்லா வீடுகளிலும் வாடகை கொடுத்து வசிக்கும் குடித்தனக்காரர்கள் இருந்தார்கள். அவர்களில் யாராவது ஒருவரைக் காலி செய்யும்படி சொல்லியிருக்கலாம். ஒருவருக்குமே தொல்லை கொடுக்கக் கூடாது என்று, அத்தனை சொந்த வீடுகளை வைத்திருந்தும் வாடகை வீட்டுக்கு வந்து சேர்ந்தார். மிஞ்சியிருந்த ஆடம்பரப் பொருள்களையும் அவர் வீட்டின் முன்பகுதியில் காட்சியாக வைக்கவில்லை. உள்ளே மறைவிடத்தில் கொண்டு போய்ப் போட்டார். கார் வைத்திருந்தது ஒன்றைத் தவிர மற்ற எல்லா அம்சங்களிலும் அந்தத் தெருவில் வசிக்கும் நடுத்தரக் குடும்பங்களைப் போலவே அவர்களும் வாழ்ந்து வந்தார்கள்.

இந்த விரக்தியும் பிராயச்சித்த உணர்ச்சியும் நிறைந்த வாழ்க்கையில், விஜயா சாதாரணப் புடவைகள்



# மிகவும் சிறந்த டிரான்ஸிஸ்டர் பிரபல



மினி பாப்
2 பாண்ட்
ரூ. 175,00

[illegible]
2 பாண்ட்
ரூ. 175:00



[illegible]
மீடியம் வேவ்
ரூ. 110.00



மினி மாஸ்டர் 3
2 பாண்ட்
ரூ. 220.00

# மர்பி டிரான்ஸிஸ்டர்



[illegible]
3 பாண்ட் ரூ. 283.00



மாடல் டிபி0816
3 பாண்ட்
ரூ. 415-00



[illegible]
மீடியம் வேவ் ரூ. 125.00

மர்பி டிரான்ஸிஸ்டருக்கு, பெரிய அளவு டார்ச் பாட்டரிகள் போதும்.
விலைகள் எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டவை. விற்பனை வரி தனி.

## உன்னத ஒலிநயம், சிறந்த அமைப்பு, சகாய விலை

மர்பி ரேடியோ இந்தியாவின் மிகப்பெரிய அதிநவீன டிரான்ஸிஸ்டர் பாக்டரியில் தயாரிக்கப் பட்டது. ரேடியோ தயாரிப்பில் 20வருட ஆராய்ச்சி அனுபவம் மற்றும் தொழில் நுட்பத்திறனே பின்பலமாகக் கொண்டிருப்பதால், ஒவ்வொரு மர்பி டிரான்ஸிஸ்டரும் சிறந்த டிரான்ஸிஸ்டராக விளங்குகிறது. இதுவரை 75,000க்கும் அதிகமான மர்பி டிரான்ஸிஸ்டர்களும், ரேடியோக்களும் வெளிநாடுகளில் மட்டுமே விற்கப்பட்டுள்ளன. மர்பியின் உயர்ந்த செயலாக்கத்துக்கும், மக்கள் விரும்புவதற்கும் இதை விடச்சிறந்த அத்தாட்சி வேறென்ன வேண்டும்?



**மர்பி இல்லத்தை மகிழ்விக்கிறது!**

MAF 157

உடுத்தி நகை நட்டுக்களும் அணியாமல் கிராமத்துப் பெண் மாதிரி காலத்தைக் கழித்தாள். அவள் முகத்தில் களையே இல்லாமல் போய்விட்டது. ஒரே ஒரு நாள் அம்மாவின் கட்டாயத்துக்காக ஏராளமான நகைகளுடனும் பட்டுப் புடவையுடனும் திருப்பரங்குன்றம் கோவிலுக்குப் போனதைத் தவிர, எப்போதுமே எளிய தோற்றத்தில்தான் காட்சியளித்தாள்.

அவளுடைய சோர்வையும், கலகலப்பின்மையையும் கண்டு ராமலிங்கம் பிள்ளை மிகவும் வருந்தினார். அந்தச் சமயத்தில்தான் ரங்கராஜனின் தரிசனம் அவளுக்குக் கிடைக்கத் தொடங்கியது. அந்தப் பால் வடியும் முகத்தைப் பார்த்ததுமே, பாறையாக இறுகிக் கிடந்த அவள் உள்ளத்தில் புனிதமான ஒரு ஸ்தல விருட்சத்தின் கன்று போல் குதூகலம் முளைவிட்டுத் தளிர்த்தது. ரங்கராஜனின் எளிமை, முக சோபிதம், அதில் தவழும் சாந்தம், கண்களில் துளும்புகிற கருணை நோக்கம் — அத்தனையும் சேர்ந்து, நம்ப முடியாத ஒன்றை நம்பும்படி அவள் மனசை மாற்றி விட்டது. 'இப்படிப்பட்ட முகமும் ஓர் ஆண் மகனின் முகம்தான்! ஆண்களில் இப்படிப்பட்டவர்களும் இருக்கிறார்கள்!'

ரங்கராஜனைக் கண்டது, தனக்கென்றே, தனக்கு நம்பிக்கையளிக்கவென்றே, தன்னுடைய தவறான கருத்தை மாற்றுவதற்கென்றே இந்த மண்ணுலகில் வந்து பிறந்திருக்கும் ஒரு தேவகுமாரனைக் கண்டது போல் இருந்தது. அவனுடைய தாயாரைப் பார்த்த பிறகு, இரண்டு பூரண சந்திரர்களைக் கண்டு, இரண்டு சந்திரர்களின் தண்ணொளியிலும் குளித்தெழுந்த உணர்ச்சியைப் பெற்றாள். அவள் தினந் தினம் இந்தச் சந்திரிகையில் நீராடுவதற்கு எத்தனையோ முறை அவனுடைய வீட்டுக்குப் போய்ப் போய் வந்து கொண்டிருந்தாள்; இப்பொழுதும் போய்க் கொண்டிருக்கிறாள்.

குடும்பக் கதையை விஜயா ரங்கராஜனிடம் சொல்லி முடிக்கும் போது இரவு ஒன்பது மணியாகிவிட்டது. வானத்தில் நிலவும் பிரகாசித்தது. அது பௌர்ணமி கழிந்த மூன்றாம் நாள் இரவு. சந்திரனின் மேல்பாகத்தில் சிறிது தேய்ந்திருந்தது. அழகான ஒரு குழந்தை தலையில் ஒரு கறுப்புத் தொப்பியைச் சாய்வாக வைத்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது என்று ரங்கராஜன் நிலவைச் சுட்டிக்காட்டிச் சொன்னான். சாலை மரங்களின் கிளைகளுக்கு ஊடே தெரிந்த அந்தச் சந்திரனின் அழகில் அவளும் தோய்ந்தாள்.

திரும்பவும் திருப்பரங்குன்றம் மலை உச்சிக்கே போய், நிலவு அஸ்தமிக்கும் வரையில் அவனோடு பேசியும் விளையாடியும் பொழுதைக் கழித்துவிட்டு வர வேண்டும் போல் அவளுக்கு ஓர் ஆசையும் ஏற்பட்டது. அவளுடைய மன வெளியில் எங்கும் எவ்விடத்திலும் ஒரே கனவுகள்; சொல் வடிவம் பெறத் துடிக்கும் கவிதைகள்....

இரண்டு நிமிஷங்கள் எதுவும் பேசாமல் இருவரும் மௌனமாக இருந்தார்கள். உள்ளுக்குள் எதையும் அவர்கள் சிந்திக்கக்கூட இல்லை. அகமும் புறமும் இன்னதென்று சொல்ல முடியாத ஓர் இன்பானுபவத்தில் மூழ்கியிருந்தார்கள்.

பிறகு விஜயா கனவிலிருந்து விழித்துக் கொண்டவள் போல், ஆனால் வேகமும் படபடப்பும் இல்லாமல், "போகலாம்தானே?" என்றாள். அந்த வார்த்தையோடு கனவின் மயக்கமும் தீர்ந்து விட்டது. அவன் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "இது நாம் புறப்பட்டு வந்த தினத்தின் இரவா, மறு நாள் இரவா என்கிறதை வீட்டிலே போய்த்தான் கேட்கணும்!" என்று சொன்னான். உடனே காரும் புறப்பட்டது.

ராமலிங்கம் பிள்ளையும், கஸ்தூரியம்மாளும், கலாவும் சாப்பிடாமலே விஜயாவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஒருவரிடத்திலும் துளிக்கூடக் கவலை இல்லை. பூரண மகிழ்ச்சியே அவர்கள் பேச்சிலும் சிரிப்பிலும் குமிழியிட்டுப் பொங்கியது. கார் வந்து நின்றதும், ராமலிங்கம் பிள்ளை எதிர்கொண்டு அழைக்க வாசலுக்கு ஓடி வந்தார்.

"இவர்தான்....." என்று ரங்கராஜனை அறிமுகப்படுத்தினாள் விஜயா.

அவனும் அவரும் ஏக காலத்தில் கைகூப்பினார்கள்.

'இந்த வாலிபரா விஜயாவின் தந்தை!' என்று ரங்கராஜன் ஆச்சரியப்படவும் செய்தான்.

ஓர் அரசன் மற்றொரு நாட்டின் பட்டத்து இளவரசனை வரவேற்பது போல், கைலாகு கொடுத்து அவனை உள்ளே அழைத்து வரவும் ஆசைப்பட்டார். ஆனால் ரங்கராஜன் கூப்பிய கரங்களைத் தன் உடம்போடு ஒட்டித்



மாமியார்: குடிக்கிறதுக்குக் கூழ் இல்லாதவளுக்குக் கொப்புளிப்பதற்கும் பன்னீர் வேண்டுமாம்!

மருமகள்: பின்னே.... உங்கள் வீட்டில் தண்ணீரா இருக்கு!

---

தொங்கப் போட்டுக் கொண்டு அடக்க ஒடுக்கமாக நின்றதால் அது சாத்தியமில்லாமல் போய் விட்டது.

"உள்ளே வாருங்கள்!"

"நேரமாயிட்டது! இன்னொருநாள்."

"ஒரு நிமிஷம் வந்து விட்டுப் போகலாம். விஜயா! கலா! கஸ்தூரி! விருந்தாளியை நான் மட்டும்தான் அழைக்க வேண்டும் என்கிறதில்லை. நீங்களும் அழைக்கலாம்...." என்று சொல்லி விட்டு அவர் புன்னகை செய்தார்.

ரங்கராஜன் உள்ளே சென்றான்.

"திருப்பரங்குன்றத்துக்கே போயிட்டு வர்றோம்ப்பா....." என்றாள் விஜயா.

ரங்கராஜனை உட்காரச் சொல்லி, "ஒரே நிமிஷத்திலே நீங்கள் போகலாம். ரொம்ப நேரம் உங்களை உட்கார வச்சிட மாட்டேன். இப்பவே மணி ஒன்பதரை. அங்கே அம்மா சாப்பிடாமல் இருப்பாங்கன்னு எங்களுக்குத் தெரியும்" என்று சொன்ன ராமலிங்கம் பிள்ளை, எதிரே தட்டில் இருந்த ஆரஞ்சுப் பழங்களில் ஒன்றை எடுத்துத் தம் கையால் உரித்தார். நன்றாக உரித்து, நரம்புகளையும் விதைகளையும் போக்கிவிட்டு, ஒரு தட்டில் விரித்து வைத்து, "சாப்பிடுங்கள்" என்றார்.

"சாப்பிடப் போற நேரம்" என்று அளவுகடந்த பணிவோடும், சங்கோசத்தோடும் சொன்னான் ரங்கராஜன்.

"ஒரு சுளை எடுத்துக் கொள்ளலாமே!"

"சரி" என்று சொல்லி விட்டு ஒரு சுளையையும், மரியாதைக்காக இன்னொரு சுளையையும் எடுத்துக் கொண்டு, "உத்தரவு தரணும். புறப்படுறேன்" என்று சொல்லி விட்டு எழுந்தான் ரங்கராஜன்.

அவரும் கூடவே எழுந்தார். "விஜயா, கலா வாருங்கள்!" என்று கூப்பிட்டார். மூவருமாகச் சேர்ந்து அவனை வீட்டு வரையிலும் போய் வழியனுப்பி விட்டுத் திரும்பினார்கள். திரும்பி வரும்போது கலா மட்டும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள். வாசலில் நின்று கொண்டிருந்த ரங்கராஜன் அவளைப் பார்த்து 'டாட்டா' காட்டுவதுபோல் கையை ஆட்டினான். அவள் வெட்கத்தினால் கையைத்தூக்க முடியாமல் தூக்கி 'டாட்டா' காட்டி விட்டுத் திரும்பிக் கொண்டாள்.

'எப்பேர்ப்பட்ட மனுஷன்' என்று வியந்து கொண்டு உள்ளே சென்ற ரங்கராஜன், தாயாரைப் பார்த்ததும், "அம்மா, சாப்பிட்டாயா?" என்று கேட்டான்.

"சாப்பிடணும்."

"நேரமாயிட்டதே!"

"நேரம் ஒண்ணும் ஆயிடல்லே. எங்கே போயிருந்தே, ராஜா?"

"அம்மா! என்னை மன்னிக்கணும். உன்கிட்டே சொல்லாமே நான் வெளியே போயிட்டேன். திருப்பரங்குன்றத்துக்குப் போனேன். அம்மா, உன்கிட்டே மறைப்பானேன்? சுற்றிச் சூழ சத்தியமும் அன்புமா நிறைஞ்சிருக்கிறப்போ, பொய் சொல்லி என்னையும் சூழ்நிலையையும் அசிங்கப்படுத்துறது எதுக்கு? விஜயாவும் நானும் போயிருந்தோம் — அவள் காரிலேயே......"

"உங்களோடே வேறே யாரும் வரல்லையா?"

"வரல்லே.... அம்மா, நீ என்ன நினைச்சாலும் சரி, — நீ தப்பா நினைக்க மாட்டேன்னும் எனக்குத் தெரியும் — நானும் விஜயாவும் முருகனுக்கு முன்னாலே நிற்கிறப்போ மனசிலே எவ்வளவு சுத்தமா நிற்போமோ, அப்படியேதான் இவ்வளவு நேரமும் பொழுதைக் கழிச்சிட்டு வர்றோம். சத்தியமாச் சொல்றேன்....."

ஞானவியம்மாள், "ராஜா! முதவிலே வந்து சாப்பிடு. அப்புறம் பேசலாம்" என்று சொல்லி அவனை அழைத்தாள்.

# சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

**271, அங்கப்ப நாயக் தெரு, சென்னை-1**

தந்தி விலாசம் : ''அர்பாங்க்'' — தொலை பேசி எண் :
தபால் பெட்டி எண் : 226 — 22766, 22767, 24589

எங்கள் வங்கியில் நீங்கள் போடும் டெபாசிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும் விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.

---

**சீசன் டிபாசிட் :** ரூ. 1,000 அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | |
|---|---|
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரை | 1.25% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை | 2.50% |

**பிக்செட் டிபாசிட் :** ரூ. 1,00 அதற்கு மேலும்

| | | | |
|---|---|---|---|
| 91 நாட்களும் | அதற்கு மேலும் | 6 மாதங்களுக்குள்ளாக | 4.50% |
| 6 மாதங்களும் | | 12 .. | 5.00% |
| 12 மாதங்களும் | .. | 2 வருடங்களுக்குள்ளாக | 5.75% |
| 2 வருடங்களும் | .. | 3 .. | 6 % |
| 3 வருடங்களும் | .. | 5 .. | 6.25% |
| 5 வருடங்களும் | அதற்கு மேலும் | | 6.75% |

**ரெக்கரிங் டிபாசிட் :** தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம் :

| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 5ம் அதன் மடங்குகளும் | 62 | 128 | 198.50 | 273 | 355 | 442 | 535 |

---

இதர விபரங்களை வங்கியின் கீழ்க்கண்ட அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் : |
|---|---|---|
| மயிலாப்பூர் : | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர் : | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 86510 |
| திருவல்லிக்கேணி : | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர் : | 19, பாண்டி பசார், சென்னை-17 | 442852 |
| காந்தி நகர் : | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஷெனாய் நகர் : | 8/1, செங்குந்த முதலித் தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ் : | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| மயிலாப்பூர் டாங்க் : | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| சாந்தோம் : | 79, சாந்தோம் ஹைரோடு, சென்னை-28 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு : | 14, கேசவபெருமாள்புரம், சென்னை-28 | 74215 |
| மவுண்ட் ரோடு : | 109, டி.- ஈ. மவுண்ட் ரோடு, சென்னை-18 (காமதேனு கூட்டுறவு சிறப்பு அங்காடி) | 440292 |
| சாஸ்திரி நகர் : | பி. 10, சாஸ்திரி நகர், சென்னை-20 | 76418 |

---

ஆர். கனகசபை, எம்.எல்.ஏ.
தலைவர்

டி. வர்த்தமானன்
காரியதரிசி

''அம்மா! நீ என்ன நினைக்கிறே?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

''நான் இப்போ ஒண்ணுமே நினைக்கல்லே — நீ பசியோடே இருப்பே என்கிறதைத் தவிர.''

''சும்மா சொல்லு!''

''ஒண்ணுமே சொல்ல எனக்குத் தோணல்லே, ராஜா. யோசனை பண்ணித்தான் பார்க்கணும், ஏதாவது சொல்றதுக்கு இருக்கான்னு.''

''நீ என்னவோ போல் பேசுறயே. எதுக்கு? வெளிப்படையாச் சொல்லு.''

''ராஜா! நீ ரொம்பச் சங்கடப் படுறே! அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. வா, நீயும் சாப்பிடணும்; உங்க அப்பாவும் காத்துக்கிட்டிருக்கிறார்'' என்றாள் ஜானகியம்மாள்.

## அத்தியாயம் 26

ரங்கராஜன் சென்னையிலிருந்து திரும்பி வந்த பிறகு அருணாசல முதலியார் மதுரைக்கு வரவே இல்லை. சென்னைக்குப் போகும்படி தன்னை வற்புறுத்திய அவர், தான் திரும்பி வந்ததும், இரண்டொரு நாட்களுக்குள்ளேயே தன்னைச் சந்திக்க மதுரைக்கு வருவார் என்று ரங்கராஜன் எதிர் பார்த்தான். ஆனால் பதினைந்து நாட்களுக்கு மேல் ஆகியும் அவர் வரவே இல்லை. இது ஏன் என்று அவன் திகைத்தான். தாயாரையும் கேட்டான். அந்த அம்மாள், ''வரவேண்டிய வேலை எதுவுமில்லே போலிருக்கு. அதனால் தான் வராமல் இருக்கிறாருன்னு தோணுது'' என்று சொன்னாள். ரங்கராஜன் அவருக்கு ஒரு கடிதமும் எழுதினான். அதற்கு அவர் பதில் போடும் போது, க்ஷேம லாபங்களை விசாரித்து, தமக்குச் சாத்தூரில் வேலைகள் அதிகம் இருந்ததால் மதுரைக்கு வர முடியாமல் போய்விட்டது என்று தெரிவித்து, கடைசியில், ''வருகிற திங்கட்கிழமை அப்பாவோடு நீ புறப்பட்டு வா. பத்திரங்களை ரிஜிஸ்தர் பண்ண வேண்டும். ரொம்ப நாள் ஆய்விட்டது. பிளுங்கு சுப்பையா அவசரப் படுத்துகிறான்'' என்று எழுதினார்.

அருணாசல முதலியாரின் கடிதம் வந்து நான்கு நாட்களுக்குப் பிறகு, சுந்தரி திருச்சியிலிருந்து ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அந்தக் கடிதத்தை வாசித்துக் கொண்டிருக்கும் போதே ரங்கராஜன் சிரித்தான். வாசித்த பிறகும் சிரித்தான். சுந்தரி எழுதியிருந்தாள்:

''விஜயா என்னை மறந்து விட்டாள் போல் இருக்கிறது. இப்போதைக்குள் அவள் எனக்குக் கடிதம் எழுதவே இல்லை. அதற்காக அவளை நான் தப்புச் சொல்ல மாட்டேன். நான் அவளுக்கு எழுதாத போது அவள் மட்டும் எனக்கு எப்படி எழுதுவாள்? ஆனால் கலா சமீபத்தில் எனக்கு ஒரு கடிதம் போட்டிருந்தாள். அவளாகவே தான் எழுதியிருக்கிறாள். நான் அவளுக்கு இது வரையிலும் எழுதவே இல்லை. அம்மாவிடத்தில் விஜயா ரொம்பப் பிரியமாக இருப்பதாகவும், அம்மாவைப் பார்க்காமல் ஒரு நாள் கூட அவளால் இருக்க முடியாது என்றும், அவள் தன் வீட்டில் இல்லை என்றால், அம்மாவோடுதான் இருப்பாள் என்று அவர்கள் வீட்டில் எல்லோரும் பேசிக் கொள்வார்கள் என்றும் கலா எழுதியிருக்கிறாள். நீயும் ஒரு நாள் அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தாயாம். இதையெல்லாம் படிக்க எனக்கு ரொம்பவும் சந்தோஷமாகத்தான் இருக்கிறது....''

இதுவரையிலும் இவ்வாறு எழுதியிருந்த சுந்தரி, இதற்குப் பிறகு வேறொரு மாதிரியில் எழுதியிருந்தாள்:

''ராஜா! உனக்குத் தெரியாதது இல்லை. இருந்தாலும் சொல்கிறேன். விஜயா நல்லவள். உன் மனசிலும் களங்கம் இராது. ஆனாலும் நீங்கள் அடிக்கடி சந்தித்துப் பேசுவது மற்றவர்களுக்கு விகற்பமாகப்படும். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. எவ்வளவு தான் மனசிலே களங்கம் இல்லாவிட்டாலும், வாலிப வயதில் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகுவது ரொம்பத் தப்பு. நாளை இதனால் பல சங்கடங்கள் ஏற்படக் கூடாது. அப்பாவும் அம்மாவும், சித்தப்பா குடும்பத்திலும் மனச் சங்கடப்படுகிற மாதிரி ஆனாலும் ஆகிவிடும். முக்கியமாக விஜயாவின் அப்பா அம்மாவைப் பார்க்க வேண்டும். நீங்கள் இப்படிப் பழகுவது தெரிந்தால் அவர்கள் அவளைக் கண்டிக்கத்தான் செய்வார்கள்; உன்னையும் பகைப்பார்கள். எதற்கு நமக்கு வீண் பகை? அதனால் உங்கள் பிரியம் இத்தோடு நிற்கட்டும். அவர்கள் வீட்டுக்கு நீ போக வேண்டாம். நம் வீட்டுக்கு அவள் வந்தால், அவளுக்கு நீதான் புத்திமதி சொல்லித் திருப்பி அனுப்ப வேண்டும். உனக்கு நான் புத்தி சொல்கிறேனே என்று என்னைக் கோபிக்காதே. எனக்குத் தெரிந்ததைச்

சொன்னேன். உனக்குத் தெரியாதது ஒன்றில்லே......''

''நீ திருச்சிக்கு ஒரு முறை வா. நம் குடும்பப் போட்டோவைக் காட்டி 'மாமா எங்கே?' என்று கேட்டால், ரூபி உன் முகத்தை விரலால் தொட்டுக் காட்டுகிறாள். 'மாமா வருகிறார் பார்' என்றால் வாசலை எட்டிப் பார்க்கிறாள். நீ சீக்கிரமாகவே இங்கே புறப்பட்டு வருவாய் என்று எதிர்பார்க்கிறோம்.''

சுந்தரியின் கடிதம் ரங்கராஜனுக்குச் சிரிப்பை உண்டாக்கியதற்குக் காரணம் விஜயாவின் பெற்றோர்கள் தன்னைப் பகைப்பார்கள் என்று அவள் எழுதியிருந்ததுதான். அது பரிகாசச் சிரிப்பு. ரூபியைப் பற்றி எழுதியிருந்ததோ சந்தோஷச் சிரிப்பை உண்டுபண்ணியது. அந்த வரிகளைப் படித்ததுமே, அம்மாவிடம் ஓடிப் போய் அவன் கடிதத்தைக் காட்டினான். ஞானகியம்மாள் ஒரு வரி விடாமல் வாசித்தாள். அவன் முகத்தையே ரங்கராஜன் பார்த்துக் கொண்டிருந்தான். ரூபியைப் பற்றிய பகுதியை வாசித்து முடிக்கும்போது மட்டும் இலேசாக ஒரு புன்னகை அரும்பியது. அது வரையிலும் அவள் முகத்தில் எவ்விதச் சலனமும் தென்படவில்லை. கடிதத்தை அவன் கையில் திருப்பிக் கொடுத்தாள் ஞானகியம்மாள்.

''விஜயாவைப் பற்றிச் சுந்தரி என்ன எழுதியிருக்கிறாள், பார்த்தாயா? அவள் நம் வீட்டுக்கு வந்தால் விரட்டிப்பிடணுமாமே! ரொம்பப் பயப்படறா, சுந்தரி! விஜயாவோட அப்பா அம்மாவைப் பத்தி அவளுக்கு என்ன தெரியும்?'' என்றான் ரங்கராஜன்.

''தெரிஞ்சிருந்தாலும், எழுத வேண்டிய முறைக்கு எழுதத்தானே செய்வாள்?'' என்றாள் அந்த அம்மாள்.

''அப்படின்னா என்ன அர்த்தம்? நீ என்ன சொல்லறே?''

''சுந்தரி வேறே எப்படி எழுதுவாள், ராஜா?''

''அது 'சரி'ன்னு சொல்றியா? விஜயாவை வீட்டுக்குள்ளே வராதேன்னு சொல்லணுமா?''

''இப்படி ஏன் கேட்கிறே? அவள் அப்படி எழுதினதிலே தப்பு இல்லேன்னு சொல்றேன். அவளே எழுதியிருக்கிறாளே, உனக்குத் தெரியாதது இல்லேன்னு. அதனாலே எதைச் செய்யணும் என்கிறதை நீயே தீர்மானம் பண்ணிக்கிறப்பலே விட்டுட்டாளே!''

'' எதைச் செய்யணும்? நீயே சொல்லு!''

''நான் சொல்றதுக்கு என்ன இருக்கு?''

''விஜயாவை 'வராதே'ன்னு சொல்லிக் கதவைச் சாத்திப்பிடட்டுமா?''

அவன் அப்படிக் கேட்டதுமே ஞானகியம்மாளுக்குக் கண்ணீர் வந்து விட்டது. முந்தானையால் வேகமாகக் கண்ணீரைத் துடைத்தாள்.

''அம்மா!.... ஏன்?'' — ரங்கராஜன் பதறிப் போய்க் கேட்டான்.

'' ராஜா! என்னை ஒண்ணும் கேட்காதே. என் வாயாலே நான் ஒருத்தரை வீட்டுக்குள்ளே வராதேன்னு சொல்லி அறிய மாட்டேன், ராஜா! விஜயாவையா....?'' — ஞானகியம்மாளால் பேசவே முடியவில்லை. அங்கே நிற்காமல் கண்களைத் துடைத்துக் கொண்டே உள்ளே போய் விட்டாள்.

சிரிப்பு மூட்டிய சுந்தரியின் கடிதம் சிந்தனைகளைக் கிளறி விட்டு விட்டது. அன்றே அவன் விஜயாவின் வீட்டுக்கும் போய் அவளிடமும் அந்தக் கடிதத்தைக் காட்டினான். அவளும் படித்து விட்டுச் சிரித்தாள். ''கலா கல்லூரியிலிருந்து வந்ததும் இதைக் காட்டணும்!'' என்றாள் அவள்.

ரங்கராஜன் அப்போது சொன்னான்: '' விஜயா! உன்னைப் போலத்தான் நானும் சிரிச்சேன் — கடிதாசைப் படிச்சுட்டு. ஆனால், இது சிரிக்கிற விஷயமில்லே என்கிற மாதிரி என் மனசுக்கு இப்போ தோண ஆரம்பிச்சுட்டது..''

''ஏன்?''

அம்மாவும் தானும் பேசிக் கொண்டதை ஒரு வார்த்தை விடாமல் சொன்னான் ரங்கராஜன். அம்மா அழுததையும் கூறினான். அப்போது விஜயாவும் கண்ணீர் விட்டு விட்டாள்.

''நீங்க அந்த மாதிரி அம்மாகிட்டே கேட்டிருக்கப்படாது. அவங்க மனசை ரொம்பவும் கஷ்டப்படுத்திட்டீங்க. அவங்க சொன்னதிலே என்ன தப்பு? சுந்தரி உங்கள் தங்கை என்கிற முறையிலே எப்படி எழுதணுமோ அப்படி எழுதியிருக்கிறான்னு உங்க அம்மா சொன்னதிலே ஒரு தப்புமில்லையே. அவங்களை இனி மேலேயும் இப்படிக் கேள்விகளைக் கேட்டுக் கஷ்டப்படுத்தாதீங்க'' என்றாள் விஜயா.

ரங்கராஜன் தான் தவறு செய்து விட்டதாக நினைக்கத் தொடங்கிவிட்டான். அதனால் அவன் சாத்தூருக்குப் போகும் வரையில் விஜயாவின் பெயரைக்கூட அம்மாவின் முன்னிலையில் உச்சரிக்கவில்லை. விஜயாவும் சுந்தரியின் கடிதத்தைப் பார்த்ததாகவே காட்டிக் கொள்ளாமல் அந்த இரண்டு நாட்களும் ஞானகியம்மாளை வழக்கம் போல் போய்ப் பார்த்துப் பேசிவிட்டு வந்தாள்.

(தொடரும்)

## குடை பெண்கள் சொத்து!



நாம் சர்வ சாதாரணமாக மழைக்கும் வெயிலுக்கும் குடை பிடித்துக் கொள்கிறோம். பிரிட்டனில் பெண்கள்மட்டுமே குடையைப் பயன்படுத்தலாம், இரு நூற்றாண்டுகளுக்குமுன்! இந்த வழக்கம் 1750ம் ஆண்டு வரையில் இருந்து வந்தது. அப்பொழுதெல்லாம், திடீரென்று மழை வந்து விட்டால் ஆண்கள் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டுதான் போவார்கள்.

1750ல்தான் இங்கிலாந்தைச் சேர்ந்த 'ஜோனஸ் ஹான்வே' என்பவர் இதில் ஒரு புரட்சியைச் செய்தார். தைரியமாகக் குடையைத் தெருவில் பிடித்துச் சென்று, 'குடை பிடித்த ஆணானார்'! இதனால் இவருக்கு ஏற்பட்ட இடைஞ்சல்கள் பல. பெண்கள் மட்டுமே பயன்படுத்த வேண்டிய குடையை இவர் பயன்படுத்துவதைக் கண்டதும் இவர் தெருவில் குடை பிடித்துச் சென்றபோது சில 'காலி'கள் இவர்மீது கல்லையும், மண்ணையும் எறிந்தனர். இருப்பினும் இவர் இவற்றைப் பொருட் படுத்தாமல் 1786ம் ஆண்டுவரை குடை பிடித்து வந்தார். இதன்பின் ஆண்களும் குடையைப் பயன்படுத்தலாம் என்று ஏற்பட்டது அங்கு!

ஆதாரம்: ''மிர்ரர்'' தகவல்: வி. ஸம்பத்குமார்

## திருமணத்துக்கு முன்னாலேயே விவாகரத்து!

திகைக்காதீர்கள்! 'பைத்தியம்' என்று பட்டம் சூட்டாதீர்கள்.

ஆங்கில அகராதியைப் புரட்டுங்கள்!

விவாகரத்து (Divorce) திருமணத்துக்கு (Marriage) முன்னால் தானே வருகிறது! - 'மணி'

## பிறந்த தினமே கிடையாது!

பிப்ரவரி மாதம் 29ந் தேதி (லீப் ஆண்டு) பிறந்தவர்களுக்கு நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பிறந்த தினம் வருகிறது என்று வருந்துகிறோமே! 2000 ஆம் வருடத்தில் பிப்ரவரி மாதத்துக்கு 30 நாட்களாம். 30ந் தேதி பிறந்தவர்கள் பிறந்த தினமே கொண்டாட முடியாதே!



ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் அவ்வாறு வருமாம். (பிப்ரவரிக்கு 30 நாட்கள்).

ஆதாரம்: லைப் - டைம் ஸ்பீக்கர் என்ஸைக்ளோபீடியா தகவல்: 'மணி'

## சங்கீத மகிமை!



உலகத்துக்கு ஜீவனையும் மனத்துக்கு மகிழ்ச்சியையும் கற்பனைக்குச் சிறகுகளையும் எல்லாவற்றுக்கும் உயிரையும் அளிப்பது சங்கீதம்.''

- பிளேட்டோ

''டி ஹெரால்ட்'' -- ''பாலி''

## இரட்டைக்கு இரட்டை!

ரஷ்யாவின் மின்ஸ்க் நகரத்தில் இரட்டைப் பிறவிகளான காலினா, இரினா என்னும் சகோதரிகள் சமீபத்தில் தாய்மைப் பேறு அடைந்தார்கள். இந்த இரட்டைப் பிறவிகளுக்குக் குழந்தைகள் பிறந்தன ஒரேநாளில்! இருவருக்குமே ஆண் குழந்தைகள் பிறந்தன! இருவருக்குமே இரட்டைக் குழந்தைகள் பிறந்தன!



ஆதாரம்: சோவியத் பூமியன் - தகவல்: ச. ஸ்ரீதரன்

**அ**வன் சென்ற வெகு நேரத்துக்குப் பின்னர்தான் சந்திரமௌலிக்குத் தன் உணர்வு வந்தது. அவளில் தன்னை இழந்த பரவசம்தான் நீங்கிற்றே தவிர, அவளைப் பற்றிய இனிய நினைவுகள் முற்றுப் பெற வில்லை.

முற்றுப் பெறும் எண்ணங்களை ஜகதாத்ரி எழுப்பி விட்டுப் போக வில்லை. உண்மையில், எண்ணங்களின் எழுச்சியையே அவள் தோற்றுவித்திருந்தாள்.

சந்திரமௌலியைப் பற்றி அவள் நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தாள், கடந்த ஆறு மாதப் பழக்கத்தில். அவனைப் பற்றிய சகலமும் அவளுக்குப் பிடித்திருந்தது. ஆனால், அவனுடைய தந்தையைப் பற்றி அவள் தெரிந்து கொண்டு விட்டாள்....?

எளிதில் உதறி விட்டுப் போகக்கூடிய மாதிரி இலேசான நேசம் பாராட்டவில்லை அவள் என்றுதான் சந்திரனுக்குத் தோன்றியது. ஆனால், அவளோ உயர்நீதி மன்ற நீதிபதியின் செல்வ மகள். உறவினர்களெல்லாம் பெரிய பெரிய பதவி வகிப்பவர்கள். கல்லூரி முதல்வர், கம்பெனி டைரக்டர், அறுவைச் சிகிச்சை நிபுணர், வெளியுறவுத் துறை அதிகாரி, போலீஸ் சூப்பிரிண்ட் இப்படி உறவினர்கள் அவளுக்கு. சந்திரனுக்கு? அவனுடைய தந்தை? சித்தப்பா? மாமா? ஐயோ, ஐயோ! இவர்களைப் பற்றிய எண்ணமே அவன் மனத்தில் ஒரு குவிவை உண்டாக்கிற்று.

ஜகதாத்ரி கண்டிப்பாகச் சொல்லி விட்டுப் போய் விட்டாள்: 'சந்தர்! உங்கள் தந்தையின் அனுமதியை எப்படியேனும் பெற்று விடுங்கள். என் அப்பா உங்களை இது வரை நேரில் பார்த்திரா விட்டாலும், என் மூலமாக நிறைய அறிந்திருக்கிறார். அதனால் என் பெற்றோர்களுடைய சம்மதத்தைப் பெறுவதில் சிரமம் இருக்காது. கல்யாணத்தை அலஹாபாத்திலேயே முறைப்படி நடத்தி விடலாம்.....'

சந்திரன் தனக்குள் சிரித்துக் கொண்டான். கல்யாணத்தை முறைப்படி நடத்திவிடலாமாம். மஞ்சக் கொல்லை ஜகதீசுவர கனபாடிகளின் மகன், மனமோகன் பிரணாதின் மகளை மணந்து கொள்வதற்கு 'முறை' என்ன வேண்டிக் கிடக்கிறது!....

ஆனால், நடந்து போனவைகளை அசை போடுவதற்குரிய நேரமில்லை, அது. உடனடியாகச் செயலாற்ற வேண்டிய தருணம். ஜகதாத்ரி சொல்லி விட்டாள் என்பதற்காக அல்ல. அவனாலும் அவளை மறந்து விட்டு இனி வாழ முடியாது. சந்திரனின்



உள்ளம் முழுவதையும் அவன் நிறைத்து நிற்கிறான். அவனைத் துறப்பதா ?

எல்லாம், ஆறு மாத காலத்துக்குள் உண்டான இறுக்கம்தான்.

மஞ்சக் கொல்லையில் ஐந்தாம் வகுப்பை முடித்து விட்டு, முதல் படிவத்தில் சேருவதற்காகப் பக்கத்து நகரத்துக்குப் போனதையே அவன் தந்தை ஆதரிக்கவில்லை. 'போதும்டா, படிப்பு. நாளேலேர்ந்து பாடசாலைக்கு வந்துடு' என்று சொல்லிப் பார்த்தார். பையன் பின்னலை முறுக்கிக் கொண்டு நின்றான். உள்ளேயிருந்து அவன் அம்மாவின் குரல் கேட்டது. 'ஹெட்மாஸ்டர் கூடச் சொன்னார் — ரொம்ப நன்னாப் படிக்கிறான்; நிறுத்திப்பிடாதீங்கோன்னு. அவனும் ஆசைப்படறான். ரெண்டு மைல்லே ஹைஸ்கூல் இருக்கு. நாலு பிள்ளைகளோடே அவன் போயிட்டு வரான் !'

"நீ சொல்றது சரி. என் மனசு ஒத்துக்கலையே ! கோணக் கோணப் படிச்சுட்டு, என்ன லாபம் ? படிப்பு! ஒரு தினை — தெரியுமா...?"

"அவனும், இப்படியே கஷ்டப்படணும்னு எழுதியிருந்தா... நான் என்ன பண்ண முடியும்? பெத்த மனம் கேக்கல்லே. சொல்லிப்பிட்டேன்....."

கரகரத்து வந்த குரலைக் கேட்டார், கனபாடிகள். ஒலி வந்த திசையை நோக்கினார். நிலைப் படிக்கு அப்பால் 'தாய்' என்ற ஒரு திருவுருவை அகக் கண்களால் கண்டார் கனபாடிகள்.

ஒரு பெருமூச்சு எழுந்தது.

வாழ்க்கைச் சௌகரியங்களை அமைத்துக் கொடுக்க முடியவில்லைதான், அவரால். ஆனால் அவர் அடியொற்றிச் செல்லும் அவன் மனத்தில் — மனக் குகையின் ஆதார பீடத்தில் — ஒரு மகத்தான குறையை விட்டு வைத்திருக்கிறாரே, அவர்? 'அவனும், இப்படியே கஷ்டப்படணும்னு...? எப்படியே? இப்போது கஷ்டமா படுகிறோம்? கஷ்டம் என்றால் என்ன? அது உடலைப் பற்றியதா, உள்ளத்தைப் பற்றியதா?...ஓ! இந்தச் சிந்தனை சதஸ்ஸுக்கு உரியது; சம்சாரத்துக்கு உரியதாகாது....

"சரி... படிக்கட்டும்..."

சந்திரன் குதித்துக் கொண்டே வெளியே ஓடினான். ராஜப்பா, கண்ணாயிரம், நட்டு, ராஜி, பாலாம்பா ஆகியோரிடம் இந்தச் செய்தியைத் தெரிவிக்க வேண்டாமா?

ஆறு ஆண்டுகளுக்குப் பின் இந்தச் சோதனை மீண்டும் தலைகாட்டிற்று. ஆனால், இந்தத் தடவை கனபாடிகளிடம் வலுவான வாதம் இல்லை. பயல் கணக்கில் நூறு, ஆங்கிலத்தில் எண்பது, விஞ்ஞானத்தில் எண்பத்தைந்து, பூகோளத்தில் எழுபத்தெட்டு, இரண்டாம் மொழியில் எண்பத்தி நாலு...

"உனக்கு இன்னும் ஏழெட்டு வருஷங்களுக்குப் படிப்பு இருக்குடா. உங்க அப்பா என்ன, சர்வேசுவரனே வந்தால்கூட உன் படிப்பை நிறுத்த முடியாது!... அவ்வளவு ஸ்ட்ராங்கா இருக்கு!...' என்றார் வெங்கிட்டு ஜோசியர்.

அவர் வாக்குப் பொய்த்ததில்லை.

சந்திரமௌளி இந்தியாவில் ஆறு வருஷங்களும் மேல் நாட்டில் ஓர் ஆண்டும் படித்து விட்டுத்தான் வேலையை ஏற்றுக் கொண்டான். ரிஷிகேசத்தில் வெளி நாட்டு உதவியுடன் கட்டப்பட்ட பெரிய உற்பத்திச் சாலையில் பொறுப்பான அலுவல் அவனுக்கு. ஜகநாதர்க்கு அதே உற்பத்திசாலையில் தணிக்கைப் பிரிவில் வேலை.



ஆறு மாதங்களுக்கு முன் ஒரு நாள்.

ரிஷிகேசம் நகரில் கங்கைக் கரையோரமாய் அமைந்திருந்த ''கீதா பவ''னில் ஒரு தவசீலரின் சொற்பொழிவைக் கேட்டுவிட்டுத் தோணித் துறைக்கு வந்தான் சந்திரமௌலி. அக்கரைக்குப் போய்த்தான் அவன் விடுதிக்குச் செல்ல வேண்டும். தோணித் துறையில் அதிகக் கூட்டமில்லை. மோட்டார்ப் படகு சில நிமிஷங்கள் முன்னர்தான் அக்கரைப் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தது. சிவானந்த ஆசிரமத்துக்கு எதிரில் பிரயாணிகளை இறக்கி விட்டு, அங்குள்ளவர்களை ஏற்றிக் கொண்டுதான் படகு திரும்பும். பதினைந்து நிமிஷமாவது ஆகும்.

படியில் நின்று கொண்டிருந்த சந்திரன் கரையை நோக்கித் திரும்பினான். ஜகதாத்ரி!

அதற்கு முன்னர் அலுவலகத்தில் அவளைப் பார்த்திருக்கிறானே தவிர, அவளோடு பேசியதில்லை. பேச வேண்டிய அவசியம் ஏற்பட்டதில்லை.

இப்போது அவளை நேருக்கு நேராகப் பார்க்கிறான். அவள் நின்ற நிலையைக் கவனித்தால், சிறிது நேரமாகவே அவள் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்றே அவனால் ஊகிக்க முடிந்தது. அவளோடு பேசுவதா, வேண்டாமா....?

''நமஸ்தே...'' அவள் முந்திக் கொண்டு விட்டாள்.

''நமஸ்தே'' என்றான் பதிலுக்கு.

''உங்களை அடிக்கடி சொற்பொழிவில் காண்கிறேனே?''

''ஆமாம். எனக்கு இம்மாதிரிச் சொற்பொழிவுகள் ரொம்பப் பிடிக்கும். அடிநாளிலிருந்தே அப்படி ஒரு குணம்...''

''எங்கள் பாஷை புரிகிறதா?''

''புரிகிறதாவது!.... உங்கள் மொழியில் நான் ஒரு லெக்சர் கொடுக்கட்டுமா?...''

கலீரென்று சிரித்தாள் அவள். கங்கையின் மெல்லோசையை அடக்கிக் கொண்டு எழுந்த சிரிப்பொலி மிக இனிதாய் அப்பிரதேசமெங்கும் பரவினாற்போலிருந்தது.

அந்தச் சில விநாடிகளில் அவன் மனதில் ஏதோ நிகழ்ந்துவிட்டது. இடையேயுள்ள வேறுபாடுகள் மறைந்தன. அவளருகே வந்து விட்டான்., அவன் — உள்ளத்தால்.

அன்றைய தினம் இருவரும் சேர்ந்தேதான் புனித நதியைக் கடந்தார்கள்.

லட்சுமண் ஜூலா அருகில் கார் நின்றது. முதலில் சந்திரமௌலி இறங்கினான். பின்னால் கதவுகளைச் சாத்தி, வண்டியோட்டியின் இருக்கையிலிருந்து ஜகதாத்ரி இறங்கினாள்.

''இந்த இடத்துக்கு வந்தால் எனக்கு உலகமே மறந்து விடுகிறது....கங்கையின் ஓங்கார நாதத்திலும் மலைச் சிகரங்களின் மரகதப் பசுமையிலும் நான் கரைந்து விடுகிறேன்!.... படலம் படலமாய் விழுந்து, கன்றி நிற்கும் பேரமைதியில் என் செவிப்புலன்கள் மட்டும் ஒரு மகத்தான இன்பச் செய்தியைக் கேட்கின்றன!....''

''ஆமாம். ஒரு காதலன்—காதலி என்றால், டில்லிக்குப் போவார்கள்; ஹோட்டலில் தங்குவார்கள்; ஊரைச் சுற்றுவார்கள். அதை விட்டு, சந்நியாசிகளின் இருப்பிடமான ரிஷிகேசத்துக்கா வருவார்கள்?...''

அவர்களிருவருக்குமிடையே நிலவிய அன்பின் தரத்தை அவ்விருவருமே நன்றாக உணர்ந்திருந்தார்கள். அவர்களைப் பிணைத்த பாசம், பருவக் கோளாற்றின் வெறி மயக்கமல்ல. மருக்கொழுந்தின் நறுமணம் போல் மேம்பட்ட மனங்களின் தழுவல் அது.

தன் கைப் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்துச் சந்திரனிடம் நீட்டினாள், ஜகதா.

''என்ன இது ஜகதா?''

''தெரியவில்லை?... கடிதம்!... என் தந்தை எனக்கு எழுதியது. இன்றுதான் வந்தது...''

''நான்... அதை....''

''...படிக்கலாம். படிக்க வேண்டும் என்பதற்காகத்தான் கொண்டு வந்தேன்...''

அவனுடைய கண்கள் தட்டெழுத்துக் கடிதத்தின் மேல் ஓடின. '...உன் கடிதம் எனக்குப் பரவசத்தை அளிக்கிறது. ஸ்ரீ சந்திரனின் தந்தை ஒரு வேத போதனைக் கல்லூரியின் முதல்வர் என்று அறிந்ததும் என் மனம் நிஜமாகவே ஆனந்தக் கூத்தாடியது. தென்னாட்டில்தான் வேதம் மிக நன்றாக ஓதப்படுகிறது. ஆகவே, வியாசரையும் வசிஷ்டரையும் நினைவுபடுத்தும் அப்பேரறிவாளரைக் காண என் மனம் பெரிதும், விழைகிறது....'

சந்திரனின் மனத்தில் யாரோ ஓங்கிக் குத்தினாற் போலிருந்தது. வேறு போக்கற்ற ஐந்தாறு சிறுவர்களுக்கு, கிளிப்பிள்ளைமாதிரி 'ஸஹஸ்ர சீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்...' என்று புருஷ ஸூக்தத்தைச் சொல்லி வைக்கிறவர் — 'வேத போதனைக் கல்லூரியின் முதல்வர்!'... ஆற்றுப் பழுப்பேறிய வேட்டியைக் கட்டிக் கொண்டு, மஞ்சக் கொல்லைக்கு அப்பால் உலகத்தையே அறியாத பழங்கால மனிதர் — வியாசர்!... வசிஷ்டர்!

ஐயோ, ஜகதா,... என் தந்தையைப் பற்றித் துருவித் துருவி நீ கேட்டபோது குறைத்தும் கூட்டியும், மறைத்தும் திரித்தும் சொன்னவைகளுக்கு நீ இப்படியா பொருள் கொண்டாய்?.. ஜகதா, என் தந்தைக்கு எங்கள் ஊரில் மதிப்பே கிடையாது! ஏதோ ஓர் அதிசயப் பிறவியைப் போல் அவரைப் பார்க்கிறார்கள்!...

நீயோ, உயர்நீதி மன்ற அதிபதியின் மகள்; நான், நா....ன்...

தயவுசெய்து என்னை மறந்துவிடு ஜகதா. என் தந்தையை மட்டும் நீ நேரில் பார்த்திருந்தால், கடைசி மட்டத்தில் இருக்கும் ஒரு வேலைக்காரனைப் போல் என்னை உதறி விடுவாய்... அவர் இதுவரை மேல் சட்டையே அணிந்ததில்லை என்பதே, அவர் பிற்போக்குக்குப் போதிய அடையாளமாகும்....

''என்ன?'' என்று உசுப்பினாள், ஜகதா.

''ஒன்றுமில்லை. நான் உள்ளூற மகிழ்ந்து கொண்டிருக்கிறேன்!'' என்று சொல்லி முடிப்பதற்குள் எப்படித் தவித்துவிட்டான்!

அவனுடைய ஒவ்வொரு பருவத்திலும் முன்னேற்றத்துக்குத் தடையாக இருந்திருக்கிறார், ஜகதீசுவர கனபாடிகள். அந்தத்

# ப்ரூக் பாண்ட்

# ப்ரூ இன்ஸ்டன்ட்

## நொடிப் பொழுதில் தயார்! கப்புகள் கணக்கிலே திருப்தி!

ப்ரூ தயாரிப்பது சுலபம்! வெந்நீரை ஊற்றி, விரும்பும் சுவை பெற பாலும் சர்க்கரையும் சேர்த்துக் கொள்ளவும். அசல் காபி—சிக்கரி மணமும் சுவையும் கொண்டு உங்களுக்குப் புத்துணர்ச்சி அளிக்க நொடிப் பொழுதில் ப்ரூ தயாராகிவிடுகிறது!

நினைவிருக்கட்டும், ப்ரூ தயாரிப்பதிலே, சிறிதுகூட சிரமமோ அல்லது வடிகட்டும் தொந்தரவோ கிடையாது.

இதற்கு மேலாக, நீங்கள் விரும்பும் சுவைக் கேற்றபடி ப்ரூவை சிறிது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ சேர்த்து தயாரித்துக் கொள்ளலாம்.

வாங்குங்கள் ப்ரூ—காபியும் சிக்கரியும் கலந்த சுவையை நன்கறிந்த ப்ரூக் பாண்டின் ருசி பார்த்துத் தரம் காணும் திறமையாளர்களால் கவனத்துடன் கலக்கப்பட்டது.

இது நொடிப் பொழுதிலாகிறது!
நேரம் மிச்சம்!
பணம் மிச்சம்!



தடைகளை மீறிக் கொண்டு தான், அவன் 'முன்னேறியிருக் கிறான்'. ஆனால், அவருடைய உறவை துண்டித்துக் கொள்ளாமல் அவன் தன் வாழ்வின் அடுத்த 'முன்னேற்றப் படி'யில் காலை எடுத்து வைக்க முடியாது. நிச்சயமாக, ஜகதாவை அவன் மணந்து கொள்வதை அவரால் சகிக்கவே முடியாது. அவரிடம் போய், காரண—காரியங்களை விளக்கி அனுமதி கோருவதில் பயனில்லை. செய்தியைக் கேட்டால் உள்ளம் துடித்துப் போவார்....

சரி, கல்யாணத்துக்கு அவருடைய அனுமதி எதற்கு? கல்யாணம் செய்து கொள்ளப் போவது நானா, அவரா?... அவருக்குத் தெரிவிக்காமலே ஜகதாவை மணந்து கொண்டு விடுகிறேன்!.... பின்னால் அவருக்குத் தெரிந்தால் தெரிந்து விட்டுப் போகட்டும். நான் ஏன் ஊர்ப் பக்கம் தலைகாட்டுகிறேன்?... மாதா மாதம் நூறு ரூபாய் அனுப்புகிறேனே, அப்பாவுக்கு. அதைவிட என்னவாம்?...



''எப்படி நடந்துகொண்டாலும் நல்ல பெயர் எடுக்க முடியலே.''

''யாரிடம்? மாமியாரிடமா? கணவனிடமா?''

''வீட்டு வேலைக்காரியிடம்!''

''அடுத்த வாரம் நான் ஊருக்குப் போகிறேன்...'' என்றான் ஜகதா.

''என்னவோ?''

''அப்பா வரச் சொல்லியிருக்கிறார்.''

''ஓஹோ...''

''நான் தனியாக வரக் கூடாதாம்...''

சந்திரமௌளி அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

''...கட்டாயம் உங்களையும் அழைத்துக் கொண்டு வரவேண்டுமாம்!...''

''என்ன விசேஷம், ஜகதா?''

''பிரயாகையில் 'அகில பாரத வித்வத் சபா' மகாநாடு நடக்கிறதாம். தென்னாட்டிலிருந்தும் மகா பண்டிதர்கள் வருகிறார்களாம்....அப்பாதான் மகாநாட்டுக்கு வரவேற்புக் குழுத் தலைவர். மகாநாடு ஒரு வார காலம் நடக்கிறதாம். மிக அபூர்வமாக நடைபெறுகிற கூட்டமாம், அது. அங்கே குழுமும் விற்பன்னர்களைச் சந்திப்பதற்கே பாக்கியம் செய்திருக்க வேண்டுமாம்!...''

''அதெல்லாம் சரி. எனக்கும் ஆசையாகத்தான் இருக்கிறது.... லீவு கிடைக்க வேண்டுமே?''

''நாளைக்கே மனுப் போடுங்கள். கிடைக்கும்.''

ஆனால், மகாநாடு தொடங்கிய இரண்டாம் நாளன்றுதான் அவர்களால் அலகாபாத் போய்ச் சேர முடிந்தது. வருங்கால மாப்பிள்ளையும் வருகிறார் என்பதால் ரயில் நிலையத்துக்கு வந்திருந்தார், மனமோகன் பிரசாத். பிளாட்பாரத்தில் தந்தையைக் கண்ட ஜகதாத்ரி, 'அப்...பா!' என்று கூவினாள்.

''கல்யாண் ஹோ. தும் க்யா போல்தி, பேட்டி?''

''தமிழ்! இவர் சொல்லிக் கொடுத்தது!''

பிரசாத், சந்திரமௌளியைப் பார்த்தார். அந்த வாலிப உருவம் அவருக்கு மிகவும் பிடித்ததாயிருந்தது. கண் கொட்டாமல் அவனைப் பார்க்க வேண்டும் போல் அவருக்கே இருக்குமானால், ஜகதாத்ரியைப் பற்றி என்ன சொல்ல?

''ஐயாம் வெரி ஹாப்பி டு மீட் யூ'' என்று கூறி, கை குலுக்கி விட்டுக் காரை நோக்கி நடந்தார் பிரசாத்.

பெரிய வீடு. மாளிகை என்றுதான் சொல்ல வேண்டும். பிரசாத், உயர்நீதிமன்ற நடுவர் என்பதோடு பரம்பரையாகவே செல்வச் செழிப்புள்ளவர் என்பதைச் சந்திரமௌளி உணர்ந்து கொண்டான்.

''ஆர் யூ ரெடி?'' என்று கேட்டுக் கொண்டே அவன் அறைக்குள் ஜகதாத்ரியுடன் நுழைந்தார் பிரசாத்.

''யெஸ். ஆனால், ஒன்பது மணிக்குத்தானே, காலை நிகழ்ச்சி ஆரம்பம்?''

''ஆமாம். ஆனால், நாம் நேரே கூட்டம் நடக்கும் இடத்துக்குப் போகவில்லை. மதராஸிலிருந்து வந்துள்ள பண்டிதர்கள் தங்கியிருக்கும் ஜாகைக்குப் போகிறோம்.... நான் உபசாரமாகச் சொல்லவில்லை. மிஸ்டர் சந்திரன், மனப்பூர்வமாகச் சொல்கிறேன். உங்கள் பக்கத்து வித்வான்கள் வேதம் சொல்வதைக் கேட்டால் அமிர்தத்தைப் பருகுவது போல் இருக்கிறது. அவர்களுடைய ஆசாரம் என்ன! அனுஷ்டானம் என்ன! இங்கே வந்திருக்கிற பத்துப் பன்னிரண்டு பேர்களோடு பேசிக் கொண்டிருக்கும்போது நான் இருத யுகத்துக்கே போய் விடுகிறேன். தங்களுடைய வாழ்க்கையையே உபநிஷதப் பெருங் கவிதையாக்கிக்கொண்டு விட்ட அவர்களே, உண்மையில், தியாக மணிகள். அற்பப் பொருளீட்டத்தில் ஈடுபடாமல், உலகம் உய்வதற்காக, ஞானத் தேட்டத்திலேயே கழிந்துவிட்ட வாழ்க்கை... அடடா! என்ன வாழ்க்கை!...''

சந்திரமௌளிக்குத் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. எவர்கள், அவன் ஊரில் பொருட்படுத்தப்படுவதில்லையோ, அவர்களுக்கு இந்த ஊரில் இவ்வளவு புகழுரையா? பரம மங்கள சுவாமிகள் எனப்படும் தென்னாட்டுத் துறவரசு, இம்மாதிரியான வேதக் கூட்டங்களுக்கு அவனுடைய தந்தையைத் தேர்ந்தெடுத்து அனுப்புவது வழக்கம். அவனுடைய தந்தை மட்டும் இங்கே வந்திருந்தால், இந்த மனமோகன் பிரசாத் பல்லக்கில் வைத்துச் சுமக்க மாட்டாரா?...

இருபது நிமிஷ ஓட்டத்துக்குப் பிறகு கார் நின்றது, ஒரு சிறிய கட்டிடத்தின் முன்.

அந்த வீட்டில் வேத வித்துக்கள் தங்கியிருக்கிறார்கள் என்று முன்னறிவிப்புக் கொடுக்க வேண்டிய அவசியமே இல்லை.

உள்ளே நிகழ்ந்த வேத கானம் வாசல்வரை கேட்டது.

பிரசாதைக் கண்டதும் கானத்தைக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் மரியாதையுடன் வழி விட்டார்கள். அங்கே... அவரே தான்!....

"நான் வரப்போறேன்னு உனக்கு எப்படியடா தெரிஞ்சுது?"

தாக்குண்டவன் போல் நின்றான், சந்திரன். அவனுடைய தந்தைக்கு என்ன பதில் சொல்வது?

"நான்... நான்... வந்து... இவர்..... இவள்....."

பிரசாத் கனபாடிகளைப் பார்த்தார், 'இவளை முன்னமேயே தெரியுமா?' என்ற குறிப்புடன்.

"அஹமஸ்மி தஸ்ய பிதா..."

"என்ன!" என்று வியந்த பிரசாத், சந்திரனின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டார். "இந்தப் பேரறிஞரின் குமாரரா நீங்கள்?... இப்போது என் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதற்கு வார்த்தைகளே இல்லை! நாங்கள் செய்துள்ள எத்தனையோ புண்ணிய கர்மாக்களின் பயனாகத்தான் இந்தச் சம்பந்தம் எங்களுக்குக் கிடைத்திருக்கிறது!... ஜகதாத்ரி, உன் மாமனாரின் காலில் விழுந்து வணங்கு குழந்தாய்!... பண்டிட்ஜி, நானும் நமஸ்காரம் செய்கிறேன்..."

சந்திரனின் உள்ளத்தில் விர்விர்ரென்று புயல் வீசியது. 'சோ'வென்று மழை பெய்தது; 'படபடா'ரென்று இடி இடித்தது.

ஆயிற்று. அப்பாவுக்கு எல்லாவற்றையும் தெரிவித்தாகிவிட்டது. இனி அவர் சீறியெழுந்து அவனைச் சபிக்க வேண்டியதுதான் பாக்கி!...

ஆனால், அவரோ நிலை பெயரா மலையைப் போல் கம்பீரமாக இருக்கிறார்!

அவர் பொங்கிச் சீறினால்தான் என்ன? அவன் தன் தீர்மானத்தை மாற்றிக்கொள்ளப் போகிறானா?... உண்மையில் அவர் பேரறிஞராக இருந்தால் அவன் வாழ்வில் தலையிடாமல் இருக்க வேண்டும்...

சிறிது நேரம் அளவளாவிக் கொண்டிருந்துவிட்டுப் புறப்படுகையில், 'இன்றிரவு தாங்கள் என் இல்லத்துக்கு வந்தருள வேண்டும்' என்று கனபாடிகளைக் கேட்டுக் கொண்டார், பிரசாத்.

"என்ன ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள், ஜகதாத்ரி.

"ஒன்றுமில்லை... அப்பாவை இன்னும் காணுமே என்று..."

கண்கள் இறைஞ்ச ஜகதா, ஒரு நிமிஷ நேரம் அவனைப் பார்த்தாள். பின், "அவர் குறுக்கே நிற்க மாட்டாரில்லையா?" என்று பொருள் பொதிவுடன் கேட்டாள்.

சந்திரன் ஆதரவாகப் புன்னகைத்தான். "அவர் நிச்சயம் நம் உறவுக்குத் தடைவிதிக்கத்தான் செய்வார். ஆனால், நான் முன் வைத்த காலைப் பின்வாங்கப் போவதில்லை; என்னை நம்பு, ஜகதா..."

கீழே ஆரவம் கேட்டது. பிரசாதின் குதூகலமான வரவேற்புச் சொற்கள் செவியில் விழுந்தன. கனபாடிகள் நாலைந்து சகாக்களுடன் வந்திருந்தார். ஜகதாவும் சந்திரனும் படியிறங்கி ஹாலுக்கு வந்தார்கள். அங்கே அறிமுகம் நடந்துகொண்டிருந்தது.

"இவர் மீமாம்ஸா பண்டிதர். தர்ம சாஸ்திரம் தலைகீழ்ப் பாடம். இவருடைய பையன் ஒருவன் கப்பற் படையில் பெரிய அதிகாரி.

"இவர் தர்க்க சிரோமணி. தொட்டதெல்லாம் கீதை வரும்!... இரண்டாவது பையன், கான்பூரில் தோல் ஆராய்ச்சி பண்ணுகிறான்."

"இவர் வியாகரண வித்வான். வாசாலகர். புத்திரன் பெர்லினில் இருக்கிறான்—அங்கேயே கல்யாணம் பண்ணிக்கொண்டு, குடியும் குடித்தனமுமாய்!..."

பிரசாத் எல்லாவற்றுக்கும் தலையசைத்துக் கொண்டே வந்தார்.

"என் பையனைப் பற்றி நான் ரொம்பவும் தவறாக எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் இந்தத் தலைமுறையின் சராசரி வாலிபனைக் காட்டிலும் அவன் எவ்வளவோ உயர்ந்தவன். அவனுக்கு நம் பண்பாட்டின் மேல் உள்ள ஆசையும் பிடிப்பும் என்னையே வியக்கச் செய்கின்றன.

"காலச் சக்கரத்தின் சுழற்சி இப்போது மிக வேகமாக இருக்கிறது. சூரியன் உதயமாகி அஸ்தமிப்பதற்குள் நிகழ்கிடும் மாறுதல்களைக் காண்கிறோம். எந்தப் புதுமைக்கும், அதாவது எந்த மாறுதலுக்கும் அதிசயப்படாமல் இருப்பதுதான் இந்த யுகத்தின் தர்மம்!

"யூனிபாரத்தோடு இருந்தாலும் வேறு உடை அணிந்திருந்தாலும் சிப்பாய் சிப்பாய் தான். யூனிபாரம் இல்லாததால் அவன் வீரம் குறைந்தா போகிறது? கேச அமைப்பிலும் மேல் உடையிலும்தானா நம் பண்பாடு ஒட்டிக் கொண்டிருக்கிறது? ஞானம் என்பது மனத்தைச் சார்ந்தது. கேச, உடை மாறுபாட்டால் ஞானத்துக்கும் பண்பாட்டுக்கும் இழுக்கு நேர்ந்து விடாது.

"என் பையன் ரிஷிகேசத்தில் கீதை கேட்க வருகிறான். பிரயாகையில் வேதம் கேட்க வருகிறான்.... அவன் இன்னமும் வைதிகன்தான். அந்தப் பொறி அவனுள் அணையாமல் இருக்கிறது. காலப் போக்கில், அது கனிந்து சுடர் விடும்....

"சந்திரா, நாங்கள் இருந்து கல்யாணத்தை நடத்தி வைக்கிறோமடா..."

மெல்ல எழுந்தான், சந்திரன். தொடர்பில்லாதது போல் தோன்றிய தந்தையின் சொற்களினூடே ஒரு பட்டிழையைக் கண்டான். அப்பா என்ற ஆசாரிய புருஷரின் பாதங்களில் விழுந்து தேம்பித் தேம்பி அழுதான்.

அடுத்த இருபத்தைந்தாம் ஆண்டில் இம்மாதிரியான ஒரு பிரச்னையை உறுதியோடு சமாளிக்கும் மனப் பக்குவம் அவனுக்கு வருமா?



மிகுந்த வலுவும்,
மிருதுவும் கொண்ட
**ட்ரயான்ஸ்**
**ரேயான் நூல்**
உங்களுக்கு
நிறைந்த லாபத்தை
தருகிறது.

ட்ரயான்ஸ் நூல் அதிகப்படியான வலுவும் சீரான தன்மையும் வாய்ந்தது. நிச்சயம் பூச்சியரிப்புக்கு ஆளாகாதது. சாயம் தோய்ப்பது எளிது. நெய்வதும் எளிது ஆகவே, சிறப்பான வலுவும் நீண்டகால உழைப்பும் கொண்ட துணிவகைகளை நெய்து, அவற்றை விரைவில் விற்று நிறைந்த அளவு லாபம் சம்பாதிக்கலாம் நீங்கள்.

மயில் நீலம், பொன் மஞ்சள், சிகப்பு மற்றும் பச்சை ஆகிய கெட்டிச்சாய நிறங்களிலும் கிடைக்கிறது. 75, 100, 120, 150 மற்றும் 300 டினியர்களில் உள்ளவற்றிலிருந்து உங்களுக்குத் தேவையானதைத் தேர்ந்தெடுங்கள்.



சென்னை மற்றும் ஆந்திர ராஜ்யங்களில் பிரத்தியேக ஸ்டாக்கிஸ்ட்டுகள்:
**ரேயான் ட்ரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
61, செம்புதாஸ் தெரு, சென்னை-1 போன்: 21641—தந்தி: 'CELYARN'
கிளைகள்: த.பெ.தெ. 253, சேலம். த.பெ.தெ. 154, மதுரை.
த. பெ. தெ. 1272, கோயமுத்தூர்

rt-4078

# லஞ்சம்

# கருப்பா சிவப்பா?

ஸ்ரீ பிரகாஷ்வீர் சாஸ்திரி, எம். பி.

நம் நாட்டில் பிரச்னைகளுக்கு ஒரு கங்குகரையே இல்லை. ஆனால் என் அபிப்பிராயத்தில், அந்த எல்லாப் பிரச்னைகளைக் காட்டிலும் மிக மிக அசாத்திய நிலையை அடைந்து விட்ட ஒரு பிரச்னை உள்ளதென்றால், அது ஊழலும் ஒழுங்கீனமுமே ஆகும்.

கங்கையின் உற்பத்தி ஸ்தானமான கங்கோத்ரியே தீமைப் பொருள்கள் கலந்ததாகிவிட்டால், கங்கையின் தூய வெள்ளத்தைத் தீமையினின்றும் யாரால் தப்புவிக்க முடியும்? நாட்டை நடாத்திச் செல்லும் தலைவர்களும், அரசாங்கப் பதவி வகிக்கும் அதிகாரிகளும் தங்கள் நடத்தையை அப்பழுக்கற்றதாக வைத்துக் கொள்ளாத வரையில் பிடுங்கி எறிய எறிய வளரும் காளான்களென ஊழலும் ஒழுங்கீனமும், வளர்ந்து கொண்டே இருக்குமே ஒழியக் குறையா.




நமது மக்கள் தலைவர்களிலும் அரசாங்கத் துறைப் பணியாளர்களிலும், யார் அதிகம் கடமையில் கண்ணு விருக்கிறார்கள், யார் அதிகம் ஊழலுக்கும் ஒழுங்கீனத்துக்கும் இடம் தருகிறார்கள் என்பதை இறுதியிட்டோ அறுதியிட்டோ கூற முடியாது.

இன்று முக்கியமான பதவி வகிப்போர்களிடையே ஊழலால் சூழப்படாதவர்கள் கிடைப்பது மிக மிக அரிது.

அமைச்சர் குழுவில் மிக உயர்ந்த பதவியில் இருந்து கொண்டு, நீதி—நிர்வாகங்களைக் கவனிக்கும் பொறுப்புள்ள பெரியோர்களில், தம் கையால் ஆக்கிய சட்ட திட்டங்களைத் தாமே புறக்கணிக்காதவர்களாக ஒரு சிலராவது கிடைப்பார்களா என்று கேட்டால் சட்டென்று விடையளிக்க முடியாது.



தேர்தல் விதிகளில் ஒன்று, அபேட்சகர் யாரும் ரூபாய் இருபத்தையாயிரத்துக்கு மேல் செலவிடக் கூடாது என்பது. ஆனால் இருபத்தையாயிரத்துக்கு மேல் செலவு செய்யாத ஒரு மந்திரி கூடக் கிடைக்க மாட்டார்கள். ஆண்டவன்மீது ஆணையாக நெஞ்சில் கைவைத்துத் தான் இருபத்தையாயிரத்துக்கு மேல் செலவு செய்யவில்லை என்று கூறக் கூசவே செய்வார்கள்.

தேர்தல் போரில் எத்தனையோ பேர் இலட்சக் கணக்கில் செலவிட்டு விதிகளை ஊரறிய மீறியிருக்கிறார்கள்.



ஆணி வேரிலேயே ஏற்பட்டு விட்ட இந்தப் பலவீனம் காரணமாக, மந்திரிமார்களே, தங்கள் இலாகாவில் பதவி வகிக்கும் அரசாங்க அதிகாரிகள் மீது எவ்விதமான கடுமையான ஒழுங்கு நடவடிக்கையும் எடுக்க முடியாமற் போகிறது. அதோடு தங்கள் கீழ் உத்தியோகம் பார்க்கும் அதிகாரிகளின் ஊழல்களை மூடி மெழுகவும் நேருகிறது. இல்லையென்றால், பொதுக் கணக்கு ஆய்வுக்குழு (பப்ளிக் அக்கௌண்ட்ஸ் கமிட்டி)வின் சிபாரிசுகளைக் குழி தோண்டிப் புதைக்கும் காரியங்களில் இறங்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிராதே.

ஆட்சியாளர்கள் இந்த ஆய்வுக் குழுவின் முடிவுகளை ஏற்றுக் கொள்ளாமல் உதறியதற்கு எத்தனையோ உதாரணங்களைக் கூற முடியும். ஓர் உதாரணம்: இந்தக் குழு மத்திய மந்திரி ஒருவரைக் குற்றவாளி எனக் குற்றம் சாட்டியது. ஆனால் ஏகோபித்த தீர்ப்பைக்கூட ஏற்க மறுத்துவிட்டது அமைச்சரவை. மீண்டும் ஒருமுறை பரிசீலித்துத் தன் முடிவையே உறுதிப்படுத்தியது. அம்முறையும் அம்மந்திரியை யாரும் அசைக்க முடியவில்லை. பிரதமரே அம்மந்திரியின் ஊழலுக்குப் போர்வை யிட்டு மறைத்தார்.

பொதுக் கணக்கு ஆய்வுக் குழு, பாராளுமன்றத்தின் பிரதிநிதிக் குழுவாகும். அதில் எதிர்க் கட்சி அங்கத்தினர்களும் இடம் பெற்றிருக்கிறார்கள். அப்படியிருந்தும் அதன் முடிவு மீது பல குழப்படிகள் செய்யப்படுகின்றன. இந்த விளையாட்டு நிறுத்தப்பட்டாலொழிய ஊழல்களைத் தடுத்து விலக்க முடியாது.

வேறு பல காரணங்களும் உள்ளன, ஊழல்களை வளர விடுவதற்கு. அவற்றில் ஒன்று, ஆட்சிப் பீடத்தில் அமர்ந்து அதிகாரம் செலுத்தும் சில சிப்பந்திகளின் எல்லை மீறிய தான்தோன்றித்தனமும், சோம்பேறித்தனமும் ஆகும்.

இந்தியாவின் பொருளாதார விதிகள், லைசென்ஸ், பர்மிட், கோட்டா முறையைச் சார்ந்திருக்கின்றன என்பதை எல்லோருமே அறிவார்கள். இன்று எந்தத் தொழிலும் லைசென்ஸ், பர்மிட் இன்றி நடைபெறுவதற்கு வழியில்லை. எந்த வியாபாரியும் இதனைப் பெறுவதற்காக மனுக்கள் அனுப்ப வேண்டியிருக்

## சபாஷ், சிவப்பு நாடா !

மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகக் கட்டடக் காம்பவுண்டில் பன்னிரண்டு லட்சம் ரூபாய் மதிப்புள்ள செருப்புத் தயாரிக்கும் இயந்திரம் ஒன்று வேலையற்றுக் கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. உள்ளூர்த் தொழிலதிபர் ஒருவர் செருப்புத் தயாரிக்கும் தொழிற்சாலை நடத்த முன்வந்து இயந்திரத்தை விலைக்குப் பேசியும், அவருக்கு உரிய லைசென்ஸ் கிடைக்காததே காரணம்!

ஏழு மாதங்களுக்கு முன் அவர் மத்திய சர்க்காருக்கு லைசென்ஸுக்காக விண்ணப்பித்துக் கொண்டார். ஜனவரி மாதம் மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகம் நடத்திய கண்காட்சியில் இடம் பெறுவதற்காக ஒரு ஜெர்மன் தொழில் அதிபர் இதைச் சென்னைக்குக் கொண்டுவந்தார். மத்திய தோல் ஆராய்ச்சிக் கழகம் இந்த இயந்திரத்தை வாங்க ஒருவரைப் பிடித்துத் தேவையான சுங்க பர்மிட் வசதிகளையும் பெற்றுள்ளது. வாங்குபவர் லைசென்ஸைப் பெற்ற பிறகு அவரிடம் ஒப்படைக்கப்படும். ஆனால் அந்தத் தொழிலதிபரின் விண்ணப்பம் தொங்கலில் நிற்கிறது.

சிவப்பு நாடாவின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, இந்த இயந்திரத்தை அனுப்பிய ஜெர்மன் தொழிலதிபருக்கு எப்பொழுது இதன் கிரயம் போய்ச் சேருமோ, அந்தச் சிவப்பு நாடாவுக்கே வெளிச்சம்.

கிறது. அம்மனுக்கள் மீது விரைவாகத் தகுதிக்கேற்ப நடவடிக்கை தொடுத்து முடிவு எடுக்கப்படுமானால் பெருமளவு லஞ்சம் கொடுத்து வாங்குதலை இயன்றவரை தடுத்து நிறுத்த முடியும். ஆனால் ஒரு சிரமம் என்னவென்றால், இந்த மனுக்களின் மீது உரிய காலத்தில் நடவடிக்கை எடுக்கப்படுவதில்லை. அவற்றின் மீது முடிவு எடுக்கும் விஷயத்தில் சில சமயம் வேண்டுமென்றும், சில சமயம் இயல்பாகவும் காலம் தாழ்த்தப்படுகிறது.

அசிரத்தை காரணமாக அலுவலகங்களில் பைல்கள் போராகக் குவிந்து விடுகின்றன. இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட பைல்கள் நிதி அமைச்சகத்திலேயே குவிந்து கிடக்கின்றன. இதனால் சம்பந்தப்பட்ட வியாபாரிகள் அல்லது தொழிலதிபர்கள் தங்கள் பொதுஜனத் தொடர்பு அதிகாரிகள் மூலமாக இலாகா அதிகாரிகளுக்குக் கையுறை பொருள்கள் கொடுத்துப் பைல்களை நகர்த்தி முன்னே கொண்டுசெல்ல வேண்டியதாகிறது.

இந்தப் பணியைத் தொழிலதிபர்களின் தொடர்பு அதிகாரிகள் செய்கிறார்கள். பெரிய பெரிய தொழில்துறை அதிபர்களுக்குத் தொடர்பு அதிகாரிகளாக ஏறக்குறைய ஆயிரத்து ஐந்நூறு பேர் தில்லியில் இருக்கிறார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் இரண்டாயிரம் இரண்டாயிரத்தைந்நூறு என்று மாதச் சம்பளம் பெறுபவர்கள். லஞ்சம் கொடுத்துப் பைல்களை நகர்த்தும் பணியை இவர்கள் திறம்படச் செய்கிறார்கள்.

லஞ்சம் கொடுக்கும் இவர்களுடைய முறையே தனித் தன்மை வாய்ந்தது. புது தில்லியில் புகழ் வாய்ந்த சூதாட்ட விடுதி உள்ளது. இங்கு தினமும் மாலை நேரங்களில் சீட்டாட்டம் நடைபெறுகிறது: சூதாட்டம் ஆடவும் வசதிகள் செய்து தரப்படுகின்றன: அதோடு ஒளிவு மறைவு இன்றி மதுபானத் துக்குமே வகை செய்து தரப்படுகிறது.

இந்த நிலையில் ஒரு புறம் அரசாங்க அதிகாரிகள் உட்காருகின்றனர். மறுபுறம் தொழிலதிபர்களின் தொடர்பு அதிகாரிகள் அமருகிறார்கள். தொடர்பு அதிகாரிகள் வேண்டுமென்றே தெரிந்து சூதாட்டத்தில் தோற்கிறார்கள். ஆட்டம் முடியும்போது அதிகாரிகளின் சட்டைப் பை ஆயிரக் கணக்கான ரூபாய்களால் நிரம்பி வழிகின்றன. இந்த மாதிரி லஞ்சங்களிலிருந்து அரசாங்க அதிகாரிகளில் யாருமே தப்புவதில்லை. ஆனால் இதை லஞ்சம் என்று அவர்கள் நினைப்பதில்லை. 'லஞ்சமா? அது என்ன கருப்பா சிவப்பா?' என்றுகூடக் கேட்பார்கள்.

இந்த முறையில் லஞ்சம் தருவதை அரசாங்கச் சட்டம் எதுவும் யாரையும் குற்றவாளி என்று குற்றம் சாட்டிச் சிறைப்படுத்த முடியாது. இத்தகைய சூதாட்டம் முற்றிலும் சட்டத்துக்கு உட்பட்டதாகவே மதிக்கப்படுகிறது. சீட்டாட்டத்தில் தோல்வி, வெற்றி ஏற்படுவது சகஜம்தானே? இங்கு யாரும் தற்செயலாக எத்தனை ரூபாய் வேண்டுமானாலும் ஜயிக்கலாம். யார் எத்தனை ஜயித்தார்கள் என்பதற்கு யாருமே கணக்குக் கேட்க முடியாது. இந்த வெற்றி தோல்வி முன்கூட்டியே நிச்சயிக்கப்பட்டதா அல்லது தற்செயலாக நிகழ்ந்ததா என்பதை யாரே தீர்மானிக்க முடியும்?

இந்தச் சூதாட்டப் பழக்கம் தொடர்ந்து நடக்கும் வரையில் ஊழலை மூடி மறைக்கச் சட்டபூர்வமான உபாயமும் இருந்தே தீரும். மத்திய அரசின் குற்ற இலாக்காப் பகுதியினர் கூட, எவ்வளவு கண் கொத்திப் பாம்பாக இருந்தாலும், லஞ்ச ஊழலில் ஊறித் திளைக்கும் இத்தகைய அதிகாரிகளைக் கையும் மெய்யுமாகப் பிடித்துத் தரும் காரியத்தில் வெற்றி காணவே முடியாது.

அரசாங்கச் சிப்பந்திகளின் இந்த லஞ்ச ஊழல்களைக் கண்காணிக்கவென்று ஒரு தனி இலாகாவே இயங்குகிறது. இத்துறை நல்லபடியே செயலாற்றுகிறது. இது எத்தனையோ ஊழல்களைக் கண்டுபிடித்திருக்கிறது. குற்றம் புரியும் சிப்பந்திகளின் பெயரைக் குறிப்பிட்ட இலாகா அதிகாரிகளுக்கும், அத்துறையின் மந்திரிமார்கள் வரைக்கும்கூடக் குறிப்பிட்டு அனுப்பியிருக்கிறது. ஆனால், மந்திரிமார்களே அந்த ஊழலை மூடி மறைக்க முயல்வதைத் தான் கண்டு வருகிறோம். மந்திரிமார்கள் வரை இத்தகைய லஞ்சம் வாங்கும் அதிகாரிகளின் பெயர்கள் போயும், அவர்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கப்படுவதில்லை.

நமது ஆட்சி முறையில் இத்தகைய ஒழுங்கீனங்களும் ஊழல்களும் மிகுதியாவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. ஒரு குறிப்பிட்ட இலாகாவைப் பற்றியோ அதன் அலுவல்களைப் பற்றியோ அநுபவமே இராதவர்களும் கூட இந்த இலாகாவை நிர்வகிக்கும் மந்திரிகளாக்கப்படுகின்றனர். மந்திரி ஆவதற்கு முன், அவர்கள் அந்த இலாகாவின் செயல்களையும் செயல் முறைகளைப் பற்றியும் 'ஆனா ஆவன்னா' கூடத் தெரியாதவராயிருக்கிறார்கள். அவர்களது அறியாமை

வைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்கிறார்கள் இலாகா சிப்பந்திகள். மந்திரிமார்கள் அவர்களை எப்படிக் கண்காணிக்க முடியும்? அவர்களுக்குத்தான் அரசியல் வியூகம் அமைப்பதிலிருந்தோ, அந்த வியூகத்தை உடைப்பதிலிருந்தோ அவகாசமே கிட்டுவதில்லையே! அரசியல் குட்டையில் மாட்டிக் கொள்ளும் அவர்களுக்கு அதிலேயே உழல்வதற்குத்தானே பொழுது சரியாக இருக்கிறது? அவர்கள் செவிக்கு அவர்களுடைய இலாகாவைப் பற்றிய ஊழல்கள் எட்டும்பொழுது வெள்ளம் தலைக்குமேல் மிஞ்சி விடுகிறது. அத்தனை ஊழல்களையும் மூடி மறைப்பதுதான் அவர்களுக்குப் பயனும் நலனும் தரும் செயலாகப் படுகிறது. பாசனத் துறை, கல்வித் துறை, உருக்குத் துறை முதலிய இலாகாக்களை நிர்வகித்த எத்தனையோ மந்திரிகளுக்கு இவ்விஷயங்களின் அடிப்படை அறிவுகூட இல்லை, அவர்களை மந்திரிகளாக்கியபொழுது.

ஊழல்கள் வளருவதற்கு 'அன்பளிப்பு' முறையும் மற்றொரு சிறந்த கருவியாக உதவுகிறது. அன்பளிப்புத் தருவதோ, பெறுவதோ கூடாது என்று கூறி அன்பளிப்பு முறைக்கு முற்றுப்புள்ளி வைக்காத வரையில் ஊழல்களைப் போக்க முடியாது. இதில் திருத்தமும், மாற்றமும் செய்து விடுவதனால் மட்டும் பலனளிக்கும் என்று தோன்றவில்லை.

ஊழல்களை ஒழிப்பதென்றால் அதிகாரிகளின் மனம் பண்படவேண்டும். தியாகத்தையும் தவத்தையும் மூலதனமாகக் கொண்டு சீரிய வாழ்க்கை நடத்துவோம் என்று உறுதி பூண்டு, ஒழுக்கத்தில் விருப்புள்ளவர்களாக அவர்கள் திகழவேண்டும்.

ஒழுக்கத்தால் உயர்வதற்கு அறத்தில் நம்பிக்கையோ அல்லது ஆண்டவன் மீது நம்பிக்கையோ மட்டும் போதுமானதல்ல என்பது உண்மையே. ஆனால் தர்மம்தான் மனிதனுக்கு ஆண்டவன் மீது நம்பிக்கை வைத்துச் செயல்பட அறிவு புகட்டுகிறது. தீய செயல்கள் புரிய அஞ்சக் கற்றுத் தருகிறது என்பதும் மறுக்க முடியாத உண்மை. ஆண்டவனுக்கு அஞ்சி வாழ்பவன் மறைமுகமாகக்கூட ஊழலுக்கு உள்ளத்தில் இடம் தரமாட்டான். துர்ப்பாக்கிய வசமாக நம் நாட்டில் அறக்கல்வி விஞ்ஞான வளர்ச்சிக்குக் குந்தகம் புரிவதாகக் கருதப்பட்டுப் புறக்கணிக்கப்படுகிறது. இது மிகத் தவறான கருத்து. தர்மத்தைச் சம்பிரதாயங்களுக்கு அப்பாற்பட்டதாகக் கருதித் தார்மிக வாழ்வுக்கும் கல்விக்கும் கதவம் திறக்க வழி வகை செய்ய வேண்டும்.

அறக் கல்வியின் உருவம் எத்தகையதாக இருக்க வேண்டும்? இந்தக் கேள்விக்கு விடை கூறப் புகுந்தால் எத்தனையோ கருத்து வேறுபாடுகள் தோன்றக் கூடும். ஆனால் தார்மிகக் கல்வி புகட்ட வேண்டுமா, வேண்டாமா என்பதற்கு விகல்பமான விடைகள் பெற நியாயம் இல்லை. ஆனால் இன்று அதுவுமே விவாதத்துக்குரிய விஷயமாகி விட்டது!

காங்கிரஸ் ஆட்சி கண்ட மாபெரும் தோல்வி, அது இளைஞர்களைத் தர்மத்துக்குப் புறம்பாக, தர்மத்தைப் புறக்கணிப்பவர்களாக ஆக்கி விட்டதும், நல்லொழுக்கமும், நன்னடத்தையும் இல்லாதவர்களாகச் செய்து விட்டதுமே ஆகும். இளைஞர்கள் முதற்கொண்டு எல்லோரும் காசாசை பிடித்தவர்களாகி விட்டார்கள். பணப் பித்தர்களாகி விட்டார்கள். பணமே பெரும் தருமம், காசே கடமை என்பதாகி விட்டது இன்றைய நிலை.

ஊழலை வேரோடு களைந்தெறிய ஒவ்வொரு மனிதனும் நல்லொழுக்கமுடையவனாக ஆக வேண்டும். ஏனைய ஆட்சி முறை உபாயங்களினால் ஊழல்களைத் தடை செய்ய முயற்சிகள் நடைபெறலாம். ஆனால் அவற்றைக் கொண்டு வேரோடிவிட்ட ஊழல்களை அடியோடு களைய முடியாது. 'ஊழல்களை வேரொடு களைய ஒரே வழி வாழ்க்கையில் நல்லொழுக்கத்தைக் கடைப் பிடிப்பதும், சமுதாய வாழ்வில் நன்னடத்தையை நிறுவுவதுமே ஆகும்.

—'நவநீத்' திலிருந்து தமிழாக்கம்: ரா. வீ.

## அட்டைப்பட விளக்கம்

அசுரர்களுக்கு அரசன் மகாபலி எத்தனை பாக்கியம் செய்தவன்! பாரத தேசம் முழுவதுமே அல்லவா அவனது நினைவு நாளைப் பவித்ரமாகக் கொண்டாடுகிறது! தமிழ்நாட்டை ஒட்டிய - பரசுராம க்ஷேத்திரம் என்று அழைக்கப்படும் கேரள நாட்டிலோ, மாவலித் திருவிழாவே எத்திருவிழாவினும் பெரிய திருவிழாவாக ஓணம் என்ற பெயரில் கொண்டாடப்படுகிறது.

சிங்க மாதம் என்று அழைக்கப்படும் ஆவணி மாதம்தான் மலையாளப் பஞ்சாங்கப்படி வருஷத்துக்கு முதல் மாதம். ஆகஸ்டு - செப்டம்பருக்கிடையே தொடங்கும் இம்மாதத்தில் திருவோண நட்சத்திரத்தன்று கொண்டாடப்படும் பண்டிகையே 'ஓணம்' என்று பிரசித்தி பெற்றுள்ளது. முதல் நாள் உத்திராடத்தில் தொடங்கிக் கொண்டாடப்படும் இப்பண்டிகை நம் தமிழ்நாட்டின் போகி, பொங்கலின் மாற்றுருவம் என்று கூறினால் சாலப் பொருந்தும்.

காரணம், இந்த ஓணத்தின் பொழுதுதான் இங்கு அறுவடை நடைபெற்று நெல் களஞ்சியம் உருவாகிறது. குடியானவர்கள் நிலச்சுவான்தார்களுக்குக் காயும் கறியும் பழமும் காணிக்கை அளித்து மகிழ்கிறார்கள்; நிலச்சுவான்தார்கள் தங்கள் குடியானவர்களுக்குப் புத்தாடையும் பொருளும் கொடுத்துக் களிக்கிறார்கள். குடும்பப் பெண்கள், தங்கள் வீட்டு வாசலைச் சுழித்துப் பெருக்கி மலர்க் கோலம் சமைத்துத் தங்கள் கைவண்ணத்தைக் காட்டுகிறார்கள். குழந்தைகளோ, புத்தாடை, அறுசுவை விருந்து, கேளிக்கைகளில் தங்களை மறக்கிறார்கள்!

மன்னன் மாவலி இக் காட்சியைக் கண்டு மகிழவே ஓணத்தன்று விஜயம் செய்வதாக ஐதிகம். அவனைத் திருவிக்கிரமனாக வளர்ந்து அளந்த வாமன ரூபன் விஷ்ணுவும் அன்று பூஜிக்கப்பெறுகிறான். இப்படியாகக் களிகூட்டி உலகத்தையும் உலகத்துக்கு அப்பாற்பட்ட பொருளையும் ஒன்று சேர்க்கும் ஓணப் பண்டிகையின் மகிழ்ச்சியில் மகிழ்ச்சி கொள்ளும் பெண்களை வித்யாஸ்ரதாவின் வண்ணப் படமாகக் கண்டு நாமும் மகிழ்ச்சி கொள்வோம்.



# வாக்குறுதி

எஸ்.ரங்கநாயகி.

அன்றுதான் குடும்பத்தாருக்கு அச்செய்தி தெரியவந்தது. சுந்தா, காதரின் என்னும் கிறிஸ்துவ அமெரிக்கப் பெண்ணுடன் தொடர்பு கொண்டிருக்கிறானாம்.

உதகமண்டலம் ஆராய்ச்சிக் கழகத்தில் இருவரும் இருந்தபோது இதய நெருக்கம் அங்கு ஏற்பட்டு விட்டது.

"ஆராய்ச்சி ஆராய்ச்சி என்று இப்படிஓடு கிறானே என்று நான் வந்த தினத்திலிருந்து எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. அதன் காரணம் என் கண்ணால் பார்த்ததோடு நண்பன் கூறியதைக் கேட்டதும்தான் விளங்கிற்று." —மூத்தவன் ராமன் விளக்கம் தந்தான்.

தாத்தா திருவேங்கடம் தூணோடு சாய்ந்து அமர்ந்தபடி கேட்டுக் கொண்டுதான் இருக்கிறார். நீரில் தேய்த்துத் தேய்த்து உள்ளங்கை நிறையத் திருமண் குழைவு இருக்கிறது. அவர் பருத்த உடலில் பன்னிரண்டு இடங்களில் பெரிதாக விளைத்து நாமம் இட அது போதாது. இரண்டாவது முறை குழைக்க வேண்டியிருக்கும். ஒரு வாரத்துக்கு மேல் ஒரு கட்டி நிற்காது. கரைந்து விடும்.

"தாத்தா! உன் உடம்பில் நெற்றியோ, வயிறோ தெரியவில்லை. வெள்ளை அடிச்ச மாதிரி திருமண்தான் தெரிகிறது" என்று சுந்தா சின்ன வயதில் பரிகசிப்பான்.

தாத்தாவும் சிரிப்பார். "திருமண் மட்டும் தெரிந்தால் நல்லதாப் போச்சு. தாத்தா தெரியாமலே இருக்கட்டும்."

"ஏன் தாத்தா அப்படி?"

"தாத்தாவின் உருவம் மட்டும் தெரிந்தால் தாத்தாவிடமிருந்து இன்னிக்கு எத்தனை பணம் பறிக்கலாம்னு கெட்ட பேரன் யோசிப்பான். நல்ல பேரனாக இருந்தால் தாத்தாவுக்கு இன்னிக்கு நல்லதாக என்ன செய்யலாம்னு கவலைப்படுவான். திருமண் மட்டும் தெரிந்தால் தாத்தாவையே மறந்து ஆண்டவன் திருவடிகளை அல்லவோ நினைப்பான். அந்தத் திருவடிகளை மறக்கக் கூடாது என்கிறதுக்குத்தான் திருவடி உருவில் திருமண் போடுகிறோம்."

"போ தாத்தா நீ. திருமண் மட்டும் தெரிஞ்சாக்கூட உன்னை நான் மறக்கவே மாட்டேன்."

"அப்படியே இருடா குழந்தை."

பால பருவத்தில் இப்படி யெல்லாம் பேசின சுந்தாவா தாத்தாவின் ஆசாரத்துக்கும், குலத்துக்கும் ஒத்துவராத செய்கையைச் செய்கிறான்!

சுந்தா இப்படி ஒரு பெண்ணைக் காதலிப்பதோ, மற்ற விவரமோ தாத்தாவுக்குத் தெரியாது. ராமன் சொல்லித்தான் அவருக்குத் தெரியும். அமெரிக்காவில் பணி புரியும் ராமன், அலுவலகக் காரியமாக இந்தியாவுக்கு வந்து தாத்தாவோடு தங்கி யிருக்காவிடில், அவனுக்கும் அச்சங்கதி தெரிந்திருக்கப்போவதில்லை. ராமனின் மற்றொரு தம்பி கோபு நாளைக்கு வருகிறான். அவன் வந்த

பிறகுதான் அவனுக்கும் தெரியப் போகிறது. சுந்தா இத்தனை தூரத்துக்கு வந்த பிறகும் தாத்தாவுக்கு எப்படித் தெரியாமல் போய் விட்டது?

"ஏன் தாத்தா, உனக்குச் சுந்தா மேலே கொஞ்சம் கூடச் சந்தேகம் தட்டாமல் எப்படி இருந்தது?" என்று ராமன் கேட்டான்.

"தாத்தாவைப் போய் ஏன் கேக்கறேள்? அவர் ஓர் அப்பாவி. பெற்றோர்களை இழந்து விட்டு மூன்று பேரன்களும் நிற்கிறதென்று தம் பொறுப்பிலே எடுத்து வளர்த்தவர். நீங்கள் மூவரும் படிப்பில் சூடிகை என்று தாத்தாவுக்கும் பெருமைதான். ஆனால் நீங்கள் அமெரிக்காவில் வேலை தேடிக் கொண்டீர்கள். கோபு



ஜெர்மனிக்குப் போனார். தாத்தாவை விட்டு நகர மாட்டேன்னு ஜம்பம் பேசின சுந்தா இப்படி மோசமாகப் போவான்னு தாத்தாவுக்குத் தெரியுமா?" ராமன் மனைவி சுமதி தான் பேசினாள்.

தாத்தாவாகப் பார்த்து இந்தச் சுமதியை ராமனுக்கு மணம் முடித்து வைத்தார். அவரேதான் கோபுவுக்கும் பெண் பார்த்து ரமாவை விவாகம் செய்து வைத்தார். சுந்தாவுக்கான விவாகக் கடமை பாக்கி நிற்பது அவருக்குத் தெரியும். சுமதி, ரமாவையும் விட உயர்வாக உயர்ந்த குலம் கோத்திரம் பார்த்து ஆசார சீலமுள்ள குடும்பத்தில் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்க மனத்தோடு முடிவு செய்து வைத்திருந்தார். யார் எக்கேடு கெட்டுப் போனாலும் தாத்தாவை விட்டுப் பிரியவே மாட்டேன் என்று கூறும் சுந்தாவுக்கு மனைவியாக வாய்ப்பவள் தாத்தாவின் ஆசாரத்துக்கு ஒத்து வரக் கூடியவளாக இருந்தால்தானே நல்லது? கடைசியில் சுந்தா இப்படிச் செய்து விட்டானே!

திருவேங்கடம் ஆராதனையை முடித்துக் கொண்டார். சாப்பாடு முடிந்ததும் துண்டை விரித்து விசுப் பலகையில் படுத்துக் கொண்டார். அருகில் ராமன் வந்து உட்கார்ந்தான். அவன் சுந்தாவைப் பற்றித் தனக்கு எப்படித் தெரிந்தது என விவரித்துக் கொண்டே போனான். பேரன் சொல்லிக் கொண்டே போன போது தாத்தா மனத்தோடு ஆண்டவனை நினைத்து அவன் செயல்களை அசை போட்டார்.

சுந்தா ஊரில் இல்லை. ஏதோ ஆராய்ச்சிக்காக ஊட்டிக்குப் போயிருந்தான். சகோதரனை ரயிலேற்றி விடுவதற்காக ராமன் ஸ்டேஷனுக்குப் போனது காரணமில்லை. ராமன் வருவது தெரிந்திருந்தால் சுந்தா எச்சரிக்கையுடன் இருந்திருப்பான். கல்லூரி நண்பன் முரளியை ஸ்டேஷனில் சந்திக்கச் சென்றான் ராமன். சுந்தா ஒரு பெண்ணுடன் நெருங்கிப் பழகுவது தெரிந்தது. பிறகு மற்றவைகளை முரளி கூறிவிட்டான். அந்தப்

பெண்ணும் சுந்தாவும் காதலர்கள் என ஆராய்ச்சி சாலையில் பணி புரியும் முரளியின் தம்பி சொல்லி யிருக்கிறான். ராமன் சுந்தா அமர்ந்திருந்த ரயில் பெட்டியின் அருகில்கூடச் செல்லவில்லை. வீடு திரும்பி விட்டான்.

திருவேங்கடத்துக்குத் தூக்கம் வரவில்லை. ஆனால் ராமனுக்குச் சாப்பிட்ட மயக்கம் படுத்து விட்டான்.

மறுநாள் கோபு ரமாவுடன் வந்துவிட்டான். அவனும் ஓர் அமெரிக்கக் கம்பெனியில்தான் பணி புரிகிறான். அக் கம்பெனி பல நாடுகளில் கண்ட்ராக்ட் எடுத்து நிறுவனம் அமைப்பவர்கள். அந்தந்த நாட்டில் காண்டிராக்ட் முடிந்து மற்றொரு நாட்டுக்குச் செல்லும்போது இடையில் பணி புரிபவர்களுக்கு விடுமுறை உண்டு. மீண்டும் எங்கு அனுப்புகிறார்களோ அங்கு போக வேண்டும். அந்த விடுமுறையில் கோபு வந்திருந்தான்.

''என்ன தாத்தா, சுந்தா எப்படி இருக்கிறான்? அத்தனை மூளையை வைத்துக்கொண்டு தாத்தாவுக்காக இந்த ஊரை விட்டு நகர மாட்டேன் என வெளியே பெரிய வேலை தேடிப் போகாமல் இருக்கிறானே, அவன் முன்னேற வேண்டாமா?'' என்று கோபு கேட்டான். இந்தத் தாத்தா தான் பேரனைப் பாழடித்திருக்கிறார் என்பவன் அவன்.

''நன்னாக் கேட்டேள் போங்க. நான் வந்ததுமே சுமதி மன்னி எல்லாம் சொல்லிவிட்டாள்!'' எனக் கூறிய ரமா, சுந்தாவின் காதல் செய்தியைக் கூறினாள்.

''ரியலி...!'' ஸ்புட்னிக் சமாசாரம் கேட்ட பட்டிக்காட்டான் நிலையில் கோபு ஆச்சரியத்துடன் ஆச்சரியமாகக் கேட்டான்.

''சுந்தாவா...சுந்தாவா இப்படி? என்னால் நம்ப முடியலையே...''

அவனுக்கு நம்பிக்கை வரும்படி ராமன் தான் கண்ணால் கண்ட காட்சியைக் கூறினான்.

''அது சரி ராமா! ஆனால் கதையிலே படிக்கிற மாதிரி கடைசியிலே சும்மா அண்ணா தங்கச்சி மாதிரிப் பழகினோம்னு ஒரே அடி அடிச்சுட்டால் அப்புறம் நாம்தானே பெப்பேன்னு நிக்கணும்?''

''போடா போ, கண்ணால் பார்த்த பிறகும் இந்தத் தம்பி சொன்னால் நம்பிவிடுவேனா...?''

''ஆமா....ம், நம்ப தாத்தாவுக்கு...'' என்று பேச்சில் நிறுத்திவிட்டுக் கண் ஜாடையில் 'இதெல்லாம்' தெரியுமோ?' எனக் கோபு கேட்டான்.

ராமன் ஒலியெழுப்பியே பதில் கூறினான்.

''தாத்தாவிடம் நான் எல்லாம் சொல்லி விட்டேன். இதை மறைத்து என்ன லாபம்? சொல்லப் போனால் நானும் நீயும் இப்படி ஏதாவது நடத்தி யிருந்தால் தாத்தாவைப் பாதிக்காது. சொல்லாமலே மறைத்து விடலாம். ஆனால் சுந்தாவோ தாத்தாவின் உயிராக இருக்கிறானே. அவன்தானே தாத்தாவைத் தன்னிடம் வைத்துக் கொள்ளப் போகிறான்! அதனால் சொல்லிவிட்டேன்.''

அன்று முழுதும் வீட்டிலுள்ளோர் சுந்தா செய்து விட்டதைத்தான் பேசித் தீர்த்தார்கள்: நிரவல் செய்து விட்டு ஒரே பல்லவியை வந்து தொடும் வித்வானைத் தாத்தாவுக்கு அருமையான சுந்தா செய்திருக்கிறான்' என்ற வாசகங்களைத் தொட்டுத் தொட்டுப் பேச்சுக்கள் புழங்கின. திருவேங்கடத்தின் முகத்தில் மகிழ்ச்சியே இல்லை.

சுந்தா ஊரிலிருந்து திரும்பி விட்டான். உற்சாகமாக உள்ளே நுழைந்தான். கோபு, ரமா இருவரும் வந்து விட்டதை அறிந்து மகிழ்ச்சியில் பூரித்துப் போனான்.

''இப்பத்தான் வீடு நிறைந்திருக்கிறது'' என அவன் ஆனந்தத்துடன் கூறியபோது, மற்றவர்கள் ஒருவரை யொருவர் பொருள் பொதிந்த பார்வை பார்த்துக் கொண்டார்கள். சுந்தா வழக்கம் போல் வந்ததுமே உடைகளை மாற்றி வேஷ்டியை சுற்றிக் கொண்டு தாத்தாவை நமஸ்கரித்தான். பிறகு தான் ஸ்வாமி சந்நிதியில் நமஸ்காரம். தாத்தாவும் வழக்கம் போல் 'தீர்க்காயுஷ்மான் பவ' என்கிறாரே, அக் குரலில் தொய்வு இருக்குமோ! ராமனும் கோபுவும் யோசித்த போது சுந்தாவுக்கு அப்படி இருப்பதான எண்ணமே தோன்றவில்லை.

வழக்கம் போல் சுந்தா குளித்து விட்டுத் தாத்தாவின் பூஜைக்கான பணிகளில் ஈடுபட முயன்றபோது சுமதி ஓடி வந்தாள். ''நான் இருக்கும்வரை நானே எல்லாம் எடுத்து வைக்கிறேன். தாத்தாவுக்குக் கொஞ்சம் நிம்மதியாக இருக்கும்'' என்று அவள் சொன்னபோதும் சுந்தாவுக்கு ஒன்றும் புரியவில்லை. தாத்தாவுக்குப் பணி செய்யச் சுமதி ஆசைப்படுவது எவ்வளவு நல்லது?

தாத்தாவுக்கு எல்லாமே புரிந்தது. அவர் பேசவே இல்லை.

வழக்கம் போல் சாப்பாடு முடிந்து அனைவரும் கூடத்தில் அமர்ந்தனர். சுந்தா பாட்டுக்குக் கோபுவோடு அவன் வேலையைப் பற்றிப் பேசிக் கொண்டே போனான். ராமன் தவித்தான். நாடகத்துக்கான திரை நீக்கத்தைத் தாத்தா ஏன் இன்னும் தாமதமாக்குகிறார்?

''தாத்தா, கேளுங்களேன். ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டாமா?''

''எனக்குப் பேசவே தெரியலையேப்பா.''

''இந்த அப்பாவித்தனம்தான் அவனை இப்படி ஆக்கி விட்டிருக்கிறது'' என்று ராமன் முணு முணுத்தான்.

கடைசியில் சுமதிதான் ஆரம்பித்தாள். ''சுந்தா, இத்தனை இரகசியமாக இருந்திருக்கும் என நாங்கள் நினைக்கவில்லை. உலகில் கலப்புத் திருமணம் இதெல்லாம் சகஜம் தான். ஆனால்...''

சுந்தா திடுக்கிட்டு அவளைப் பார்த்தான். ''என்ன மன்னி சொல்கிறாய்?''

ராமன், மனைவி காட்டிய பாதையைத் தொடர்ந்தான். ''இதெல்லாம் பூடகமாக நீயும் நாங்களும் பேசிக் கொண்டிருப்பானேன்? எனக்கு எல்லாம் தெரியும். கண்ணால் பார்த்து விட்டேன்'' என்றவன், தான் ஸ்டேஷனில் பார்த்ததைக் கூறிவிட்டு நண்பன் கூறிய விளக்கத்தையும் கூறினான்.

''ராமா...'' சுந்தா பல்லை நறநறவெனக் கடித்துச் சினத்தின் அறிகுறியைக் காட்டினான். 'திருவேங்கடம் அவனைக் கூர்ந்து

# சம அந்தஸ்து

சமுதாயத்தில் யாவருக்கும் சம
அந்தஸ்து ஏற்படக்கூடிய சூழ்நிலையை நான்
தோற்றுவிக்க விரும்புகிறேன்.
பாட்டாளி மக்கள் இவ்வளவு
நூற்றாண்டுகளும் ஒதுங்கி
வாழ நேர்ந்தது. அவர்கள்
தாழ்ந்தோராகக் கருதப்பட்டனர்.
அவர்களே சூத்திரர்கள் என்றும்,
சமுதாயத்தில் தாழ்ந்தோரைக்
குறிப்பதாக இந்த சொல்லுக்குப்
பொருள் கூறப்படுகிறது.
நெசவாளி, விவசாயி, மற்றும்
பள்ளிக்கூட ஆசிரியர் ஆகியோரின்
மக்களிடையே வேற்றுமை பாராட்டப்படுவதை
நான் அனுமதிக்க மாட்டேன்.






மகாத்மா காந்தி

நோக்கினார்: அவருக்குப் புரிகிறது: செய்யாத குற்றத்துக்குப் பழிச் சொல் கேட்டு மூளும் சினம் அல்ல அது. அச்சத்தைத் தாண்டிவிட்ட சினம்.

ராமன் சளைக்கவில்லை. கோபம் கொள்ளவில்லை. "இந்தாடா தம்பி! நீ கோபித்துக் கொள்வதனால் என்ன பயன்? நான் அது போல் ஒரு பெண்ணையும் காதலிக்கவில்லை என்று நீ உயிருக்குயிராக மதிக்கும் தாத்தாவின் முன் வணங்கிச் சொல்லி விடு. எங்களுக்கும் நம்பிக்கை பிறந்து விடும். தாத்தாவின் முன் சத்தியத்தின் சத்துருவாக இருக்க மாட்டாய் என்பது எங்கள் உறுதி."

சுந்தாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. சப்த நாடியும் உள்ளுக்குள் ஒடுங்கிவிட்டது போல் இருந்தது. முதுகில் கூர்மையான ஈட்டியால் குத்தி விட்டது போன்ற நோவு ஏற்பட்டது. ராமன் எவ்வளவு கெட்டிக்காரன். ஒரே சொல்லில் அழுத்தமான வேலி பிணைத்துச் சுந்தாவைத் தப்ப முடியாமல் சிக்கவைத்து விட்டான்! உலகத்துப் பொருள்கள் அனைத்திலும் ஈசுவரனைக் காண முயலும் போது சுந்தாவோ அவற்றில் தாத்தாவைக் காண விழைபவன். மலரின் சிரிப்பு தாத்தாவின் களங்கமற்ற புன்னகை. ஆதவனின் ஒளி, தாத்தா அவனுக்கு வழி காட்டும் ஒளி. இப்படியெல்லாம் தாத்தாவையே உலகமாக நிறுத்திப் பார்க்கும் சுந்தா அந்தத் தெய்வத்தின் முன் பொய் கூற மாட்டான் என்ற ஒரே அம்பில் சுந்தாவை வீழ்த்திவிட்டான்.

சுந்தா மௌனமாகத் தாத்தாவை நோக்கினான். திருவேங்கடமும் அவனை நோக்கினார். அவர் பார்வையில் அவன் பொருள் புரிந்து கொண்டான். 'இப்படி நான் ஒரு பெண்ணையும் காதலிக்கவில்லை' என அவன் கூறமாட்டானா என அவர் தவித்தார். ஆனால் அவனால் அவர் சந்நிதானத்தின் முன் பொய் கூறவே முடியவில்லை. காதலியைக் காதலிப் பதை விட இவர் முன் பொய் கூறுவது மகா பாபமாக அவனுக்குப் பட்டது. அதனால் அவனால் பேச முடியவில்லை.

மூன்று நிமிட மௌன காலத்துக்குப் பிறகு அந்தச் சூழ்நிலையில் சுந்தா செய்துவிட்டது உண்மைதான் என்பது திருவேங்கடத்துக்கும் ஏனையோருக்கும் விளங்கி விட்டது. ராமன் தான் முதலில் அந்த இடத்தை விட்டு எழுந்தான். பிறகு கோபுவும் எழுந்தான். சுந்தா சண்டை போடுவான், அதற்கெல்லாம் என்னென்ன பதில் கூற வேண்டும் எனத் தங்களைத் தயாரித்துக் கொண்டிருந்த கமலியும் ரமாவும் அக்காட்சி சப்பென முடிந்து விட்ட போக்கில் வெறுப்புக் கொண்டு எழுந்தனர். தாத்தா தாம் இருந்த இடத்திலேயே படுத்துவிட்டதும், சுந்தா விருட்டென்று மாடிக்குச் சென்று தன் அறையில் கட்டிலில் சாய்ந்து விட்டான். கண்களில் முதன் முறையாக நீரின் அனுபவம்.

'ஓ! என்ன செய்து விட்டேன்... தாத்தா, தாத்தா! உன்னை எப்படி மறந்து போனேன்? உலகின் ஒவ்வொரு பொருளிலும் உன் நிழலைக் கண்டவன், காதலியிடம் மட்டும் உன்னைக் காணாமல் எப்படி வஞ்சிக்கப்பட்டேன். அமெரிக்காவிலிருந்து வந்தவளைச் சந்திக்க வைத்து ஆண்டவன் ஏற்படுத்திய



"ருசி நல்லா எழுதுறது.... பின்னே ஏன் இது வேண்டாம் என்கிறீங்?"

"நல்லா எழுதுறது.... ஆனா கடிக்கச் சாப்பிட நல்லா இல்லை!"

சோதனையில் தோற்றுவிட்டேனே... ஆண்டவன் ஏன் இப்படிப் பொறாமை கொள்ள வேண்டும்? தன்னைத் திரும்பியும் பாராமல் தாத்தாவையே நேசிக்கிறானே என்ற வஞ்சகமான எண்ணத்துடன் ஆண்டவன் இப்படிச் செய்திருப்பானோ...?

'தாத்தா, நான் தப்புச் செய்து விட்டேன். இந்தத் தவறு உங்களை எப்படியெல்லாம் பாதிக்கும் என யோசியாமல் இருந்துவிட்டேன். அன்னிய ஜாதி, மதம். அப்பெண்ணைத் தாத்தா எப்படி ஏற்பார், அவள் சமைத்ததை எப்படிச் சாப்பிடுவார், அவளை அருகில் எப்படி நெருங்க விடுவார் என்று நினைக்காமலே என்னால் எப்படி இருக்க முடிந்தது...?

'ஓ, காதலின்! நான் உன்னிடம் எப்படியெல்லாம் இன்பக் கதைகள் பேசி உன்னை என் உடைமையாக்கிக் கொண்டேன். என்னை நம்பின உனக்கு எப்படி ஏமாற்றம் தருவேன்? உன்னை மணந்தால் தாத்தாவுக்கு ஏமாற்றம். 'சுந்தா, டேய், சுந்தா என்ன செய்துவிட்டாயடா நீ...' தன்னையே அவன் கேட்டுக் கொண்டான். அவனுக்குப் பதில் கிடைக்கவில்லை; திணறினான். மனப் பக்குவம் என்பது ஒரு விநாடி அசைவிலும் நிலை குலைந்து எத்தனை அதள பாதாளத்தில் தள்ளப்பட்டுச் சீரழிந்து போகிறது!

அன்றையப் பொழுது எப்படியோ கழிந்து விட்டது. ராமன் கோபு தம்பதிகள் வழக்கம் போல் வெளியே போய் வருகின்றனர். சுந்தா மாடியை விட்டு இறங்கவில்லை. தாத்தாவும் பேரனைக் கூப்பிடவில்லை.

மறுநாள் சுந்தா வழக்கம் போல் தாத்தாவை நமஸ்கரித்தான். ஆண்டவனையும் மறக்கவில்லை. ஆனால் தாத்தாவுக்காகச்

செய்யும் பணிகளை மறந்த நிலையிலேயே இருந்து விட்டான். தாத்தாவும் அவனுக்கு நினைவுபடுத்த மறந்து விட்டிருப்பாரோ?

சுந்தா ஆராய்ச்சிச் சாலைக்குச் சென்று விட்டான். வீட்டில் விமரிசனம் தொடர்ந்தது.

''எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எப்பவும் தாத்தாவுக்கு நெருக்கத்தைக் காட்டுபவன், இப்படி நம் மதம் விட்டு எப்படிக் காதலிக்க முன்னேறினானோ... தாத்தா அப்பெண்ணை விலக்கி விடும்படி சொல்லி விட்டால் கேட்டாலும் கேட்பான்.''

''அவ்வளவு எளிதாகச் சொல்லி விட முடியுமா? இதெல்லாம் காதல் பிரச்னை. இவன் தள்ளினாலும் அப்பெண் சும்மா விடுவாளா?''

''அவளை ஒதுக்கிவிடக் கஷ்டம் இருக்காது. அவளுடைய பெற்றோர் அமெரிக்காவில் இருப்பவர்கள். அவளுக்கு ஏதாவது பணத்தைக் கொடுத்து அனுப்பி விடலாம்.''

''பாவம், அவள்!''

''பாவம் என்ன, பாவம்! அவர்களுக்கு இதெல்லாம் தண்ணீர் குடிப்பது போல. விவாக ரத்து என்பது வாழ்க்கையை ருசிக்க வைக்கும் சாதகமான சலுகை என்ற குறிக்கோள் கொண்டவர்களுக்கு ரிஜிஸ்டர்கூட ஆகாத இந்தக் காதலையும், இவனையும் விட்டு விட்டு மற்றொருவனை மணாளனாக ஏற்பதில் தயங்க மாட்டாள்.''

''இவன் அவளை விடணுமே!''

''நான்தான் சொல்றேனே, தாத்தாவின் கையில் ஸ்குரு இருக்கிறது. இவனை வழிக்குக் கொண்டு வர நேற்றே எனக்கு உபாயம் தோன்றிவிட்டது. தாத்தாவின் பணத்துக்கும் இந்த வீட்டுக்கும் நாம்தான் வாரிசுதாரர்களென்று உங்களுக்குத்தான் தெரியுமே? தாத்தா முன்பே பாகத்தைப் பிரித்துவிட்டார். பணத்தை நம்மிருவருக்கும் பிரித்து விட்டு இந்த வீட்டை மட்டும் சுந்தாவுக்கென வைத்துவிட்டார். தாத்தா அவனிடம் 'அடே சுந்தா, உன் பெயருக்கு நான் இந்த வீட்டை அப்படியே வைத்திருக்கணும்னா, நீ அந்தப் பெண்ணை மறந்துட்டு நமக்குத் தகுந்தபடி நான் காட்டும் பெண்ணை மணக்கணும். இல்லாட்டா உனக்கு வீடு கிடையாது' என்று சொல்லணும்...'' என்று கூறிய கோபு தாத்தாவை ஒரு முறை திரும்பி நோக்கினான். ''என்ன தாத்தா, நான் சொல்றது புரியறதா?''

திருவேங்கடம் மௌனம் சாதிக்கவில்லை. ஒரு கேள்வி கேட்டார்: ''சொத்துக்கு ஆசைப் பட்டு அப்பெண்ணை மறந்துவிடுவானா?''

''ஏன் மறக்க மாட்டானாம்? காதலெல்லாம் நாலு நாட்கள் வாழ்வுதான் தாத்தா. அப்புறம் இவனுக்கே அலுத்து விடும். சொத்து அஸ்திரத்தைப் பிரயோகித்தால் இப்போதே நகர்ந்து விடுவான்''.

அன்று பேச்சு இத்துடன் நின்றுவிட்டது.

''டேய், சுந்தா...''

குரல் கேட்டதுமே, ஏங்கித் தவித்தவன் செவியில் அபய ஒலியாக ஏற்று, சுந்தா ஓடிச் சென்று தாத்தாவின் கரங்களைப் பற்றிக் கொண்டான். தாத்தா கூப்பிட்டு விட்டார். இனிப் பேசுவார்;

''சுந்தா, ராமன் சொன்னதெல்லாம் உண்மைதானடா?''

சுந்தா தாத்தாவின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான். ராமன் கூறியது போல் தாத்தாவின் சந்நிதியில் அவனால் பொய் கூற முடியவில்லை. மெள்ளத் தலை குனிந்து கூறினான். ''ஆமாம் தாத்தா! இது எப்படி நடந்தது என்று எனக்கே புரியவில்லை. லைட்டியில் ஒரே அறையில் இருவரும் தங்கு மளவுக்குப் பாதை நீண்டு போய் விட்டிருக்கிறது.''

தாத்தா அவனிடமிருந்து தம் கையை விடுவித்துக் கொள்ளவில்லை. கண்களை மட்டும் மூடியபோது இரு சொட்டு நீர் பேரன் கைகளில் விழுந்தது. 'பரந்தாமா, பக்த வத்சலா' என்ற ஒலி மட்டும் எழும்பியது; சுந்தா தவித்துப் போய் ஏதோ சொல்ல வாயெடுப்பதற்குள் வெளியே சென்றிருந்தவர்கள் வீடு திரும்பி விட்டனர். தாத்தாவும் பேரனும் கலைந்து விட்டனர்.

அன்று சுந்தா ஆராய்ச்சி சாலையிலிருந்து திரும்பினான். ஒரு கருத்தரங்கில் பங்கெடுக்க, காதரின் பம்பாய்க்குச் சென்றிருந்தாள். வீட்டில் நுழைந்த சுந்தாவுக்கு அதிர்ச்சி. தாத்தாவுக்கு நல்ல ஜுரம். சுந்தா தவித்து விட்டான். தலைவலி என்றுகூடப் படுக்க மாட்டாரே!

''என்ன இருந்தாலும் மன வேதனை ஆட்டி வைக்காமலா போய்விடும். சுந்தா இப்படிச் செய்துவிட்டானே என மனத்தோடு தவித்துத் தவித்துப்படுக்கையில்விழுந்துவிட்டார்!''

மற்றவர்கள் கூறியதைச் சுந்தா கேட்டுக் கொண்டுதான் இருந்தான். அவனுடைய மனமே அவனை வாட்டி எடுத்தது.

டாக்டர் வந்து பார்த்துவிட்டுப் போனார். நாட்கள் கழிந்தன. தாத்தா படுக்கையில்தான் இருந்தார். சுந்தா தவித்துப் போனான்.

தாத்தாவிடம் மூத்த இரு பேரன்களும் கூறினார்கள்: ''தாத்தா சுந்தாவிடம் இப்போதே நம் ஜாதி, குலத்தில் ஒரு பெண்ணை மணந்து, காதரினை மறந்துவிடுகிறேன்' என சத்தியம் செய்யும்படி வாக்குறுதி பெறுங்கள். நாம் பாரத மக்கள். விவாகத்தைப் புனிதமாகக் கருதுபவர்கள். நம் குடும்ப கௌரவம் நிலைக்கட்டும்.''

தாத்தா காதால் கேட்டுக் கொண்டார். ஆனால் அவரால் பேச முடியவில்லை.

''டே, சுந்தா, தாத்தாவின் மீது இன்னுமா உனக்கு இரக்கமில்லை? உன்னால் தானேடா இப்படிக் கிடக்கிறார். 'தாத்தா, நீ காட்டும் பெண்ணை மணக்கிறேன்' என வாக்குறுதி கொடடா'' — கோபு கடிந்து கொண்டான்.

சுந்தாவுக்கு வேர்த்துப்போயிற்று. தாத்தாவின் அருகில் போனான். அவனால் பேசவே முடியவில்லை.

நான்கைந்து நாட்களுக்கு அப்பால் விடியற்கால நேரம். தாத்தா கண்ணைத் திறந்து பார்த்தார். குடும்பத்தினர் அனைவரும் அங்குதான் இருந்தனர்.

''சுந்தா...'' அவர் மெள்ளக் கூப்பிட, சுந்தா அருகில் சென்றான்;

''என்ன தாத்தா? கொஞ்சம் ஹார்லிக்ஸ் தரட்டுமா?''

வேண்டாம் எனச் சைகை காட்டினார். பிறகு பேசினார்: ''சுந்தா... வாக்குறுதி ஒன்று அளிப்பாயா?''

சுந்தாவுக்குத் 'திக்'கென்றது. மற்றவர்கள் ஆவலோடு அவனைப் பார்த்தார்கள். அவன் சட்டென்று பதில் கூறவில்லை. காதரின் முகம் பளிச்சென்று முன் தோன்றியது. கண்களை மூடிக் கொண்டான். தாத்தாவின் அன்பு முகம் நின்றது.... ஓ, தாத்தாவுக்கு வாக்குறுதி அளித்துவிடத்தான் வேண்டும். காதரினைவிடத் தாத்தாதான் அவனை அதிகம் போற்றி வளர்த்தவர். அவன் வாக்குறுதி அளிப்பதால் அவர் ஆன்மா சாந்தியடையட்டும்.

''தாத்தா, வாக்குறுதி அளிக்கிறேன்'' என்று சுந்தா கூறினான்.

கூடியிருந்தோரின் மனத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது. தாத்தா பேரனின் கைகளைப் பிடித்துக் கொண்டார். ''ஒரே ஒரு வாக்குறுதி கொடு. 'மனைவியாக எடுத்துக் கொண்டு விட்ட காதரினை எக்காலத்திலும் நான் பிரிய மாட்டேன்.' இந்த வாக்கைச் சத்தியப் பிரமாணமாகச் செய்துகொடு.''

கூடியிருந்தோருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. ''தாத்தா, சுய நினைவோடுதான் பேசுகிறீர்களா?'' என்று மூத்த சகோதரர்கள் கூவ, ''டாக்டரை அழைத்து வாருங்கள், தாத்தா சுய நினைவை இழந்து விட்டார்'' என்றனர் சுமதியும் ரமாவும்.

சுந்தாவுக்குச் சந்தேகம். ஆசார சீலரான தாத்தாவா இப்படிப் பேசினார்?

சுந்தர் விதிர்விதிர்த்துத் தாத்தாவின் இரு கன்னங்களையும் பிடித்துக் கொண்டான். கண்களில் நீர். ''தாத்தா, சுய நினைவு இருக்கிறதல்லவா?''

''எனக்கு நினைவு தப்பவில்லை சுந்தா.''

''நம்ப ஜாதி என்ன, குலப் பண்பாடு என்ன...'' சுமதி ஆரம்பிக்கிறாள்.

''ஆமாம்மா. நம் ஜாதி, குல மேம்பாட்டை உணர்ந்தத்தான் இந்த வாக்குறுதி அவசியம். நாம் மேநாட்டவரைப் போல் நினைத்தபோதெல்லாம் நினைத்தபடியெல்லாம் விவாகம் செய்து கொள்கிறவர்களில்லை. சுந்தா தாத்தாவை ஏமாற்றிவிட்டான். தாத்தாவுக்குத் தவறு செய்து விட்டான். ஒரு பெண்ணிடம் திருட்டை நடத்தி விட்டான். அவன் செய்த தவறு, திருட்டின் பலனை அந்த அபலைப் பெண் அனுபவிக்கக் கூடாது. நாம் வணங்கும் ஸ்ரீராமன் ஏகபத்தினி விரதத்தைக் கைக்கொண்டதை நாங்களும் பின்பற்றுபவர்கள் என்பதை நம் குல, ஜாதி மேம்பாட்டை நாம் காட்டத்தான் வேண்டும். சுந்தா விஷயத்தில் பெண்ணின் ஜாதி குலத்தைக் காட்டிலும் அவனுக்கு அப் பெண் மனைவியாகி விட்டாள் என்பதைத்தான் முக்கியமாகக் கருத வேண்டும். ஒருகால் அப்பெண் மேநாட்டு வழக்கப்படி இவனை விட்டு விட்டு வேறு திருமணம் செய்து கொண்டாலும் சுந்தா அப்படிப் போகக் கூடாது. தனிக் கட்டை



''புதுத் தையல் மிஷின் வந்த நேரம்!.... எவ்வளவு புது எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்கி விட்டோம்!''

''சும்மாவா! புதுத் தையல் மிஷினில் நீ தைச்ச புதுச் சட்டைகளைப் போட்டல்லவா புது எவர்சில்வர் பாத்திரங்கள் வந்திருக்கு!''

யாகவும் காலம் தள்ள ஆண்டவன் அவனுக்கு வலிமை கொடுக்கட்டும்... இந்த வீட்டு அனுபவ பாத்தியதையை அப்பெண்ணுக்கு அளித்து விட்டு, சுந்தாவை இவ்வீட்டுக்குச் சொந்தக்காரனாக்கிவிட்டேன். சொத்தின் அனுபவ பாத்தியதை மூலமாவது அப்பெண் நம் மரபுப்படி 'ஒரே கணவன்' என்ற தத்துவத்தையும் சுந்தா ஏகபத்தினி விரதம் என்ற தத்துவத்தையும் பின்பற்றக் கூடும் என்பது என் நம்பிக்கை. ஆனால் அப்பெண் இதை மதிக்காமல் சுந்தாவை விட்டு விலகினால், அந்த அனுபவ பாத்தியதையை அவள் இழந்து விடுகிறாள்....''

தாத்தா சக்தி யெல்லாம் திரட்டிப் பேசி விட்டார். பேரனிடம் 'சுயநலத்தின் காரணமாக அபலைப் பெண்ணை வஞ்சிக்க மாட்டேன்' என்ற வாக்குறுதியையும் பெற்று விட்டார்.

சுற்றியுள்ளோர் பலப் பல விமரிசனங்களைச் செய்தார்கள். தாத்தாவுக்கு மூளை குழம்பி விட்டது என்பதுதான் அவர்கள் முடிவு.

சுந்தாவோ விக்கித்து விக்கித்து அழும் நிலையை அடைந்தான். குலத்தின் தத்துவத்தை உயர்த்திய சூட்டிலேயே தாத்தா பேரனின் மனச்சாட்சியை உலுப்பி விட்டு, 'நான் தாத்தாவுக்குத் தீங்கிழைத்து விட்டேன்' எனத் தவிக்கப் போகும் தண்டனையையும் அளித்து விட்டதைச் சுந்தா உணர்ந்தான்.

சூரியன் உதித்தபோது தாத்தா அஸ்தமித்து விட்டார்.




● 'அரை மணி நேரத்துக்கு மேலானாலும் அவமானம்' என்ற தலைப்பில் 1 முதல் 90 வரை எண்களைக் கண்டுபிடிக்குமாறு கூறப்பட்டிருந்தது. அதை நான் வரிசைக் கிரமமாக 15 நிமிடங்களில் கண்டு பிடித்து விட்டேன். ஜெயகுமார் 18 நிமிடங்களில் கண்டு பிடித்தால் அவனுக்கு இணையாகக் கண்டுபிடிக்க ஆள் இல்லை என்ற நினைப்போ?
திண்டுக்கல்,
31-7-69 — எஸ். ஜெயச்சந்திரன்

● பதினாறு நிமிடங்களே போதும்!
திருப்பத்தூர்,
31-7-69 — டி.வி. ராமசுப்பிரமணி

● ராமகிருஷ்ண மிஷன் பள்ளியில் படிக்கிறேன். பதினைந்து நிமிடங்களில் கண்டுபிடித்தேன். என் புகைப்படம் அனுப்பவா?
சென்னை-17,
1-8-69 — என். சுவாமிநாதன்

● என் அக்கா மகன் ஜானேந்து எட்டாம் வகுப்பு வாசிப்பவன். கண் பார்வை மிகவும் தெளிவு. கடிகாரத்தைச் சரி பார்த்துக் கொண்டு கட்டத்தில் பேனாவால் புள்ளி வைத்துக் கொண்டே வந்தான். சரியாக 12 நிமிடத்தில் கட்டத்தில் உள்ள 1 முதல் 90 வரை கண்டுபிடித்து விட்டான்.
திருக்கனூர்,
30-7-69 — இ. அபுல்கலாம்

● "திருப்புகழ் ராகவன்" என்ற ஒரு பக்கக் கட்டுரை மூலம், திரு ஆ. சு. ராகவன் அவர்களையும், அவருடைய திருப்புகழ் குழுவையும், கல்கி வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியதற்கு திரு சுப்புடு, தலைநகர்வாழ் தமிழ் மக்களின் நன்றிக்கு உரியவராகிறார். ஆனால் 'ஹார்மோனிஸ்ட்' திரு நாராயணனைப் பற்றி எழுதாமல் விட்டு விட்டார். இவர் ஹார்மோனிய வாத்தியத்தில் கைதேர்ந்தவர். தன்னடக்கம் நிறைந்தவர். தம் சங்கீத ஞானத்தினளவு பரந்த உள்ளமும் கொண்டவர். சென்ற ஆண்டு தென்னாட்டில் 'ஆறு படை வீடு' யாத்திரையில் எங்கள் குழுவில் இவரும் சேர்ந்து கொண்டார்.

இங்குள்ள மாதர்கள், தங்கள் தங்கள் காலனிகளில் வாரம் ஓரிரு முறை கூடி, அவர்களே அமைத்துக் கொண்ட எளிய நடையில் திருப்புகழ் பஜனைகள் செய்து, இங்கு எழ இருக்கும் உத்தரசுவாமி கோவிலுக்கு நிதி திரட்டி வருகிறார்கள். இதுவரை ரூ. 10,000 அளவு கொடுத்திருக்கிறார்கள். பெருமைக்குரிய விஷயம். ஆனால் இம் மாதர்கள் ஆங்காங்கே எங்கள் குழுவில் கலந்து கொள்கிறார்களே யன்றி, அவர்கள் எங்கள் குழுவின் அங்கத்தினர்கள் அல்லர்.
புதுதில்லி,
30-7-69 — நீ. சு. மணி

● குமாரி கமலினி நாகராஜன் அவர்களின் பரதநாட்டிய நிகழ்ச்சி பற்றிய விமரிசனம் கண்டோம். மக்கள் உள்ளத்தின் பிரதிபலிப்பாய் அது அமைந்திருந்தது. சென்னையில் குமாரி கமலினி நாகராஜனின் பரத நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்ற சபா எங்கள் சபாவான "மாம்பலம் ஆர்ட்ஸ் அகாடமி". இதுபோல் நல்ல நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து, கலைஞர்களை ஊக்குவிக்கும் சபாக்களின் பெயர்களை, கலை விமரிசனத்துடன் எழுதினால் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யும் சபாக்காரர்களுக்குப் பெருமையாக இருக்கும். சபாவின் வளர்ச்சிக்கும் அது பெரிதும் உதவியாக இருக்குமல்லவா?
சென்னை-33 — எம். ஆர். ராஜன்,
31-7-69 — எம். என். முரளீதரன்
மாம்பலம் ஆர்ட்ஸ் அகாடமி
செயற்குழு உறுப்பினர்கள்

● சூ. பிரான்சிஸ் எழுதிய 'பிராயச்சித்தம்' என்னும் சிறுகதை பற்றிச் சில வார்த்தைகள்:
தன் தவற்றுக்காக மனம் கசிந்து, வருந்தி ஒருவன் மன்னிப்புக் கேட்பானாகில், அவன் மன்னிக்கப்படுவான் என்பதுதான் கத்தோலிக்க மதத்தின் சம்பிரதாயம். அதற்கான பிராயச்சித்தமாகச் சில ஜபங்களைச் சொல்லவோ அல்லது ஒரு சந்தி, உபவாசம் போன்ற சில புலனடக்க முயற்சிகளை மேற்கொள்ளவோ கட்டளையிடுவார்களே தவிர, இறந்து போன பெண்ணின் பிணத்தருகே இரவு முழுவதும் இருந்து ஜெபம் செய்யச் சொன்னதாக எழுதியிருப்பது அதீத கற்பனை.
திருச்சி - 1
24-7-69 — எஸ். லெயோ ஜோஸப்

● அண்மையில் நான் கன்னியாகுமரிக்குச் சென்றபோது ஒரு பாறையின் பக்கத்தில் "பாறையில் ஏறுவது அபாயம்" என்று



பலகையில் எழுதியிருந்தது. ஆனால் ஆங்கிலத்தில் எழுதியது இப்படி இருந்தது: "Dangerous to clime the rock" இந்தப் பலகை வைத்துச் சுமார் இரண்டு வருடங்கள் ஆகின்றன. ஆனால் இன்னும் இதை "climb" என்று மாற்றவில்லை. ஆச்சரியமாக இருக்கிறது.
தேரூர்,
25-7-69 — எஸ். சதீஸ்

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**
**Managing Editor: T. Sadasivam**

# ஃபாஸ்ஃபோமின்

# சக்தியை அதிகரிக்கிறது.
# பசியைத் தூண்டுகிறது.
# வலிவைப் பெருக்குகிறது.
# நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்**

SQUIBB
Phosfomin
MULTIPLE GLYCEROPHOSPHATES B COMPLEX
VITAMINS ELIXIR

ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய,
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்குகளும்.
கரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 50 A /67 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon